## கதர் வாரம் – காந்தி ஜெயந்தி

# மஹாத்மா காந்திக்கு
## உகந்த நினைவு அஞ்சலி
# கதர் ஆடையே

## தூய கதராடை உடுத்தி
### மஹாத்மாவின் நினைவை வளர்ப்போம்

# நல்ல கதர்
### சென்னை அரசாங்க
# காதி
### விற்பனை நிலையங்களில் கிடைக்கும்

**சென்னை நகரில்**

86, பிராட்வே - - - சென்னை-1
22, தியாகராயா ரோடு, தியாகராயநகர்
3, பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி
60, வாலாஜா ரோடு, மவுண்ட் ரோடு
82, ராயப்பேட்டை ஹைரோடு, மயிலாப்பூர்
6, தாணுத் தெரு, புரசைவாக்கம்

*கீழ்க்கண்ட இடங்களிலும் விற்பனை நிலையங்கள் உள்ளன*

**கோவை, மதுரை, திருச்சி, கடலூர், திருநெல்வேலி, நாகர்கோவில், காரைக்குடி கும்பகோணம் உதகை, வேலூர், கோடைக்கானல், சேலம் தஞ்சை (ஏஜன்சி)**

*சென்னை அரசாங்க காதி இலாகா*

# கல்கி

## பொருளடக்கம்


**அரசியல்**

| | | | |
|---|---|---|---|
| இரண்டு உண்மைகள் | (தலையங்கம்) ... | ... | 5 |
| அலை யுரிமைப் பூச்சாண்டி! | ... | ... | 8 |
| நிகழ்ச்சிச்சித்திரம் | (கார்ட்டூன்) விஜி | ... | 11 |
| கதரும் காந்திமகானும் | ... | ... | 14 |

**கதைகள்**

| | | | |
|---|---|---|---|
| பாண்டிமாதேவி | நா. பார்த்தசாரதி | ... | 37 |
| செய்யாத குற்றம் | கோமதி சுப்பிரமணியம் | ... | 46 |
| மூன்று நண்பர்கள் | வாண்டு மாமா | ... | 59 |
| கலெக்டர் கலங்கினார் | ராபா | ... | 65 |
| பொங்கிவரும் பெருநிலவு | வி. ராஜேந்திரன் | ... | 77 |
| உயிர் விளையாட்டு | க. பஞ்சாபகேசன் | ... | 87 |
| பண்பும் பாசமும் | ஜெயமணி | ... | 94 |

**கட்டுரைகள்**

| | | | |
|---|---|---|---|
| முதல் சந்திப்பு | சுவாதி | ... | 17 |
| கிராமப் பொருளாதாரத்தில் கதர் | ரா. குருசாமி | ... | 19 |
| பக்தி வயல் | பௌராணிகர் | ... | 22 |
| வள்ளுவர் வாசகம் | ராஜாஜி | ... | 37 |
| செங்கோலும் ஜனநாயகமும் | க. சந்தானம் | ... | 39 |
| பெரிய கோயில்—மனமுள்ள மறுதாரம் | காந்தன் | ... | 43 |
| திருச்செங்கோடு காந்தி ஆசிரமம் | "காந்தி பக்தன்" | ... | 55 |
| தமிழ்நாடு உயர்ந்தது! | பரதன் | ... | 71 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.


மகிழ்வூட்டும்
மணத்திற்கு...
Remy
BORATED
TALCUM POWDER
Remy
SNOW
Remy
M.S.தமிழரசி
ரெமி ஸ்னோ & பவுடர்
AVRA 535
இலங்கையில் கிடைக்குமிடம் : AVRA Ltd., Colombo
ரேடியோ சிலோன் :—41.72 மீட்டரில் "இசை விருந்து"
வெள்ளிக்கிழமைதோறும் மாலை 6-30லிருந்து 6-45 வரை



மலர் 18
இதழ் 10

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

விளம்பி௵
புரட்டாசி 19௳

# இரண்டு உண்மைகள்

ராஜாஜி

மிகப் புனிதமான வாழ்க்கை வாழ்ந்து மறைந்த பெரியோர்களின் நினைவை, அவர்கள் பிறந்த தினத்தை வைத்துக் கொண்டாடுகிறோம். அதுவும் சிரத்தை காட்டும் சிராத்தமே யாகும். மறைந்த தினத்துக்குப் பதில் பிறந்த தினத்தை வைத்து நினைவுபடுத்திக் கொள்கிறோம். வேறு வித்தியாசமில்லை. காந்தியடிகள் விஷயத்தில் இரண்டு நாட்களையும் கொண்டாடி வருகிறோம். காந்தியடிகளைப் பற்றிப் பக்கம் பக்கமாக எழுதலாம். ஒவ்வொரு ஆண்டிலும் இப்படி எழுதித் தள்ளி விட்டு நம்முடைய கடமை தீர்ந்தது என்று எண்ணுவது சாத்துவிகமும் அல்ல; ராஜஸமும் அல்ல. தாமஸ குணத்தின் செயலாகும்.

இறந்த பெரியோர்களுக்குச் செய்ய வேண்டிய 'பிண்ட தானம்' அவர்கள் காட்டிய வழியில் நாம் நடந்து செல்வதே யாகும்.

சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் காந்தியடிகள் இரண்டு முக்கியமான தத்துவங்களைப் போதித்தார். தம்முடைய வாழ்க்கையையும் அந்த முறையில் நடத்தியே போதித்தார்.

அநியாயத்தை ஒப்புக் கொண்டு, பலவானுடைய அநீதிக்கு அடங்கிப் போவது பாவம்; அநீதியை ஒப்புக் கொள்ளாமல் எதிர்க்க வேண்டியது கடமை. அநீதியை எதிர்க்கும் வழி அநீதியை ஒப்புக் கொள்ளாமல், அதற்கு அடங்கிப் போகாமல் தைரியமாக நடந்து கொள்வதே யாகும். அதனால் விளையும் கஷ்டங்களைச் சந்தோஷமாக மேற்கொள்ள வேண்டும். இதற்குத் தான் ஒத்துழையாமை என்று பெயர்.

இரண்டாவது தத்துவம் காந்தியடிகள் சொல்லித் தந்தது என்னவென்றால், வாழ்க்கையைப் பல பாகங்களாகப் பிரித்து, ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல், நடத்திக் கொண்டு போவது தவறு. அரசியலுக்கும் தர்மத்துக்கும் சம்பந்தமில்லை என்றும் பொய்க்கும் மோசத்துக்கும் அரசியல் விவகாரங்களில் சந்தர்ப்பத்தை அனுசரித்து இடம் கொடுக்கலாம் என்றும் பலர் வாதிப்பது மடமை. வியாபாரத்திலும் அவ்வாறே சத்தியத்துக்கும் தர்மத்துக்கும் பூரண இடம் தர வேண்டும். வியாபாரத்தில் சத்தியம் தவாது என்றும், தர்மப் பிரசாரத்துக்கும் வியாபாரத்துக்கும் சம்பந்த ல்லை யென்றும் வியாபாரிகள் எண்ணுவது முற்றிலும் தவறு.

வாழ்க்கை முழுதும் சத்தியமும் தர்மமும் பழுதுபடாமல் எல்லாவித வகாரங்களும் நடைபெற வேண்டும். இல்லாவிடில் வாழ்க்கையில் தோல்வி டவோம். சத்தியமும் தர்மமும் புறக்கணித்த அரசியலாவது வியாபார வது வெற்றி யடையாது.

இந்த உண்மைகளை காந்தியடிகள் போதித்தார். எக்காலத்திலும் தவும்படியான உபதேசங்கள்.

# ஜெயந்தி வாரம்

இது காந்தி பிறந்த வாரம். காந்தி ஜெயந்தி வாரம் என்று கொண்டாடிய வாரத்தை "ஜெயந்தி வாரம்" என்று கொண்டாடுங்கள். கதர் பிறந்த ஜெயந்தி வாரமாகக் கொண்டாடுங்கள் என்று காந்தியடிகள் ஆணையிட்டார். அதன் பிறகு அப்படியே கொண்டாடப்பட்டு வருகிறது.

* * *

சுதந்திரம் பெற்றுப் பத்து ஆண்டுகளாகி விட்டன. மக்களுக்குச் சுபிட்ச வாழ்க்கை நல்க வேண்டுமென்று முதல் ஐந்தாண்டுத் திட்டம்; இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் என்று திட்டங்கள் வகுத்துப் பல கோடி ரூபாய்கள் செலவழித்து விட்டோம். ஆயினும், அவை யொன்றும், யாரை உத்தேசித்துச் செலவழிக்கப்பட்டனவோ, அவர்களுக்கு ஒருவித பயனும் அளித்துவிட வில்லை. அவர்கள் அன்றிருந்த நிலையிலேயே தான் இருக்கிறார்கள்.

ஆனால் நாம் அடிமையுற்றிருந்த நாட்களில் காந்தி மகான், உண்ணப் போதிய உணவின்றி, வேலையின்றிச் சோம்பிக் கிடக்கும் கோடிக்கணக்கான பாமர மக்களின் நலனைக் கருதிக் கதர் இயக்கத்தைத் தொடங்கினார். கிராம மக்களுக்கு வேலையும் கொடுத்தாற் போலாயிற்று; ஊதியமும் கொடுத்தாற் போலாயிற்று என்று இந்தக் கதர் இயக்கத்தை ஆரம்பித்தார்.

காந்தி மகான் கதர் இயக்கம் ஆரம்பித்ததிலிருந்து கிராமங்களிலுள்ள ஏழை மக்களின் இல்லங்களில் சற்று ஒளிவீசத் தொடங்கியது. நாட்டு மக்களும் மொரமொரவென்று சாக்குப் போலிருந்த கதர்த் துணியை அணிந்து அகமகிழ்ந்தார்கள். மகத்தான தேசத்தொண்டு புரிந்து விட்டதாக உள்ளம் பூரித்தார்கள். காந்தி மகானின் ஆசியில் உயிர் பெற்ற கதர் தேசபக்திக்கும் தெய்வ பக்திக்கும் உரிய அடையாளமாயிற்று.

கதர் அணிந்தவர்கள், தெய்வபக்தி தேச பக்தி கொண்டவர்கள் என்பதோடு, சத்தியத்தின் காவலர்; நேர்மையின் இருப்பிடம் என்று மக்கள் நினைக்கும் அளவுக்குப் புனிதப் புருஷர்களாக்கி விட்டார் காந்தி மகான். ஏன், கதர்ச் சட்டை அணிந்தாலே மிக யோக்யன் என்று மக்கள் நினைத்து மதிக்கும் அளவுக்கு உயர்த்தி விட்டார்.

இன்றும் காங்கிரஸ்காரர்கள் கதர் ஆடைதான் உடுத்தி வருகிறார்கள். ஆனால் அந்த உடைக்கு முன்பிருந்த மதிப்பும் மரியாதையும் இல்லை. கதராடையை அணிந்தவரைக் கண்டால் காங்கிரஸ் அடைந்து விட்ட இகழ்ச்சியை யெல்லாம் எடுத்துச் சொல்கிறார்கள்.

இதனால் முன்பெல்லாம் கதர் அணிந்து காந்திய வழியில் வாழ்ந்து வந்த மக்கள் இன்றும் முன்னளவு தைரியமாகக் கதர்த் துணி அணியக் கூச்சப்படுகிறார்கள். காங்கிரஸ் கட்சியில் சுயநலக்காரர்கள், வேஷதாரிகள் எல்லாரும் சேர்ந்து கதர் அணியத் துணிந்து விட்டார்கள் என்கிற அபவாதத்தின் பயனாக நல்லவர்கள்கூட கதர் அணியக் கூச்சப்படுகிறார்கள்!

என்றாலும் இன்றும் கதர்த் திட்டம் வருஷத்தில் மூன்று, நான்கு மாதங்கள் வயலில் வேலை செய்து விட்டு, பாக்கி எட்டு மாதங்கள் சோம்பிக் கிடக்கும் சில கிராம மக்களுக்கு உதவி வருகிறது. கையினால் நூல் நூற்று, நூலைக் கையினால் நெசவு செய்த கதராடையே இன்றும் சில கிராம மக்களுக்கு வரப்பிரசாதமாக இருக்கிறது. கோடிக்கணக்கில் ரூபாய் செலவு செய்து பயன் விளைக்காத திட்டங்களைவிட, இந்தக் கதர்த் திட்டம் நமது நாட்டு ஏழை எளிய மக்களுக்கு உடனடியாகச் சோறு போடுகிறது.

சமீபத்தில் நமது திட்டங்களைப் பற்றியும் அந்நியக் கடன்களைப் பற்றியும் நாட்டிலுள்ள பொருளாதார நிபுணர்கள் நிகழ்த்திய ஆராய்ச்சியைக் கல்கி இதழ்களில் நேயர்கள் வாசித்திருப்பார்கள். அவர்கள் கண்ட முடிவு என்ன? மேல் நாட்டிலிருந்து பொருள்களை இறக்குமதி செய்வதைக் கூடியவரை குறைக்க வேண்டும். நமது நாட்டில் ஆலைகளில் உற்பத்தியாகும் உயர்தரத் துணிகளை மேல் நாட்டுக்கு ஏற்றுமதி செய்ய வேண்டும். உள்நாட்டில் விற்கக் கூடாது. உள்நாட்டில் கொஞ்சம் தரம் குறைந்த துணியாயினும், மொரமொரப்பான துணியாயினும் மக்கள் அணிந்து அந்நிய மூலதனத்தைச் சேமிக்க வேண்டும். அதாவது **கதர்த் துணியை எல்லோரும் அணிய வேண்டும்** என்பதே அவர்கள் முடிவாகக் கண்ட முடிவு. இதுதான் இன்றைய பொருளாதாரச் சிக்கலிலிருந்து நமது நாட்டைக் காப்பாற்றக் கூடியது என்ற முடிவுக்கு வந்திருக்கிறார்கள்.

இனி கதர் என்பது ஒரு கட்சியைக் குறிக்கும் துணி என்பதல்ல; கதர் என்பது 'நான் ஒரு இந்தியன்' என்பதை அறிவிக்கும் அடையாளமாகி விட்டது. ஆதலால், காங்கிரஸ், கம்யூனிஸ்ட், தமிழரசு, பி. சோ. ஜனசங், தி. க.; தி. மு. க. ஆகிய எல்லா அரசியல் கட்சிக்காரர்களும் தீவிரப் பிரசாரம் செய்து இந்திய மக்களைக் கதராடை அணியச் செய்ய வேண்டிய காலம் வந்துள்ளது! பாரத மக்கள் அனைவரும் கதராடை அணியத் தொடங்கி விட்டால் நாட்டில் நெசவாளிப் பிரச்னை; வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்னை யெல்லாம் குறையும். நமது திட்டங்களின் லட்சியமாகிய 'எல்லாருக்கும் வேலை வாய்ப்பு கொடுப்பது' என்பதில் இந்த விஸ்தரித்த கதர் இயக்கத்தைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

நமது சென்னை சர்க்கார் கதர்ப் பிரசார இயக்கத்தில் தீவிரப் பங்கெடுத்துக் கொண்டு நல்ல பணி புரிந்து வருகிறார்கள். ஒரு புள்ளி விவரங்களே அவர்கள் எவ்வளவு நற்பணி புரிந்து வருகிறார்கள் என்பதை தெளிவாக்கும்.

1947 - 48 ஆண்டில் நம் ராஜ்யத் 2,42,334 ரூபாய்க்குக் கதர் விற்கப்பட்ட 1957—58-ல் கதர் விற்பனை 55,06

ரூபாய்க்கு மேல் போய் விட்டது என்றால் கதர் எவ்வளவு வேகமாகப் பரவி வருகிறது என்பது தெரியும்.

தக்க பிரசாரம் இருந்தால் கதர் இன்னும் வேகமாகப் பரவும் என்பது நிச்சயம். இதை முன்னிட்டு, சென்னை காதி இலாகா, கதர் விற்பனை இல்லங்களைப் பல ஊர்களில் திறந்து வருகிறார்கள். சமீப காலத்தில் சென்னையின் பல பகுதிகளில் திறந்து வைத்தார்கள். அதுமட்டுமின்றி, கதர்த் துணிகளில் பல ரகங்களாக, பல வர்ணச் சேர்க்கைகளாக, பொது மக்களின் ருசியை உணர்ந்து தயாரிக்க ஒரு தனி இலாகாவையே ஆரம்பித்திருக்கிறார்கள்.

கதர் என்றால் முன்னளவு தடிமனாக இப்பொழுது இல்லை. மிக உயர்தரமான மெல்லிய ஆடைகள் கதரில் கிடைக்கின்றன. இவையெல்லாவற்றையும் விட, கதர் விலை அதிகமாக இருக்கிறதே என்று சிலர் வாதம் செய்யக் கூடும்.

நாலு ரூபாய் கொடுத்து ஒரு கதராடை வாங்கினால், அந்தப் பணம் முழுதும் பரம ஏழைகளுக்குப் போய்ச் சேருகிறது. இது ஒரு தருமப் பணியாகும். வெறும் துணியை வாங்குவது மட்டுமல்ல கதர் வாங்குவது. ஏழை எளிய மக்கள் வாழ்வை உயர்த்தும் ஒரு புண்ணிய காரியத்துக்கு உதவுகிறோம் என்பதை மனத்தில் கொண்டு கதராடையே வாங்கி உடுத்த வேண்டும்.

தீபாவளி வருகிறது. அதைக் கூடியமட்டும் கதர்த் தீபாவளி ஆக்கிவிடத் தீர்மானித்துக் கொள்ளுங்கள்.

காந்தி மகான் பிறந்த திருநாளில் இத்தகைய ஒரு உறுதி பூண்டால் அவர் ஆத்மா எவ்வளவோ மகிழ்ச்சியடையும்.

வாழ்க கதர்! வாழ்க காந்தி!

# சீனக் கடல் விவாதம்

பலாத்காரத்துக்கு அடங்கலாகாது என்று டல்லஸ் வாதிக்கிறார். அதாவது சீனாவின் பலாத்காரத்துக்கு அடங்கிப் போய் சியாங்கே ஷேக்கை விட்டுவிடலாகாது என்பது அவருடைய கருத்து.

அதே போல் 'பலாத்காரத்துக்கு அடங்கிப் போகலாகாது. அமெரிக்க பலாத்காரத்தைக்கண்டு நம்முடைய உரிமையைக்கைவிட்டு விடலாகாது" என்று சீனத் தலைவர்கள் குமாய், மாட்சு முதலிய தீவுகளைப் பற்றி அதே வாதத்தைக் கூறுகிறார்கள். சியாங்கே ஷேக்குக்கு அமெரிக்க ராணுவ ஆதரவு இல்லையேல், ஒரு மாதம்கூட அவருடைய எதிர்ப்பு நின்றிருக்காது. இன்றைக்குப் பல ஆண்டுக



னுக்கு முன்னமேயே பார்மோஸா உள்படச் சீனக் கடல் தீவுகள் அனைத்தும் பீகிங் ஆட்சிக்கு உட்பட்டுப் போயிருக்கும். பலாத்காரம் என்பது, சீன பலாத்காரத்துக்கு மட்டும் பெயரல்ல. அமெரிக்க பலாத்காரமும் அதில் அடங்கும். அமெரிக்க ராணுவ பலத்தைக் கொண்டுதான் சீனுவுக்குச் சேர வேண்டிய இந்தத் தீவுகள் இது வரையில் பிரிந்து நிற்கின்றன என்பதை யார் அறியார்? அந்நிய நாட்டுப் பலாத்காரத்தைக் கொண்டு தனித்து நிற்கும் இந்தத் தீவுகளைச் சீனராஜ்யம் ஏன் விட்டுவிட வேண்டும்?

இருதரப்பிலும் பலாத்காரத்தை ஒழித்து விட்டால் இந்தப் பிரதேசங்கள் தாமாகச் சீனுவைச் சேர்ந்து விடும். உலக சமாதானத்துக்கு ஒரு பெரிய அபாயம் தீர்ந்து போகும்.

ரூயஸ்விஷயத்தில் பிரிட்டனுக்கு நடந்ததே, தற்போது அமெரிக்கா சீனக் கடலில் ஆரம்பித்த திருவிளையாடலுக்கும் நடைபெறும் போல் நற்சகுனங்கள் காணப்படுகின்றன.

# அவை யுரிமைப் பூச்சாண்டி!

கல்கியில் "ஜில்லாப் பிரிவினை" யோசனையைப் பற்றி எழுதப்பட்டிருந்த கட்டுரை, சட்டசபையின் கௌரவ உரிமைக்குக் குறைவு இழைத்ததாகும் என்ற கேள்வி சட்டசபையில் எழுந்து, சபைத் தலைவர் அதைத் தள்ளி விட்டது வாசகர்களுக்கு நினைவிருக்கும். இப்போது, கேரள விஷயத்தைப் பற்றி, அதேவிதமான பொருளற்ற பிரச்னையை மஸானி அவர்கள் எழுப்பினர். டில்லி மக்கள் சபையில் கேரள அரசாட்சியைப் பற்றிக் கூறப்பட்ட கூற்றுகள் "அவதூறு" என்று கேரள முதன் மந்திரி சொன்னாராம். தம்முடைய ஆட்சியின் பேரில் செய்யப்பட்ட குற்றச்சாட்டுக்கு இவ்வாறு தற்காப்பு முறையில் பதில் சொல்ல அவருக்கு உரிமையுண்டு. அப்படிச் சொன்னதே குற்றமென்றும், சட்டசபையின் கௌரவ உரிமைக்கு ஹானி இழைத்ததாகும் என்றும் ஸ்ரீ மஸானி மக்கள் சபைத் தலைவருக்கு விண்ணப்பித்தார். பிறருடைய தற்காப்பு உரிமைகளை அழிக்கும் ஒரு உரிமையைச் சட்டசபை அங்கத்தினர்கள் கோருவது விநோதம். யாரைப் பற்றியும் தாம் குறை சொல்லிச் சட்டசபையில் தூற்றலாம் என்றும், அது பொய் என்று சொன்னால் சட்டசபை கௌரவத்தை எதிர்த்ததாகும் என்றும் ஆட்சேபிப்பது எதேச்சாதிகாரத்தில் முடியும். நீதி மன்றங்களில் நியாயத்தைத் தேடுவதற்குப் பதில் இந்தச் சோளக்காட்டுப்



பொம்மை பூச்சாண்டியைக் காட்டித் தாமே தீர்ப்பு சொல்வதற்கு வழி தேடுகிறார்கள்.

இப்படியெல்லாம் செய்வது கேரள கம்யூனிஸ்ட் கட்சிக்கு மக்களிடையே அனுதாபம் வளரச் செய்வதாகும்!

மக்கள் நலத்துக்காகக் காக்கப்பட வேண்டிய உரிமைகள் பல. தகப்பன் உரிமையும் உண்டு; குழந்தைகளின் உரிமையும் உண்டு. புருஷன் உரிமையும் உண்டு; மனைவியின் உரிமையும் உண்டு. இப்படியே எல்லா விஷயங்களிலும் இரு பாலாருக்கும் உரிமை உண்டு. சட்டசபைகளுக்கு உரிமைகளுண்டு; மக்களுக்கும் உண்டு. சட்டசபைகளில் நடைபெறும் பேச்சுக்களையும் விவாதங்களையும் ஆராய்ந்து அபிப்பிராயம் வெளியிட. இவ்வாறு பரஸ்பரம் எதிர்த்து நிற்கும் பல உண்மைகளுக் கிடையில் அனைத்துக்கும் மேலான ஒரு உரிமை காக்கப்பட வேண்டியது அவசியம். அதாவது நியாயமும் உண்மையும் காணுவதற்கு இன்றியமையாத பேச்சுரிமை. வாய்ப்பூட்டுகள் உண்மைக்கு எப்போதும் அபாயம். நியாயம் வெற்றி பெற்று அநியாயம் தோல்வியடைவதற்கு வெகு முக்கியமான சாதனம் பேச்சுரிமை. ஒரு உரிமையைக் காப்பாற்ற அதற்கும் மேலான ஒரு உரிமையைக் கொலை செய்யலாகாது. உரிமைக்குக் குறை ஏற்பட்டது என்று குற்றம் சாட்டுபவர்களே தீர்ப்பும் அளிப்பவர்கள் என்று இருக்கும் நிலைமையில் மிக ஆழ்ந்து ஆராய்ந்தே காரியத்தில் புக வேண்டும். கோபத்திலும் வேகத்திலும் நிர்மாணித்தால் அநியாயமும் அநீதியும் நிகழும்.

# கேரள நிர்வாகம்

கேரளத்தில் கம்யூனிஸ்ட் ஆட்சி நடைபெறுவது, இந்திய காங்கிரஸுக்குப் புண்ணைக் குத்துகிறது. கேரள காங்கிரஸ்காரர்களுக்கு இது ஒரு தீராத துக்கமாக இருந்து வருகிறது. எப்படியாவது ஜனாதிபதி ஆட்சியை அங்கே ஏற்படுத்திவிட வேண்டும் என்று கேரளத்திலும் தில்லியிலிருக்கும் கேரளவாசிகளிடையிலும் காங்கிரஸைச் சேர்ந்தவர்கள் ஆசைப்பட்டு வருகிறார்கள். குற்றச்சாட்டுக்கு மேல் குற்றச்சாட்டு போட்டு வருகிறார்கள்.

கேரளத்திலோ, கம்யூனிஸ்ட் ஆட்சிக்கு நல்ல பெயர் திரண்டிருக்கிறது. 'அப்படியில்லை; மக்களுக்குக் கம்யூனிஸ்ட் ஆட்சியைப் பற்றி மிக அதிருப்தி' என்று காங்கிரஸ்காரர்கள் வாதாடுகிறார்கள். இப்படி



வாதாடுவதிலும் காற்று மூட்டைகள் கிளப்புவதிலும் பயனில்லை. உபதேர்தல்களில் வெற்றி பெற்றுத்தான் ருசுப்படுத்த வேண்டும். ஒரு ராஜ்யத்தில் நிலைமை அதிகமாகக் கெட்டுப் போனால் அங்கே ஜனாதிபதி நிர்வாகம் நிறுவும்படி உத்தரவிட மத்திய ஆட்சிக்கு அதிகாரமுண்டு. மத்திய ஆட்சியும் அத்தகைய ராஜ்யத்தில் பதவியிலிருக்கும் மந்திரிகளும் ஒரே காங்கிரஸ் கட்சியினராக இருப்பின் இவ்வாறு மத்திய ஆட்சி உத்தரவு பிறப்பிப்பது நியாயமாகும். நாம் விரும்பாத கம்யூனிஸ்ட் நிர்வாகத்தை இப்படிச் செய்தால் அது பட்சபாதம் என்று மக்கள் நிச்சயமாக எண்ணுவார்கள். அப்படியெண்ணுவதற்கு இடம் கொடுக்காமல் நியாயமான முறையில் நிர்வாகத்தை மாற்ற விரும்பினால் குற்றச்சாட்டுகளை மதிப்புக்குரிய நீதிபதிகள் அடங்கிய கமிட்டி யனுப்பி விசாரணை செய்வித்து, அந்தத் தீர்மானத்தின் ஆதரவைக் கொண்டு மேல் நடவடிக்கை யெடுத்து, ஜனாதிபதி அதிகாரத்தைச் செலுத்துவதே கௌரவமான முறையாகும். ஒரே கட்சியைச் சேர்ந்த சிக்கலுக்கும், விரோதக் கட்சியின் உரிமையைப் பறிக்கும் தகராறுக்கும் அதிக வித்தியாசம். அதைக் கவனித்துத்தான் மத்திய சர்க்கார் காரியம் நடத்த வேண்டும்.

# கம்பெனிகளும் கட்சி நிதியும்

**கொ**ழுத்த வியாபாரக் கம்பெனிகளிடம் அரசியல் கட்சிகள் நிதி உதவி பெறுவது கூடாது என்று ஒரு சட்ட மசோதா டில்லி சட்டசபையில் கொண்டு வரப்பட்டது. அது இன்னும் முடிவாகவில்லை. இதைப் பற்றிக் காங்கிரஸ்காரர்கள் வாதிப்பது என்னவென்றால் ''எல்லாக் கட்சிகளுக்கும் அந்த உரிமையுண்டே. தத்தம் விருப்பத்துக்கு இசையக் கம்பெனிகள் நிதி உதவி செய்வதில் என்ன தவறு?'' என்கிறார்கள். இந்த வாதம், பார்வைக்கு லட்சணமாக இருந்தாலும் உண்மையில் நியாயமாகாது. பணம் கொழுத்த கம்பெனிகள் நிர்வாகத்திலிருக்கும் கட்சிக்குத்தான் நிதி தானமாகச் செய்து லாபமடையப் பார்ப்பார்கள். மத்திய ஆட்சியிலும் பிரதேச, ஆட்சியிலும் நிர்வாகம் செய்து வரும் காங்கிரஸ் கட்சிக்குத்தான் தாராளமாகப் பணம் தருவார்கள். வியாபாரிகளுடைய விருப்பம் லாபத்தைப் பொருத்த விருப்பம். தானமாகக் கொடுப்பது லஞ்சத்துக்குத்தான் சமம். தற்போதைய நிர்வாகத்தில் வியாபாரிகளின் செண்டு சர்க்கார் கையில் சிக்கியிருக்கிறது. இதை மறந்துவிட்டு, மூடி மறைத்து வாதம் செய்வது மோசம்.

**வேலொடு நின்றான்**
**இடுஎன்றது போலும்**
**கோலொடு நின்றான் இரவு !**

அதிகாரம் படைத்தவர்களுக்குக் கொடுக்கும் தானம், அதிகாரத்தைக் கண்டு பயந்து கொடுத்ததேயாகும் என்று குருனாசிரியர் முன்னமேயே சொல்லிவிட்டார் !




கிழக்கு பாகிஸ்தான் சட்டசபையில் நிகழ்ந்த குழப்பம் காரணமாக உதவி சபாநாயகர் உயிர் இழந்தார்.
ஜனநாயகம்
அராஜகம்


இந்தியா, பூடான் தேசத்துக்கு நிதி உதவி அளிக்கத் தயாராக இருப்பதாகப் பிரதமர் நேரு அறிவித்திருக்கிறார்.
அந்நிய உதவி
பூடான்


திரு வி.கே. கிருஷ்ணமேனன் பார்மோஸா விஷயத்தில் அமெரிக்காவுக்கும் சீனாவுக்குமிடையில் உடன்பாடு காண முயன்று வருகிறார்.
வி.கே. கிருஷ்ணமேனன்
அமெரிக்கா

# அருள் வாக்கு

பெற்ற உதவிக்கு நன்றி செலுத்துவது ஒரு சிறந்த குணம். கார்ப்பொரேஷனுக்கும் அரசாங்கத்துக்கும் கொடுக்கப்படும் வரிகள் இது போன்றனவே. அவை சமூகத்துக்குச் செய்யும் சேவைகளுக்காக நாம் நன்றி செலுத்துவதுதான் வரி. இவற்றைப் போலவே மக்களுக்கு நன்மை செய்யக் கண்ணுக்குப் புலப்படாத சில அதிகார ஸ்தானங்கள் இருக்கின்றன. அந்த அதிகார ஸ்தானங்களுக்கும் (Agencies) வேதத்தில் விதித்துள்ளபடி நமது நன்றியைத் தெரிவிக்க வேண்டும். இப்படிச் செய்வதுதான் யக்ஞம் என்பது.

இன்றைய பாரத சமுதாய அமைப்பில் பள்ளிக்கூடங்கள், ஆஸ்பத்திரிகள், பாங்குகள் போன்ற சமூகஸ்தாபனங்கள் அவசியமாக இருந்தாலும் அவற்றின் நோக்கங்கள் பூரணமாக நிறைவேறுகிறதில்லை. ஆண்டவன் அருளில் அசையாத நம்பிக்கை வைத்துச் சகிப்புச் சக்தியைப் பெறுவதே மாந்தர்களுக்குத் துயர் தீர்க்கும் அருள் மருந்தாகும். பக்தி ஒன்றுதான் அந்தக் கஷ்டங்களையெல்லாம் சகித்துக் கொள்ளக்கூடிய சக்தியைக் கொடுக்கும். அந்தப் பக்தியை வளர்க்கும் ஏஜென்ஸிகள் ஆலயங்கள். இதற்காகத்தான் எல்லா இடங்களிலும் ஆலயங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

இவ்வுலகத்தில் கிடைத்தற்கரிது என்று கருதப்படுபவை மூன்று - மனிதனாகப் பிறப்பது; மோக்ஷம் கிட்ட வேண்டுமென்ற தீவிரமான ஆசை உண்டாவது; சாதுக்களுக்கும் மகான்களுக்கும் சேவை செய்யும் வாய்ப்பு. ஆண்டவனுடைய அருள் இல்லாமல் இவை கிடைப்பதில்லை. இவற்றில் ஏதாவது ஒன்று கிடைத்தாலே அதிருஷ்டம் என்று கருத வேண்டும். அதற்கே பகவானுக்கு நன்றி செலுத்த வேண்டும். அதற்காகவாவது தேவாலயங்களுக்குச் சென்று ஆண்டவனை வழிபட வேண்டும்.

மனிதனால் ஒரு புல்லைக்கூட சிருஷ்டி செய்ய முடியாது. எனவே நாம் உட்கொள்ளுவதை அல்லது அணிவதை ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்யாமலிருப்பது நன்றி கெட்ட செயலாகும். சிறந்தவற்றைத்தான் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும். எல்லோருமே வீட்டில் பூஜை செய்து ஈச்வரனுக்கு அர்ப்பணம் செய்ய முடியாது. அதற்குத்தான் ஆலயங்கள் உள்ளன.

தேவாலயங்களுக்கு நாம் தினமும் போகவேண்டுமா, வேண்டாமா என்ற சந்தேகம் பல பேர்களுக்கு உண்டாகலாம். போக வேண்டியது மிகவும் அவசியம். முன் காலங்களில் இப்பழக்கம் மிகக் கண்டிப்புடன் அனுசரிக்கப்பட்டு வந்தது. உச்சிகால மணியோ, அர்த்த ஜாம மணியோ கேட்ட பிறகே பகல் சாப்பாட்டுக்கோ இரவு சாப்பாட்டுக்கோ போவது வழக்கமாகக் கூட இருந்தது. ஈச்வரனுக்கு நிவேதனங்கள் சரியாக நடக்க வேண்டும். நாம் ஒருவரும் கோயிலுக்குப் போகவில்லையானால் அங்கே ஒன்றுமே சரிவர நடைபெறாது. சரிவர பூஜை நைவேத்யங்கள் எல்லாம் நடந்து வருகின்றன என்று தெரிந்தால் கோவிலுக்குப் போகவேண்டிய அவசியம் இருக்காது. நான் கோவிலுக்குப் போகிறேன் என்றால், எனக்காகவாவது கோயிலைச் சுத்தமாக வைக்கிறார்கள். இதற்காகவாவது கோயிலுக்குப் போக வேண்டியிருக்கிறது.

நம் ஊரில் இருக்கும் கோயிலில் பூஜை சரிவரச் செய்கிறார்களா என்று கவனிக்க வேண்டியது நமது கடமை. மிகவும் சூக்ஷ்மமான தர்மங்களையெல்லாம் நாம் இப்போது மறந்து விட்டோம். ஈச்வரனுக்கு அழுக்குத் துணி உடுத்தக் கூடாது. சுத்தமான துணியாக இருக்கிறதா என்று கவனித்துப் பார்த்தால் போதும். நமது மனம் கூட அழுக்கில்லாமல் ஆகிவிடும். இப்போது ஒவ்வொரு ஊரிலும் மிகுந்த அழுக்கடைந்த துணி உடுத்திக் கொண்டிருக்கிறவர்கள் யார் என்று பார்த்தால் கோவிலில் இருக்கும் ஸ்வாமிதான். இந்த ஒரு தர்மத்தையாவது செய்தால், நல்ல தூய ஆடையை ஈச்வரனுக்குச் சாத்தும்படியாகச் செய்தால், மிகவும் விசேஷம். இது ஒரு சூக்ஷ்மமான தர்மம். ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்பது ஔவை வாக்கு. ஆலயம் தொழு, அரனை மறவேல், திருமாலுக்கு அடிமை செய். ஒவ்வொன்றும் நாம் செய்ய வேண்டிய கடமையைத்தான் நினைவுறுத்துகிறது. வாரத்தில் ஒரு நாளாவது ஆலயத்தைத் தொழுவது என்று வைத்துக் கொண்டால் நமக்குச் சாசுவதமான நன்மைகள் உண்டாகும்.

ஸ்ரீ சங்கராச்சாரியார் ❖ காஞ்சி காமகோடி பீடம் ❖

# கதரும் காந்திமகானும்

'மில் துணியையும் மில் நூலையும் அகற்றி அவைகளுக்குப் பதிலாகக் கையால் நெய்த துணியைப் புகுத்த நான் முயலுதல் நாட்டின் முன்னேற்றத்தைத் தடுத்து அதைப் பிற்போக்கடையச் செய்வதாகும்' என்று லீடர் பத்திரிகை கருதுகிறது. நான் அத்தகைய முயற்சி எதுவும் செய்யவே இல்லை. எனக்கு ஆலைகளிடம் சண்டை எதுவும் கிடையாது. என்னுடைய கருத்துக்கள் நம்ப முடியாத 'அளவுக்குச் சுளுவானவை. இந்தியாவுக்குத் தேவையாயிருப்பது பிரதி மனிதனுக்கும் ஒரு வருஷத்தில் சராசரி சுமார் 13 கெஜம் துணியாகும். இதில் பாதிக்கும் குறைவாகவே இப்பொழுது இந் நாட்டில் உற்பத்தியாகிறதென்று நான் நம்புகிறேன். நமக்குத் தேவையான நூலையும் துணியையும் கைராட்டையிலும், கைத் தறியிலும் நாமே தயாரித்துக் கொள்ள முடியுமாயினும், நாம் எத்தனையோ கோடி பேல் பருத்தியை ஜப்பானுக்கும், லங்காஷயருக்கும் ஏற்றுமதி செய்து விட்டு அதில் பெரும் பகுதியை காலிகோ துணியாகத் திரும்ப வாங்கிக் கொள்ளுகிறோம். தன் முக்கிய தொழிலான விவசாயத்துக்கு ஒரு உதவித் தொழில் இந்தியாவுக்கு மிகவும் தேவை. கை நூற்பு ஒன்றே கோடிக் கணக்கான மக்களுக்கு அத்தகைய தொழிலாக உதவும்.

— காந்திஜீ (18—8—1920)

"சுதேசிக்கு நான் கூறும் விளக்கம் யாவரும் அறிந்ததே. என் அண்டையில் உள்ளவனுக்கு நஷ்டமுண்டாக்கி விட்டுத் தொலைவிலுள்ளவனுக்கு நான் உதவக் கூடாது. அதில் பழிக்குப் பழி வாங்கும் நோக்கமோ, தண்டிக்கும் கருத்தோ என்றும் இருப்பதற்கில்லை. என் வளர்ச்சிக்குத் தேவையானவைகளை நான் உலகத்தின் எந்தப் பகுதியிலிருந்தும் வாங்கிக் கொள்ளுவதால் அதை எவ்வகையிலும் குறுகிய நோக்கம் என்று சொல்ல முடியாது. ஒரு பொருள் எவ்வளவுதான் நேர்த்தியாகவும், கண்ணுக்கு அழகாகவும் இருந்தபோதிலும்என்வளர்ச்சியைத் தடுப்பதாகவோ நான் முதற் கடமையாகப் பராமரிக்க வேண்டியவர்களுக்குத் தீங்கு இழைப்பதாகவோ இருக்குமானல் நான் அதை யார் தந்தாலும் வாங்கிக் கொள்ள மறுப்பேன். உலகத்தின் ஒவ்வொரு பகுதியிலிருந்தும் எனக்கு உபயோகமான நன்மை தரும் நூல்களை வாங்கிப் படிக்கிறேன். நான் சஸ்திர சிகித்சைக்குத் தேவையான கருவிகளை இங்கிலாந்திலிருந்தும், குண்டூசிகளையும் பென்சில்களையும், ஆஸ்திரியாவிலிருந்தும், கைக் கடிகாரங்களை ஸ்விட்ஜர்லாந்திலிருந்தும் வாங்குகிறேன். இந்தியாவின் கோடானு கோடி மக்களுக்குத் தீங்கிழைத்ததோடு இப்பொழுதும் வர வர அதிகமாகஇழைத்துவருவதால் நான் இங்கிலாந்திலிருந்தோ, ஜப்பானிலிருந்தோ, உலகத்தின் வேறு எந்தப் பகுதியிலிருந்தோ ஒரு அங்குலம் கூட மிகவும் சிறந்த ஆடை வாங்க மாட்டேன். இந்தியாவின் கோடிக்கணக்கான ஏழை எளியோர் நூற்று நெய்ததை வாங்க மறுத்து, இந்தியாவில் கையால் தயாரான துணியை விட உயர்ந்ததாயிருந்த போதிலும் அன்னியத் துணி வாங்குவதை நான் பாவமென்று நம்புகிறேன்.

— காந்திஜீ (12—3—1925)

# ரீடா

## உங்கள் வீட்டிற்கு ஒரு தையல் மிஷின் அவசியமே



எப்பொழுதும் மிருதுவாக தொந்தரவின்றி வேலைசெய்வதும், நீடித்து உழைக்கக்கூடியதும், அதே சமயத்தில், சிக்கனமானதுமான தையல் மிஷினையே நீங்கள் எதிர்பார்த்து இருந்தீர்கள். ஆம் அத்தகையதோர் மிஷின்தான் ரீடா.




இதை வாங்கி நீங்களே தைத்துப்பாருங்கள் இரண்டு வருடத்திய. பராமரிப்பு உத்திரவாதம் உங்களுக்கு பூரண பாதுகாப்பளிக்கிறது.

இதர விவரங்களுக்கு உங்களுடைய வியபாரியிடம் கேளுங்கள். அல்லது ரீடா மெகேனிகல் ஓர்க்ஸ், லூதியானா என்ற விலாசத்திற்கு எழுதவும்.



# முதல் சந்திப்பு

**— சுவாதி —**

நீதி மன்றத்தில் நாள் முழுவதும் கடுமையாக உழைத்து விட்டுச் சிறிது நேரம் சீட்டாடிப் பொழுது போக்கலாம் என்று 'கிளப்புக்கு'ப் போனால் அங்கு ஒரு பிராணி கூட இல்லாமல் வெறிச்சென்றிருந்தால் எப்படி இருக்கும்? எவருக்கும் எரிச்சல்தான் வரும். அஹமதாபாத் வழக்கறிஞர் திரு வல்லபாய் படேலுக்கு 1916ம் ஆண்டு ஒரு நாள் மாலை அஹமதாபாத் கிளப்புக்குச் சென்றபோது இப்படித்தான் எரிச்சல் உண்டாயிற்று.

அன்று என்ன நடந்து விட்டது. ஒருவரையும் காணவில்லையே என்று காரணம் கேட்டார். ''யாரோ ஒரு குஜராத்தியர் ஆப்பிரிக்காவிலிருந்து சமீபத்தில் வந்திருக்கிறாராம். அவர் கிளப் ஹாலில் பேசுகிறாராம்'' என்று எவரோ ஒருவன் அலட்சியமாகச் சொன்னான். அந்தக் குஜராத்தியர்தான் தென்னாப்பிரிக்கா அரசாங்கத்தைப் பணிய வைத்தவர் என்று ஏற்கெனவே பட்டேல் கேள்விப்பட்டிருந்தார். அவரைப் பார்த்து விட்டுத்தான் வரலாமே என்று பட்டேலும் ஹாலுக்குச் சென்றார். காந்தியின் மெலிந்த தோற்றத்தையும் முகத்தையே மறைக்கும் பெரிய தலைப்பாகையையும் கண்டபோது, 'இவர்தானா அந்த ஆப்பிரிக்கா அரக்கனை வீழ்த்தியவர்?' என்று அவரால் நம்பவே முடியவில்லை. ஆனால் அவர் பேச்சில் ஒலித்த தன்னம்பிக்கையும் உறுதியும் பட்டேலை விவரிக்க முடியாத வகையில் ஆட்கொண்டன. வேடிக்கை பார்க்கத்தான் சென்றார் பட்டேல். ஆனால் அவர் அடி நிழலிலேயே நிலைத்து நின்று விட்டார். பட்டேல் தமது குரு மகாத்மா காந்திஜியை முதன் முதலாகக் கண்ட வரலாறு இதுதான்.

இந்தியாவின் கவிதைக் குயில் என்று பிரசித்தி பெற்ற ஸரோஜினி நாயுடு ''தேசத்தின் தந்தை''யை இம்மாதிரி ஆடம்பரமான கிளப்பின் ஹாலில் சந்திக்கவில்லை. 1914ஆம் ஆண்டில் முதல் உலக மகா யுத்தம் ஆரம்பித்தபோது ஸரோஜினி நாயுடு லண்டன் மாநகரில் இருந்தார். இந்தியப் பெண்மணிகள் சிலர் ஒரு கமிட்டியாகக் கூடி யுத்த அரங்கத்துக்கு ''பாண்டேஜ்'' துணிகள் தயார் செய்தனுப்ப முயற்சி செய்து கொண்டிருந்தனர். இந்தக் கமிட்டியில் ஸரோஜினியும் ஒருத்தி. காந்திஜியைப் பற்றி அவர் ஏற்கனவே கேள்விப்பட்டிருந்தார். இம்மாதிரி வேலைகளில் அவருக்கு அனுபவம் அதிகம் என்றும் அவர் அன்றையக் கப்பலில் லண்டன் மாநகரம் வரப்போவதாகவும் அறிந்த ஸரோஜினி அவரைச் சந்திக்க ஆவல் கொண்டார். துறைமுகத்திலேயே கப்பலை விட்டிறங்கியதும் அவரைச் சந்திக்க அவரால் முடியவில்லை. மறு நாள், 1914 ஆகஸ்டு 6ந் தேதி. லண்டனில் எங்கோ ஒரு மூலையில் காந்திஜி தங்கியிருந்த ஒரு வீட்டின் விலாசத்தைக் கண்டறிந்து வெகு பிரயாசைக்குப் பின் அங்கே சென்றார்.

வீட்டின் வாயிற் கதவு திறந்திருந்தது; வாயிற்படிக்கு நேராகத் தரையில் ஒரு ஜெயில் கம்பளம் விரித்திருந்தது. அதன் மீது மழுங்க மொட்டையடித்துக் கொண்டு ஒரு உருவம் உட்கார்ந்திருந்தது. வேக வைத்த தக்காளிப் பழங்களையும் ஆலிவ் எண்ணெயையும் கலந்த ஏதோ உணவை ஒரு மரக் கிண்ணத்தில் வைத்துக் கொண்டு சாப்பிட்டுக் கொண்டிருந்தார் காந்தி மகான். பக்கத்தில் வறுத்த கடலைக்கொட்டை டப்பாக்களும் ருசியே இல்லாத வறட்டு பிஸ்கட்டுகளும் சிதறிக் கிடந்தன. பிரபலமான தலைவரை இக் காட்சியில் கண்டதும் ஸரோஜினிக்குச் சிரிப்பு தாங்க முடியவில்லை. குலுங்கக் குலுங்கச் சிரித்தார். குனிந்த தலையைத் தூக்கி அவளைப் பார்த்தார் காந்தி. அவரும் பதிலுக்குச் சிரித்து விட்டு, ''நீ தானே ஸ்ரீமதி ஸரோஜினி? இவ்வளவு அவமரியாதையாக உன்னைத் தவிர வேறு யாரால் நடந்து கொள்ள முடியும்? வா. இந்த உணவை நீயும் கொஞ்சம் சாப்பிடு'' என்று அழைத்தார்.

'இது ஒரு உணவு. இதைத் தானும் சாப்பிடுவதா?' இதை நினைத்தபோதே ஸ்ரீமதி சரோஜினிக்கு ஒரு கணம் மூச்சே நின்று விட்டது. ''வேண்டாம்; மிக்க நன்றி; இது என்ன உணவு!'' என்று முகத்தைச் சுளித்துக் கொண்டார். இப்படித்தான் ஏற்பட்டது ஸரோஜினியின் முதல் சந்திப்பு. அன்று முதல் இறுதி வரையில் காந்திஜியின் சீடராகவே சரோஜினி நிலைத்து நின்று விட்டார்.

முதல் வட்டமேஜை மகாநாட்டுக்குக் காந்திஜி சென்றிருந்தபோது மேன்மை தங்கிய ஆகாகானைக் காண 'ரிட்ஸ்' ஓட்டலுக்குச் சென்றார். ஸ்ரீமதி ஸரோஜினியும் உடன் சென்றார். மூவரையும் சேர்த்துப் பத்திரிகைக்காரர்கள் போட்டோ பிடித்தனர். பேச்சு ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையைப் பற்றி. காந்திஜியைப் பார்த்து, ''நீங்கள் மட்டும் இந்திய முஸ்லிம்களிடத்தில் ஒரு வள்ளலைப் போன்று தாராள மனப்பான்மையுடன் நடந்து கொண்டீர்களானால் இந்தப் பிரச்னை நொடியில் தீர்ந்துவிடும்'' என்று வள்ளலைப் போலவே சொன்னார் ஆகாகான்.

காந்திஜி அவரைக் கூர்ந்து நோக்கி, ''முஸ்லிம்களிடத்தில் ஒருவள்ளலைப் போன்ற மனோபாவத்துடன் என்னால் ஒரு போதும் நடந்து கொள்ளவே முடியாது. இவ்விஷயத்தில் உணர்ச்சிக்கு இடமே இல்லை. அரசியல் அந்தஸ்தில்தான் ஒப்பந்தம் இருக்க வேண்டும்'' என்று பதில் சொன்னார்.

இந்தப் பதில் அவர்களுடைய பேச்சில் முதலிலிருந்த உற்சாகத்தைக் குன்றச் செய்

தது. வட்டமேஜை நடவடிக்கை முழுவதிலுமே இதன் விளைவு சூழ்ந்து விஷம்போல் வியாபித்திருந்தது.

பல வருஷங்களுக்குப் பிறகு இந்தச் சம்பவத்தை ஆகாகான் காந்திஜிக்கு நினைவுபடுத்தியபோது அவருக்கு அதிர்ச்சிதான் ஏற்பட்டது. தமது உட்கருத்தை எவ்வளவு தவறாக ஆகாகான் புரிந்துகொண்டு விட்டார் என்று மனம் வருந்தினார். "இந்தச் சந்தர்ப்பம் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. ஆனால் நீங்கள் நினைத்தது மிக மிகப் பெரிய தவறு. முஸ்லிம்களை என் உடன் பிறந்த சகோதரர்களைப் போலத்தான் என்னால் பாவிக்க முடியுமே தவிர அவர்களிடம் 'வள்ளல்' போன்ற ஒரு உயர்ந்த மனப்பான்மையை எவ்விதம் மேற்கொள்ள முடியும் என்றல்லவோ நான் பொருள்படக் கூறினேன். என்னுடன் சமத்துவம் கொண்டவர்களை தாழ்மையுடனா நடத்துவது?" என்று காந்திஜி அவர் தவறை உணர்த்தினார். இப்படி நிகழ்ந்தது ஆகாகானின் முதல் சந்திப்பு.

ஆனால் டாக்டர் ராதாகிருஷ்ணனைப் போன்ற தத்துவ அறிஞர்களுக்கு இம்மாதிரி மற்றவர்களைத் தவறாகப் புரிந்து கொள்ளும்படி ஒருபோதும் நேருவதே இல்லை. அவர் ஒரு சமயம் காந்திஜியை, மதத்தைப் பற்றி அவர் கொள்கை என்ன என்று வினவினார்.

"முற்றிலும் பாமரன் என்று கருதப்பட்டவனிடத்திலும் உண்மையின் ஒளிக் கதிர் வீசுகிறது. நிரந்தரமான உண்மைப் பொருளின் கதிர்கள்தாம் நாம் எல்லோரும். இக் கதிர்களின் பூரணமையே சமயம் எனப்படுவது" என்று காந்திஜி விளக்கினார். கிறிஸ்துவ ஞானி பாலுக்கும் அறிஞர் பிளேட்டோவுக்குமிடையே சந்திப்பு ஏற்பட்டிருந்தால், டாக்டர் ராதாகிருஷ்ணனுக்கும் காந்திஜிக்கும் ஏற்பட்டிருந்த முதல் சந்திப்பைக் காட்டிலும் வேறுவிதமாக இருந்திருக்க முடியாது.

1916-ம் ஆண்டு பள்ளிப் படிப்பை விட்டுக் காந்தியைக் காண வினோபா பாவே ஸபர்மதி ஆசிரமத்துக்குச் சென்றபோது காந்தி அவ்வளவு உன்னதமானவராகத் தோன்றவில்லை அவருக்கு. குருவும் சீடரும் வியவகாரங்களை உலக ரீதியில் விவாதித்தனர். வினோபா ஊருக்குத் திரும்பி, விட்டுப் போன ஸமஸ்கிருதப் படிப்பைப் பூர்த்தி செய்வதென்றும் ஒரு வருஷம் கழித்து ஆசிரமம் திரும்புவது என்றும் தீர்மானிக்கப்பட்டது. வினோபா திரும்பி ஊர் சென்றார். ஒரு வருஷம் படிப்பைப் பூர்த்தி செய்து விட்டு, குறித்த நாளில் ஆசிரமம் திரும்பினார் வினோபா. "இன்றைக்கு அவன் இங்கு வந்து சேரவேண்டிய நாள் என்பதை நான் மறந்தே போய் விட்டேன்" என்று தமது சீடனின் மன உறுதியைக் கண்டு ஆச்சரியமடைந்த காந்திஜியே சொன்னார். ஆனால் தமது குருவின் அடிச்சுவடுகளையே பின்பற்றிச் சீடர் இன்றும் நடந்து வருகிறார்.

மிஸ் மாடிலென் ஸ்லேட் என்னும் மீரா பென் விஷயத்தில் முதல் சந்திப்பு எதேச்சையாக நிகழவில்லை. திட்டமிட்டு ஏற்பட்டது. ஆங்கிலேய கப்பற் படை அதிகாரியின் புதல்வியான இந்த அம்மை ஆசிரமத்தில் சேர்ந்து அந்தப் புனிதச் சூழ்நிலையில் வசிக்க விரும்புவதாகக் காந்திஜிக்குக் கடிதம் எழுதினார். 1925-ம் ஆண்டு லண்டன் மாநகரில் அவளுடைய சுக வாழ்க்கையைத் துறந்து ஸபர்மதியில் குடிசை வாழ்க்கையை மேற்கொண்டாள். மஹாதேவ் தேசாய்தான் ரயில் ஸ்டேஷனுக்குச் சென்று அவளை ஆசிரமத்துக்கு அழைத்து வந்தார். காந்திஜியும் மிஸ் ஸ்லேடும் நேருக்கு நேர் சந்தித்தனர். அவள் செலுத்திய மரியாதைகளை ஏற்றுக்கொண்டு "இன்று முதல் நீ என்னுடைய புதல்வி" என்று காந்திஜி சொன்னபோது சுற்றி நின்றவர்கள் எல்லோரும் உணர்ச்சிப் பரவசத்தில் ஆழ்ந்தனர்.

பண்டித மோதிலால் நேருவின் புதல்வி விஜயலட்சுமிக்கு ஆசிரமத்தைச் சேர வேண்டிய அவசியமே இல்லை. நேருவின் இல்லமே ஒரு அரசியல் கூடம். பம்பாயில் மோதிலால் நேருவின் இல்லத்துக்குக் காந்திஜி விஜயம் செய்தபோது தகப்பனாரும் அவருடைய பத்தொன்பது வயதுப் பெண்ணும்தான் அவரை வரவேற்றனர். விஜயலட்சுமி அப்போதுதான் முதல் முறையாகக் காந்திஜியைச் சந்தித்தாள். சிறியவிஷயங்களைப்பற்றிப் பேசவே இடமில்லை. ரௌலட் சட்டம் பிரகடனம் செய்யப்பட இருந்தது அந்தச் சமயம். அதைப் பற்றித்தான் பேச்சு. சாப்பாட்டின் போது கூட விவாதங்கள் தொடர்ந்து நடந்தன. நேரு குடும்பத்தினர் மேல்நாட்டு முறையில் உணவு உட்கொள்ளும் வழக்கத்தைக் கூட அன்றைக்குக் கொஞ்சம் தளர்த்தி எல்லோரும் தரையில் உட்கார்ந்தே காந்திஜியுடன் சாப்பிட்டனர்.

அப்போதுதான் "ஆங்கிலேயருடன் நாம் சண்டை போட்டால் என்ன?" என்று உணர்ச்சி வசப்பட்ட விஜயலட்சுமி காந்திஜியைப் பார்த்துக் கேட்டாள். சாத்வீக முறையைக் கடைப்பிடித்த காந்திஜி தமது முறையைப் பற்றி விளக்கமாகச் சொன்னார். பிற்காலத்தில் தாமே இங்கிலாந்துக்குத் தூதராக வரப் போகிறோம் என்பதை அப்போது அவரால் எப்படி உணர்ந்திருக்க முடியும்?

தெற்கே சென்னையில் 1919ம் ஆண்டின் காந்திஜியின் அநுபவம் விசித்திரமாக இருந்தது. சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் வீட்டில் இரண்டு நாட்கள் தங்கியிருந்தும் தாம் யாருடைய விருந்தினர் என்பதையே காந்திஜியால் தெரிந்துகொள்ள முடியவில்லை.

காலஞ்சென்ற கஸ்தூரிரங்க அய்யங்கார் அழைப்புக்கிணங்கி காந்திஜி அந்தச் சமயம் சென்னைக்கு வந்தார். அவருடைய விருந்தாளியாகத்தான் இருப்பதாக அவர் எண்ணினார். பின்னர் மஹாதேவ் தேசாய்தான் அவர் தங்கியிருந்தது ராஜகோபாலாச்சாரியாரின் இல்லம் என்றும் அவருடைய விருந்தாளியாகத்தான் அவர் தங்கியிருக்கிறார் என்றும் சொன்னார். விருந்தாளியாக வீட்டில் இரண்டு நாட்கள் தங்கியிருந்தும் அதுவரையில் தன்னை நேரில் பார்க்காதவரைத் தாம் எப்படிச் சந்திப்பது என்று காந்திஜி கொஞ்சம் கூச்சப்பட்டார். கடைசியில் மஹாதேவ தேசாய் ராஜாஜியைக் காந்திஜிக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். அதுமுதல் காந்தி மகானின் மிகமிக நெருங்கிய நண்பராகவும் வழிகாட்டியாகவும் ஆகிவிட்டார்!

மகாத்மா காந்தி கதர் இயக்கத்தைக் கொண்டு வந்து சுமார் 40 வருஷங்களாகின்றன. சுதந்திரப் போராட்ட காலங்களில் சுதேசித் துணியாகவும், இந்தியப் பணம் வெளிநாடுகளுக்குப் போவதைத் தடுக்கக் கூடிய சாதனமாகவும், கிராமங்களில் வேலையில்லாமல் திண்டாடிக் கொண்டிருக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு வேலை கொடுத்து உதவும் காமதேனுவாகவும் கதர் உற்பத்தி இருந்து வருகிறது.

சுதந்திரம் கிடைத்த பிறகு சென்னை ராஜ்யத்தில் கதர் வேலைகளை அகில பாரத சர்வ சேவா சங்கத்தினரும், சென்னை சர்க்காரும் தீவிரமாகச் செய்து வருகிறார்கள்.



# கிராமப் பொருளாதாரத்தில் கதர்




ரா. குருசாமி

காந்திநிகேதன் ஆசிரமம்,
கல்லுப்பட்டி


★

ஆங்காங்கே நூற்கும் கிராமங்களிடையே, இராட்டை நூலை வாங்குவதும், நெசவு செய்யச் சொல்வதும் பின்னர் விற்பனைக்குப் பல பகுதிகளிலுள்ள விற்கும் நிலையங்களுக்கு அனுப்புவதும் இந்த இரு ஸ்தாபனங்களின் வேலையாகும். மத்திய, மாகாண சர்க்கார்கள் தங்கள் தேவைகளுக்கு ஏராளமாகக் கதரே வாங்கிக் கொண்டிருப்பதால் தேக்கமில்லாமல் அப்போதைக்கப்போது கதர் விற்பனையாகிக் கொண்டிருக்கிறது.

கைராட்டையில் நூற்கும் கிராமவாசிகள் தங்களுக்கு வேறு தொழில் கிடைக்காத காரணத்தினால் நூற்கிறார்களேயொழிய நிரந்தர வருமானமுள்ள தொழிலாக இதை நம்பவில்லை. நல்ல வருமானமுள்ள வேறு தொழில் கிடைத்தால் அதற்கு மாற்றிக் கொள்வது சகஜமாக இருந்து கொண்டிருக்கிறது. மழையையே நம்பி விவசாயம் செய்யும் நிலைகளில்தான் இராட்டை நூற்புத் தொழில் அதிகமாகப் பரவி வருகிறது.

கதர்த் திட்டம் இல்லாமல் கிராமத்தை முன்னேற்றச் செய்வதற்கு அமைக்கப்படும் எந்தத் திட்டமும் கிராம வாழ்க்கையில் வேரூன்றாது. துணிக்காகச் செலவாகும் கோடிக்கணக்கான செல்வம் கிராமத்தை விட்டு வெளியேறிக் கொண்டிருந்தால் கிராமம் எப்படிச் சுபிட்சமடைய முடியும்?

கிராமத்தில் தான் பருத்தி உற்பத்தியாகிறது. நூறு ரூபாய்க்குக் கிராமத்திலிருந்து வெளியேறும் பஞ்சிலிருந்து சுமார் ரூ. 500 பெறுமானமுள்ள மில் துணி உற்பத்தியாகிறது. கிராமத்தார் துணி வாங்கும் போது பஞ்சு விற்ற ரூ. 100-க்கு மேல் ரூ 400 அதிகமாகக் கொடுக்க வேண்டிய நிலையில் இருக்கிறார்கள்.

இப்படியாகச் செல்வம் கிராமத்திலிருந்து நகரங்களுக்குச் செல்வதோடு மட்டுமல்லாமல் கிராம மக்கள் வேலை வாய்ப்புகளையும் இழந்து வறுமையில் வாடுகிறார்கள். இது மாதிரியே கிராமத்திலிருந்து நெல்லை விற்று அரிசி வாங்குவது, எண்ணெய் வித்துக்களை விற்று எண்ணெயும் பிண்ணாக்கும் வாங்குவது, துவரை உளுந்து முதலிய தானியங்களை விற்றுப் பருப்பு வகையறா வாங்குவதுபோன்ற பல்வேறு விற்பனை, வாங்குதல் முறையால் ஆண்டுதோறும் லக்ஷக்கணக்கில் கிராமந்தோறும் பணம் வெளியேறுகிறது. இந்தப் பண வெளியேற்றங்களினால் தான் கிராமப் பொருளாதாரம் எந்த அபிவிருத்தித் திட்டங்களினாலும் சீரடைய முடியாத முறையில் மோசமான நிலைக்குச் சென்று கொண்டிருக்கிறது. பல்வேறு ஸ்தாபனங்கள் மூலமாக எவ்

மேலே படத்தில் கிராம மக்கள் பணச் செலவின்றி அவர்களே செய்த மூங்கில் ராட்டையின் மூலம் நூல் நூற்கின்றனர். இரண்டாவது [illegible] மற்றும் பெண்கள் மிகுந்த குதூகலத்துடன் நூல் நூற்கும் காட்சி [illegible]



ஓய்வு நேரத்தில் ஆதாரப் பள்ளி மாணவர்கள் நூற்கும் காட்சி.

வளவு கடன்கள் கொடுத்தாலும், ஓட்டைக் குடத்தில் விட்ட தண்ணீர் ஒழுகி விடுவது போல் கடன்களை அடைக்க முடியாத கஷ்டமான நிலைமை உருவாகி வருகிறது. ஒரு பத்து வருஷ கால கிராமக் கடன்களின் வருஷவாரி கணக்குகளை எடுத்துப் பார்த்தால் கடன்கள் எப்படி விஷம் போல ஏறிக் கொண்டு வருகின்றன என்பதைத் தெளிவாகப் பார்க்கமுடியும். கிராம மூலப்பொருள்கள் கிராமங்களிலிருந்து வெளியேறாமல் கிராமங்களிலேயே தேவைப் பொருளாக மாற்றப்படும் கிராமத் தொழில் அபிவிருத்தித் திட்டம் மூலமே கிராமங்களை மாற்றியமைக்க முடியும்.

உணவுக்காகச் சமையல் எல்லா வீடுகளிலும் நடக்கிறது. அதைத் தொழிலாகக் கருதுவதில்லை. குழந்தைப் பேறும் வளர்ப்பும் ஒவ்வொரு குடும்பங்களிலும் நடந்து கொண்டிருக்கின்றன. அவற்றையும் ஒரு தொழிலாக நாம் கருதுவதில்லை. நூற்பையும் தொழிலாகக் கருதாமல் சொந்தத் துணித் தேவைக்கான வாழ்க்கை முறையாகக் கையாள ஆரம்பித்தால் கிராமங்கள் எங்கும் பொருளாதார வாழ்வில் ஒரு மாபெரும் புரட்சி ஏற்படுவதைப் பார்க்கலாம்.

கிராம மக்கள் வேலையில்லாமல் வீண் பொழுது போக்குகிறார்கள். கிராமங்கள் தோறும் நித்தமும் ஆயிரக்கணக்கான மணி நேரங்கள் வீண் விரயமாகிக் கொண்டிருக்கின்றன. குடும்பப் பெண்களும், ஆண்களும் தினந்தோறும் வேலை நேரம் போக ஓய்வு நேரங்களில் ஒரு மணி நேரமாவது இராட்டையில் நூற்றால் ஒவ்வொருவரும் மாதத்துக்குப் பதினைந்து சிட்டங்கள் நூல் உற்பத்தி செய்யலாம். ஒரு ஆண்டில் நாலு வேஷ்டி, நாலு சட்டை, நாலு துண்டு சாதாரணமாக வாங்கிக்கொள்ள முடியும். அதன் மூலம் மில் துணி வாங்கி உடுத்தும் சுமார் ரூபாய் 20 மதிப்புள்ள பணம் ஒவ்வொருவருக்கும் வீட்டிலேயே மிச்சமாகிறது. ஆயிரம் பேர்கள் கொண்ட கிராமமானால் ரூபாய் 20,000 அந்தக் கிராமத்திலேயே தங்கவும் அதன் கிராம சுபிட்சத்துக்கான திட்டங்களில் உபயோகிக்கவும் வழி ஏற்படுகிறது. கிராமத்தார் சுயதேவைக்காக நிரந்தரமாக நூற்க ஆரம்பித்தால் கிராமத் தறிகாரர்களுக்கு வருஷம் முழுவதும் நெசவுக்கு வேண்டிய நூல் கொடுத்துக் கொண்டே இருக்க முடியும்; ஆயிரம் பேர்கள் கொண்ட கிராமத்தில் முக்கால்வாசிப்பேர் நூற்று, மூன்று நாட்களுக்கு இரண்டு சிட்டம் உற்பத்தி செய்தால் வருஷம் 1,80,000 சிட்டங்கள் உற்பத்தியாகும். இந்தச் சிட்டங்களை நெசவு செய்ய 20 தறிகாரக் குடும்பங்கள் தேவை. இதன் மூலம் 20 குடும்பத்துக்கு அதாவது 100 பேருக்குச் சாப்பாடு கொடுக்க உதவும் ரீதியில் நிரந்தரமாக வேலை கொடுக்க முடியும். கிராமந்தோறும் இருபது குடும்பமானால் ஐந்து லக்ஷம் கிராமங்களில் ஒரு கோடி குடும்பங்கள் அதாவது ஐந்து கோடி மக்களுக்கு நெசவு மூலம் வேலைவாய்ப்புக்குரிய சாத்தியக்கூறுகள் இருக்கின்றன. மற்றும் அச்சுப் போடுபவர், சாயம் போடுபவர், தச்ச, கொல் தொழிலாளிகள் ஆகிய பலருக்கும் வாய்ப்பு உண்டு.

. . .

கல்லுப்பட்டி வட்டாரக் கிராமங்களில் சுமார் மூவாயிரம் இராட்டைகள் வரை சுழன்று கொண்டிருக்கின்றன. கடந்த நாலு வருஷங்களில் இந்த வட்டாரத்தில் மில் துணி வாங்குதல் குறைந்திருக்கிறது. சாதாரணமாக ஒரே துணியையே துவைத்துக் கட்டிக் கொண்டிருந்த பல குடும்பங்கள் ஓய்வு நேரங்களில் நூற்றுத் துணி வாங்குவதன் மூலம் துணித் தேவைகளைப் பூர்த்தி செய்திருக்கின்றன. கல்லுப்பட்டி காந்திநிகேதன் ஆதாரப் பள்ளியில் படிக்கும் மாணவர்கள் வகுப்பு நேரம்போக ஓய்வு நேரத்தில் நூற்றுக் கொள்வதன் மூலம் துணித் தேவைகளைத் தங்கள் பெற்றோர்களுக்கு எந்தவித பாரமும் இல்லாமல் பூர்த்தி செய்து கொள்கிறார்கள். சில பையன்கள் தங்கள் தேவைகள் போக அதிகமாக உள்ள நூலுக்குக் கதர்த் துணி வாங்கிப் பெற்றோர்களுக்குக் கொடுக்கிறார்கள். இதன் மூலம் துணிப் பஞ்சம் நீங்குவதுடன் வெளியே துணி வாங்கும் பணமும் மிச்சப்படுகிறது.

மக்கள் கிராமந்தோறும், வீடு தவறாமல் நூற்று அந்த நூலாலேயே நெய்த துணியைக் கட்ட ஆரம்பித்தால் கிராமங்களில் பத்து வருஷங்களுக்குள்ளாகப் பெரிய மாறுதலைக் காண முடியும். வேலையில்லாப் பிரச்னை தீர்ந்து போவதுடன் வாழ்க்கைத்தரமும் உயர்ந்து பூரண வசதிகளுடன் வாழ வகையேற்படும்.

பாகவதமாகிய

# பக்தி வயல்

## பௌராணிகர்

### 5. சுகர் செய்த உபதேசம்

[பக்தியும், முக்தியும், சிருஷ்டியும், அவதாரமும்.]

**பக்தி**

**சு**கர் பரீக்ஷித்து மகராஜனுக்கு உபதேசம் செய்ய ஆரம்பித்தார்.

"அரசே! மிகச் சிறந்த கேள்வியைக் கேட்டிருக்கிறீர். வாழ்க்கையில் விழுந்த மனிதர் கேட்டுக் கையாள வேண்டிய தருமங்கள் எத்தனையோ ஆயிரம். ஆனால் அவர்கள் வாழ்நாள், பகலில் பணம் பண்ணுவதிலும் இரவில் உறங்குவதிலும் போய் விடுகின்றன. மகனும் மனைவியும் தேகமும் நிலையில்லாதவை என்று அறிந்தும், அவைகளில் மோகத்தை வைத்திருக்கிறார்கள். ஆகையால், பரத வம்சத்தில் பிறந்த அரசனே! அபயத்தை அடைய விரும்புகிறவன் பகவானான ஹரியின் கதையைக் கேட்கவும் பாடவும் மனத்தில் எண்ணவும் வேண்டும். பிறந்ததற்கு லாபம் ஒன்றுதான். எவ்விதத்திலாவது இறக்கும் நேரத்தில் நாராயணனுடைய நினைவு நிலைக்க வேண்டும். முற்றிலும் துறந்து விதிகளை விலக்கிய முனிவரும் கூட ஹரிகதையில் ஈடுபட்டிருக்கின்றனர். பாகவதம் என்ற இந்தப் புராணத்தைத் துவாபரயுகத்தின் கடைசியில் என் தகப்பனார் வியாசரிடமிருந்து நான் கேட்டேன். கண்ணனிடம் பக்தியுள்ள உனக்கு இந்தப் புராணத்தை நான் எடுத்து உரைக்கிறேன்.

"கட்வாங்கர் என்று ஒரு ராஜரிஷி இருந்தார். அவர் தேவர்களுக்காக அரக்கருடன் போர் புரிந்தார். அரக்கரைப் போரில் வென்றார். தேவர்கள் சந்தோஷப்பட்டு, 'என்ன வரம் வேண்டுமானாலும் கேளுங்கள்' என்று கட்வாங்கரிடம் சொன்னார்கள்.

"என்னுடைய வாழ்நாள் இன்னும் எவ்வளவு பாக்கி இருக்கிறது, சொல்ல வேண்டும்" என்று அவர் தேவர்களைக் கேட்டார்.

"ஒரு முகூர்த்த காலம்தான் மிச்சம் இருக்கிறது" என்று தேவர்கள் பதில் உரைத்தார்கள்.

இதைக் கேட்ட கட்வாங்கர் உடனே புவியை அடைந்தார். ஹரியினிடம் சரண் புகுந்தார். அந்தச் சொற்ப நேரத்தில் அவர் செய்த பக்தியானது அவருக்கு மோட்சத்தைக் கொடுத்தது.

"நீயோ இன்னும் ஏழு தினங்கள் உயிருடன் இருக்கப் போகிறாய். அதற்குள் இனிமேல் துன்பம் வராமல் இருப்பதற்கு வேண்டியவைகளைச் செய்வாயாக.

"இறப்பதற்கு முன் மனத்தை அடக்கி, இந்திரியங்களை வென்று, தனித்திருந்து, பற்றை விலக்கிப் புறமொன்றும் பாராமல் நாராயணனையே சிந்தனை செய்ய வேண்டும்.

"இந்த நீங்காத நினைவை இரண்டு விதமாகச் செய்யலாம். முதலில் எவ்வுலகிலும் எதையெல்லாம் நாம் உண்டு என்று எண்ணுகிறோமோ, அவையெல்லாம் ஆண்டவனுடைய உடலே அல்லாமல் வேறில்லை என்று எண்ண வேண்டும். நாம் காண்பதெல்லாம் அவருடைய ஸ்தூலமான தோற்றம். சென்றதும், நிகழ்வதும், வருவதும் அதனுள் அடங்கியுள்ளன. எங்கும் பரந்த இந்த ரூபத்தை மனத்தில் தியானிக்க வேண்டும். இதைத் தவிர வேறு எங்குமே ஒன்றும் இல்லை.

"ஆனால் இவ்வாறு மனத்தினால் இடைவிடாமல் நாராயணனை நினைத்தால் மட்டும் போதாது. உடல் அழியாமல் இருப்பதற்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவுக்குத்தான் வெளிப் பொருள்களுடன் தொடர்பு வைக்க வேண்டும். நிலமிருக்கையில் படுக்கை எதற்கு? கையிருக்கையில் தலையணை எதற்கு? உள்ளங்கை இரண்டிருக்கையில் பாத்திரம் எதற்கு? திசைகளும் மரவுரிகளும் இருக்கும்பொழுது பட்டாடையால் என்ன பயன்? பாதையில் கந்தை கிடைக்காதா? பழம் நிறைந்த மரங்கள் நமக்குப் பிச்சை இடுவதில்லையா? ஆறுகள் வற்றிவிட்டனவா? குகை முகங்கள் மூடிப்போய் விட்டனவா? மேலும், ஹரியானவர் நம்மைக் காப்பதில்லை என்பது

எங்காகிலும் உண்டா? எதற்காகச் செல்வத்தால் கண் இருண்ட மனிதரைப் போய் அண்ட வேண்டும்?

''ஆகவே, முற்றிலும் துறந்தவனுகித் தன் உள்ளத்தினுள்ளே கோயில் கொண்ட கடவுளைக் கொண்டாட வேண்டும். கையில் தாமரையும் சங்கும் சக்கரமும் கதையும் ஏந்தித் தன்னுள்ளே சிறு கட்டை விரல் அளவில் அமர்ந்திருக்கும் நாராயணனையே பெரும்பாலோர் தியானம் செய்கிறார்கள். புன்முறுவலும் பெருந்தாமரைக் கண்ணும், கதம்ப மலரென மஞ்சள் பட்டாடையும், ரத்தினங்கள் இழைத்த கைவளையும், தோடும், கிரீடமும், யோகியர் மனத்தில் பதிந்த துளிர் தாள்களும், கழுத்தில் இருக்கும் கௌஸ்துபமும், மார்பில் அணிந்திருக்கும் வாடாமலர் மாலையும், கருங்குழல் கருளால் திகழும் வடிவதனமும், அருள் சொரியும் புருவமும் உடைய ஹரியினிடம் மனத்தைச் செலுத்த வேண்டும்.

''முதலில் கூறியது கடவுளை எங்கும் நிறைந்த தோற்றத்தில் காணுதல். இதற்கு வடமொழியில் ''வைராஜ தாரணை'' என்று பெயர். இரண்டாவதாகக் கூறியது தன்னுள் குடிகொண்ட பெருமானின் ரூபம். இதற்கு வடமொழியில் 'அந்தர்யாமி தாரணை' என்று பெயர். இவ்விரண்டுக்குமே பற்றறுத்தல் இன்றியமையாத கருவி.''

## முக்தி

இதற்கு மேல் முக்திஅடைவதற்கு வேதத்தில் கூறப்பட்டிருக்கும் இரண்டு பாதைகளை விவரித்தார். தனித்திருந்து 'யோகாப்பியாசம் செய்து உயிரைப் புருவத்தின் இடையே கொண்டு போய்த் தலை பிளந்து வெளியேற்றிச் சடலத்தை விடும் வழியையும் விரிவாகக் கூறினார். இவ்வாறு மோக்ஷத்தை விரும்பாமல் அணிமாதி சித்திகள் பெற்றுப் படிப்படியாக சித்தலோகம், மஹர்லோகம், சத்தியலோகம் முதலிய இடங்களை முறையே அடைந்து கடைசியில் ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களை விட்டு 'மகத்து'டனும், பிறகு 'பிரகிருதி'யுடனும் பிறகு 'பரப்பிரம்ம'த்துடனும் ஒன்றாய்க் கலந்து கொள்ளும் வழியையும் காட்டினார். [''மகத்து'' என்றால் இவ்வுலகில் பரவியிருக்கும் புத்தி தத்துவம். ''பிரகிருதி'' என்றால் அமைதி, ஆக்கம், அசட்டை (ஸத்வம், ரஜஸ், தமஸ்) என்ற முக்குணங்களுடன் கூடிப் படைக்கப்பட்ட அனைத்துக்கும் மூல காரணம்.]

முதலில் கூறிய வழியை வடமொழியில் 'ஸத்யோ முக்தி' அல்லது 'உடன் அடையும் விடுதலை' என்பார்கள். இரண்டாவது சொன்ன பாதை 'கிரம முக்தி' அல்லது படிப்படியாக அடையும் விடுதலை என்று கூறப்படுகிறது.

வெவ்வேறு பலன்களை அடைய வேண்டி வெவ்வேறு தேவதைகளை வழிபடும் முறைகளையும் மன்னருக்கு முனிவர் உரைத்தார். ஆனால் ஆசையிருந்தாலும் சரி, ஆசை துறந்தாலும் சரி விவேகியானவன் ஹரியின் வழிபாட்டையே விடாமல் செய்வான் என்று சொல்லித் தமது உபதேசத்தை முடித்தார்.

## சிருஷ்டி

இதையெல்லாம் கவனித்துக் கேட்ட அரசர் மறுபடியும் சுகரிடம் ''ஆண்டவன் அண்டங்களைப் படைப்பதும், காப்பதும், அழிப்பதும் எப்படி?'' என்று வினவினார்.

அதற்கு சுகர், ஹரியைத் தோத்திரம் செய்து கொண்டு பின்வருமாறு பதில் உரைத்தார்:—

''இதே கேள்வியை நாரதர் பிரம்மதேவனிடம் கேட்டு, அதற்குப் பிரமன் விஸ்தாரமாகப் பதில் அளித்திருக்கிறார். நாரதர் பிரம்மனையே பரம்பொருளாகப் பாவித்துப் பேசினார். அதை பிரம்



மன் மறுத்து, தானும் ஏனையோரைப் போலவே பரமன வாசுதேவனுடைய மகிமையினால் தம் செயலைச் செய்வதாகச் சொன்னார். மேலும் பிரமன் சொன்னார். "உலகங்களைச் சிருஷ்டி செய்வதற்கான மண், தண், தீ, காற்று, வெளி என்ற பண்டங்களும், வினையும் தன் வினையும், நில்லாமல் நகரும் காலமும், தோற்றமளிக்கும் தன்மைகளும், பாடுபடும் ஜீவன்களும் வாசுதேவனை விட்டு வேறானவை அல்ல. சிலந்திப் பூச்சி தன்னுள் நின்று வீசும் வலையைப் போல் பரம்பொருளானது தானே பெருகித் தோற்றமளிக்கிறது. வாசுதேவனால் படைக்கப்பட்ட நான் அவருடைய கடைக் கண் அருளால் இந்தச் சிருஷ்டியைச் செய்கிறேன். தானே பலவாறாகப் பெருக வேண்டும் என்று இச்சை கொண்ட ஈசன் தன் மாயையினால் காலம், செயல், வினைத்தன்மை என்று தன்னுள்ளே ஒடுங்கியிருந்த வேறுபாடுகளை விவரித்தார். காலத்தின் செயலால் ஒன்றோடொன்று சமமாக நிலைநின்ற ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களும் பிரிந்து, ஒன்றோடொன்று ஏற்றத்தாழ்வு அடைந்து மனிதனை ஒட்டிய வினையினால் பலவாயின. ஸத்வம், ரஜஸ் என்ற இவ்விரண்டு குணங்களிலிருந்து புத்தி தத்துவம் (மகத்) உண்டாயிற்று. மகத்தானது, மாறுங்கால் தாமச குணத்தைக் கொண்ட அகங்காரம் வந்தது. அகங்காரத்திலிருந்து பஞ்சபூதங்கள் தோன்றின. சத்தம் என்ற சூக்ஷ்ம தன்மையை உடையது ஆகாயம். ஆகாயத்திலிருந்து தொடுதல் என்ற தன்மை கொண்டது காற்று. ஆனால் காற்றில் அதன் காரணமான ஆகாயத்தின் தன்மையான ஓசையும் கலந்திருக்கும். காற்றிலிருந்து உருவம் என்ற தன்மை வாய்ந்தது நெருப்பு. நெருப்பில் உருவத்துடன் ஓசையும் தொடுதலும் கலந்திருக்கும்; தீயிலிருந்து சுவை என்ற தன்மை வாய்ந்தது நீர். நீரில் சுவையுடன் உருவமும், தொடுதலும் சத்தமும் கலந்திருக்கும். நீரிலிருந்து நிலம், வாசனை என்ற தன்மை கொண்டது. நிலத்தில் தன் குணத்துடன் மேற்கூறிய நான்கு குணங்களும் சேர்ந்திருக்கும். நிற்க.

"ஸத்வ அகங்காரத்தில் நின்று மனசு உண்டாயிற்று. மனத்துக்கு அதிபதி சந்திரன். காது, உடல், கண், நாக்கு, மூக்கு என்ற ஞானேந்திரியங்களும், வாக்கு, கைகால் கழிதல், லிங்கக் குறி என்ற கர்மேந்திரியங்களும், ராஜஸ அகங்காரத்தில் நின்று உண்டாயின. சிந்திக்கும் புத்தியும் செயல் செய்யும் பிராணனும் ராஜஸமே. நாரதரே! இந்தப் பஞ்ச பூதங்களும் இந்திரியங்களும், மனமும் முக்குணங்களும் தனித்திருந்தபொழுது உடல் என்ற வீட்டைப் படைக்கத் திறமற்றவைகளாய் இருந்தன. பிறகு ஈசன் இச்சையால் காரணம் என்றும் காரியம் என்றும் பலவாறாகச் சேர்ந்துகொண்டு உலகங்கள் என்ற பேருடலையும் நான் என்ற ஜீவ சரீரத்தையும் படைத்தன. உயிரில்லாப் பேரண்டத்துக்குக் கடவுளே உயிரையும் கொடுத்தார். அந்த அண்டத்திலிருந்து 'விராட் புருஷன்' வெளி வந்தான். அவன் உடலாகவே ஈரேழு உலகங்களையும் பெரியோர் காண்கிறார்கள். அதைத் தவிர சிருஷ்டியும் இல்லை; தோற்றமும் இல்லை. ஆயினும், ஒளிவீசி வெளிச்சம் தரும் கதிரவன், அவன் வீசும் ஒளியினின்று வேறாக இருப்பது போல், ஆண்டவன் தான் செய்த பஞ்ச பூதங்களுக்கும், இந்திரியங்களுக்கும், குணங்களுக்கும் உள் இருப்பவனும் அல்ல; கட்டுப்பட்டவனும் அல்ல: தன்னுடைய விராட் ரூபமான உலகங்களைத் தனியே இருந்து பார்க்கிறான்.

"முதலும் முடிவும் இல்லாத இப்பரம்பொருள் இவ்வாறு பிரளயந்தோறும் தன்னைத்தானே தன்னுள்ளே ஆக்கியும், ஆண்டும், அழித்தும் வருகிறான்.

"நாரதரே! இப்பொழுது கடவுள் விளையாட்டில் அவர் செய்த அவதாரங்களைச் சொல்லுகிறேன். கேளுங்கள்:

**முதல்:** கடலில் மூழ்கிப் போன பூமியைப் பன்றி அவதாரம் செய்து இரண்யாக்ஷனைக் காப்பாற்றினார். இது வராகாவதாரம்.

**இரண்டாவதாக** ருசி என்ற முனிவருக்கு மகனாய்ப் பிறந்து ஸுயக்ஞன் என்ற பெயருடன் தேவர்களை உண்டு பண்ணினார். இது யக்ஞாவதாரம்.

**மூன்றாவதாக** கர்தமர் என்பவருக்குத் தேவஹூதியின் வயிற்றில் கபிலராகப் பிறந்தார். தாய்க்குத் தத்துவம் உபதேசித்தார். இது கபிலாவதாரம்.

**நான்காவதாக** அத்ரி முனிவருக்கு, 'நானே பிறக்கிறேன்' என்று கொடுத்த வரத்தை முன்னிட்டுத் தத்தராக (கொடுக்கப்பட்டவர்)ப் பிறந்தார். இது தத்தாத்ரேய அவதாரம்.

**ஐந்தாவதாக** உலகங்களைப் படைக்கத் தவம் செய்த எனக்கு (பிரமனுக்கு) பரமன் நான்கு அண்ணன் தம்பியாகத் தோன்றி, முன் பிரளயத்தில் அழிந்து போன ஆத்மஞானத்தைத் திரும்பவும் எடுத்துரைத்தார். இந்தச் சகோதரர்கள் சனத்குமாரர், சனகர், சனந்தனர், சனாதனர் எனப்படுவர். இது குமாராவதாரம்.

**ஆறாவதாக:** தக்ஷன் மகள் மூர்த்தி என்பவளிடம் தருமன் என்பவருக்கு

அளவில்லாத தவப் பெருமையுடன் நரன் என்றும் நாராயணன் என்றும் பேர் பூண்டு இருவராய்ப் பிறந்தார். இது நர நாராயணாவதாரம்.

இடையே, மாற்றாந்தாயின் கொடுஞ் சொல் பொறுக்காதவனாய்க் காடு சென்று தவம் செய்த துருவனுக்கு அழியாத வீட்டை (நட்சத்திரம் என்ற ரீதியில்) அளித்தார்.

**ஏழாவதாக:** வேனன் என்ற வேந்தன் அந்தணர் சாபத்தால் அடிபட்டுக் கீழ் உலகம் ஏகும் தறுவாயில், முனிவர் துதிக்குக் கரைந்து, ப்ருது என்ற பெயருடன் வேனனை மீட்டுப் புவியைப் பசுவெனக் கறந்தார். இது ப்ருதுச் சக்ரவர்த்தியின் அவதாரம்.

**எட்டாவதாக** நாபி என்ற அரசனுக்கு ஸுதேவியினிடம் ரிஷபராகப் பிறந்து, முற்றிலும் துறந்து, ஆத்ம ஞானத்தை அடைந்து பித்தனென்று தோன்றிய பரமஹம்சர். இது ரிஷப யோகியின் அவதாரம்.

**ஒன்பதாவதாக:** என்னுடைய (பிரமன்) யாகத்தில், யாகத்துக்கு உடையவரானவர் தாமாகவே பொன்னிற மேனியுடனும் மறையே உருவெடுத்தாற்போலும் ஹயக்ரீவர் என்று வந்தார். இது ஹயக்ரீவ அவதாரம்.

**பத்தாவதாக:** பிரளயத்தில் மீனாய்த் தோன்றி, பூமியைக் காத்து உயிர்களை அழியாமல் தூக்கி என் வாய் நின்று நழுவி நீரில் சிதறின மறையையும் வாயில் வைத்துக்கொண்டு விளையாடின மத்ஸ்யாவதாரம்.

**பதினொராவதாக:** தேவரும் அசுரரும் மந்தர மலையைப் பாற்கடலில் அமுதத்தின் பொருட்டுக் கடைந்த பொழுது, ஆமையாய்க் கீழிருந்து மலையைத் தாங்கி, மலை அசைதலால் முதுகில் சொறி தீர்ந்து சற்றே நல்லுறக்கம் எய்தியது கூர்மாவதாரம்.

**பன்னிரண்டாவதாக.** சினம் கொண்டு சிங்க முகத்துடன் தோன்றி கதையால் தன்னைத் தூளாக்க வந்த இரண்யனைத் துடையில் படுக்க வைத்து நகத்தால் பிளந்தார். இது நரசிம்மாவதாரம்.

பிறகு, மடுவிலே முதலையினால் கடித்துக் கட்டுண்ட காலுடன், தன் துதிக்கையில் தாமரைப் பூவை வைத்துக்கொண்டு 'ஆதிமூலமே' என்று அலறின யானையைக் காப்பதற்குக், கருடன்மீது ஏறி ஓடோடியும் வந்து சக்கரத்தால் முதலையைக் கொன்றார்.

**பதின்மூன்றாவதாக** அதிதியின் பன்னிரு மைந்தரில் கடைசி மகனாய்த் தோன்றியும் குணங்களில் முதல்வனாய் நின்று, மூவடியால் பூவுலகை அளந்த குறள்மேனி; தன் வாக்கை நிலைநிறுத்தத் தன் தலையைப் பலி கொடுத்துப் பரமன் கால்பட்ட நீரைச் சிரமேல் தரித்த மகா பலிக்கு இந்திரப் பதவி போதாதென்று எண்ணின வாமனாவதாரம்.

நாரதரே! பின்னர் பகவான் உங்களுக்குத் தோன்றித் தன்னைச் சேரும் பாதைக்கு விளக்கென பக்தி யோகத்தைத் தெரிவித்தார்.

**பதினான்காவதாக:** காசி நகரத்து மன்னன் தன்வந்திரியாக அவதாரம் செய்து ஆயுர்வேதத்தை வெளிப்படுத்தினார்.

**பதினைந்தாவதாக:** க்ஷத்திரிய மன்னர்கள் நெறிதவறி அந்தணரை வருத்துவதைக் கண்டு பரசுராமாவதாரம் செய்து, இருபத்தொரு முறை தன் கோடாலியால் அவர்களை நாசம் செய்தார். இது பரசுராம அவதாரம்.

**பதினாறாவதாக:** இக்ஷ்வாகு குலத்தில் தனது அம்சங்களான பரதன், லக்ஷ்மணன், சத்ருக்னன் என்ற சகோதரர்களுடன் தோன்றி, 'தந்தை சொல் நிலை நாட்டக் கானகம் சென்று, தன் பிராட்டி சீதையைத் தூக்கிச் சென்று இலங்கையில் சிறை வைத்த ராவணனைக் கொன்று, எங்களுக்கு அருளின ராமாவதாரம்.

**பதினேழாவதாக:** கிருஷ்ணனுடைய அவதாரம். இதை இனிமேல் பார்க்கப் போகிறோம். வெண்ணிறத்தில் பலராமன் என்றும் கருநிறத்தில் கண்ணன் என்றும் ஹரியானவர் தோன்றுவார்.

''நாளடைவில், மனிதர், மதியிழந்து உயிர் குன்றி வாழும்போது மறையில் கூறிய பொருளும் நீதியும் அழியாமல் இருப்பதற்காக வேதவியாசர் ரூபமாக பகவான் அவதாரம் செய்வார்.

''முடிவில், மயன் செய்த விமானங்களுடன் செருக்கேறி வானத்தில் உலவி மனிதரை அழிக்கும் அரக்கருக்குக் கடவுள் தானே மறைகளுக்கு மாறான வழியைப் புகட்டுவார். பின்னர், அவரவர்தம் நெறியை விட்டுத் திரியும் பொழுது 'கல்கி' என்று துடைக்கும் தன்மையுடன் தோன்றுவார்.

''புவி மீதிருக்கும் புழுதியையும் கணக்கிடலாம்; ஆண்டவனுடைய அளவிலாத் திறமையை எண்ணுவது எப்படி? காரணம் என்றும் காரியம் என்றும் எது இருந்தாலும் அது ஹரியைத் தவிர வேறு இல்லை; ஆனால் ஹரி இவ்விரண்டை விட்டு வேறானவர். இதுதான் ஹரி எனக்கு அருளிச் செய்த ''பாகவதம்'', நான் உனக்குச் சுருங்கச் சொன்னேன். நீ இதை விவரித்து எங்கும் பிரசாரம் செய்வாயாக.''

இந்த உபதேசம், பிரமன் நாரதருக்குச் செய்ததாகச் சுகர் பரீக்ஷித்துக்குச் சொன்னார்.

(தொடரும்)

# பாண்டிமாதேவி

## பூர்வகதை

அலை அலையாகப் பொங்கும் எல்லையற்ற காலக் கடலின் பரப்பில் பல நூறு ஆண்டுகளுக்கு முன்னால் தென்பாண்டி நாட்டுக் கடற்கரையில் கன்னியாகுமரியில் ஒரு அழகிய மாலைப்பொழுது. பாண்டி நாட்டுக்கு அது ஒரு சோதனைக் காலம். மகா மன்னனான சடையவர்ம பராந்தகன் அமர பதவி அடைந்து விட்டான். அவனுடைய நாட்டைச் சுற்றிலும் பகைவர்கள் குமுறிக் கொண்டிருந்தனர். குமாரபாண்டியனான இராசசிம்மன் பகைவர்களுக்கு அஞ்சிக் கடல் கடந்த தீவுகளுக்கு ஓடி விட்டான். காலஞ் சென்ற மகா மன்னரின் கோப்பெருந்தேவியாகிய வானவன்மாதேவி கணவனை இழந்த அதிர்ச்சியிலிருந்து இன்னும் மீளவில்லை.

மனக் குழப்பங்களைத் தவிர்ப்பதற்காக அன்று மாலை கன்னியாகுமரித் தெய்வத்தை வணங்கப் புறப்பட்டாள் மகாராணி. தளபதி வல்லாளதேவனும், அதங்கோட்டாசிரியரும், பவழக்கனிவாயரும் மகாராணியை எதிர்பார்த்துக் கன்னியாகுமரியில் காத்திருந்தனர்.

மகாராணியும் மற்றவர்களும் கடலின் இருபுறத்துக் காட்சிகளையும் ரசித்துவிட்டு ஆலயத்துக்குள் செல்லும்போது தளபதி மட்டும் கடற்கரையிலேயே தங்கி விட்டான். கடலோரத்துப்பாறை இடுக்கில் சந்தேகத்துக்குரிய மனித உருவங்கள் அவன் பார்வையில் பட்டன. அவன் கடலுக்குள் இறங்க அந்தப் பாறையருகே சென்றபோது அங்கே யாரையும் காணமல் திகைத்தான். அப்போது இருபுறமும் இரண்டு வாள்நுனிகள் அவன் தோள்பட்டைகளில் உரசின. அந்தச் சமயத்தில் கோவிலுக்குள் நுழைய இருந்த மகாராணியாரோடு அதங்கோட்டாசிரியரின் மகள் விலாசினியும், தளபதியின் தங்கை பகவதியும் வந்து சேர்ந்து கொண்டனர். மகாராணியும் அந்தப் பெண்களும் கோவிலின் இருண்ட பிராகாரத்துக்குள் சென்று கொண்டிருந்தபோது மேலே காற்று நுழைவதற்காக இருந்த துவாரத்தின் வழியே ஒரு வேல் பாய்ந்து கல் தரையில் மோதியது. பகவதி 'வீல்' என அலறிக் கொண்டே மகாராணியாரைப் பின்னால் இழுத்துத் தள்ளி விட்டதனால் வானவன்மாதேவியாரின் உயிர் பிழைத்தது. பகவதியின் கூப்பாட்டைக் கேட்டு வீரர்கள் ஓடினர்.

கடற்கரைப் பாறையில் இரண்டு முரடர்களின் வாளுக்கு இரையாக இருந்த தளபதி சாமர்த்தியமாகப் போரிட்டு ஒருவனை அடித்துத் தள்ளினான். மற்றவனைக் கையும் களவுமாகப் பிடித்து அவனிடமிருந்த ஒரு இரகசியத் திருமுகத்தையும் கைப்பற்றிய போது, கோவிலுக்குள், "வேலை எறிந்துவிட்டு ஓடுகிறான். விடாதே, பிடி" என்ற கூப்பாடு கேட்டது. உடனே தளபதி அவனையும் இழுத்துக் கொண்டு ஓடிக் கோவில் வாசலை அடைந்தான். தன்னிடம் பிடிபட்ட ஒற்றனைப் பரிவாரத்து வீரரிடம் ஒப்படைத்து விட்டு, மகாராணியைச் சந்திக்கக் கைப்பற்றிய திருமுகத்தைக் கொடுத்தான். மகாராணி, விரக்தி நிறைந்த பேச்சுக்களைப் பேசி அதை அவனிடமே திருப்பிக் கொடுத்து விட்டாள். மறுநாளே இடையாற்று மங்கலம்நம்பி தலைமையில் தென்பாண்டி நாட்டுப் பேரவையைக் கூட்டித் தன் குமாரன் இராசசிம்மனைத் தேடி வருமாறு கூறினாள். தளபதி மகாராணியிடம் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும் போது பிடிபட்ட ஒற்றன் தப்பிச் சென்று விட்டதாகக் காதருகில் வந்து மெல்லச் சொன்னான் ஒரு வீரன்.

தென்பாண்டி நாட்டின் கூற்றத் தலைவரும், மகாமண்டலேசுவரரும் ஆகிய இடையாற்று மங்கலம் நம்பியைச் சந்திக்கப் புறப்பட்டான் தளபதி. புறப்படுவதற்கு முன் மற்றக் கூற்றத் தலைவர்களையும் அரண்மனைக்கு அழைத்து வருமாறு தூதனுப்பினான். மகாராணியாரைக் கொல்லவந்த மூன்று ஒற்றர்களுமே தப்பி விட்டார்களே என்ற வருத்தத்துடன் இடையாற்றுமங்கலம் தீவுக்கு இப்பால் பறளியாற்றங்கரையை அடைந்த தளபதி அங்கே புறப்படத் தயாராயிருந்த தோணியில் இடையாற்றுமங்கலம் நம்பியையும், அவர் புதல்வியையும், ஒரு இளந் துறவியையும் கண்டு திகைத்தான். நம்பி சிரித்துக் கொண்டே தளபதியையும் வரவேற்றுப் படகில் உட்கார இடமளித்தார். தோணி மகாமண்டலேசுவரர் மாளிகையை நோக்கிச் சென்றது.

இங்கு இவ்வாறிருக்க, கன்னியாகுமரியில் யாரோ எறிந்த வேலுக்கு உயிர் தப்பி அரண்மனை திரும்பியிருந்த மகாராணியின் மனத்தில் பயமும் குழப்பமும் உண்டாயின. மகாராணியின் மனத்துக்கு நிம்மதியளிப்பதற்காக அன்றிரவு நிலாமுற்றத்தில் விலாசினி நாட்டிய மாடினாள். பகவதி பாட்டுப்பாடினாள். அவள் பாடிய திருவாசகப் பாட்டு மகாராணியாரின் மனத்தில் சிந்தனை அலைகளை எழுப்பிற்று. பவழக்கனிவாயர், அதங்கோட்டாசிரியர், அந்த இரு பெண்கள் ஆகியோரின் கூட்டுறவுக்கு நடுவே தன் துயரத்தை மறக்க முயன்றாள் மகாராணி. அப்போது நிலாமுற்றத்துக்கு அருகிலிருந்த மகிழமரக் கிளை முறிந்து யாரோ குதித்து ஓடும் ஓசை கேட்டது.

பறளியாற்றில் படகில் சென்றபோது உடன்வந்த வாலிபத் துறவி மட்டும் தன்னோடு பேசாதது தளபதிக்குச் சந்தேகத்தை உண்டாக்கியது. மாளிகையை அடைந்ததும் தம் புதல்வியிடம் துறவியை வசந்த மண்டபத்தில் தங்கச் செய்யுமாறு ஒப்படைத்துவிட்டுத் தளபதியை அந்தரங்க அறைக்கு அழைத்துச் சென்றார் நம்பி. அந்தரங்க அறையில் அவரிடம் முன்னெச்சரிக்கையோடும், கவனத்தோடும் பேசிய தளபதி கன்னியாகுமரியில் கைப்பற்றிய ஓலையைப் பற்றி மட்டும் சொல்லாமல் மறைத்தான். அவரோ, "உன் இடுப்பில் மறைத்து வைத்திருக்கும் அந்த ஓலையை என்னிடம் காட்டி விடுவதுதான் முறை"

நா. பார்த்தசாரதி

என்று வழுவில் கேட்டு வல்லாளத் தேவனேயே வியப்புக் கடலில் ஆழ்த்தினர்.

மகாராணி கன்னியாகுமரிக்கு வந்திருந்த அதே நாள் மாலை விழிஞம் துறைமுகத்தில் மகாமண்டலேசுவரரையும் அவருடைய புதல்வி குழல்மொழியையும், அந்தரங்க ஒற்றனை நாராயணன் சேந்தன் என்னும் குட்டையனையும் காண முடிகிறது. அவர்கள் யாரோ வரும் கப்பலை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். "நீ கன்னியாகுமரி சென்று அங்கு வரும் மகாராணியாரோடு உடனிருந்து கவனி. நாங்கள் கப்பலில் வருபவரை அழைத்துக் கொண்டு சுசீந்திரம் வழியாக இடையாற்றுமங்கலம் செல்வோம். முடிந்தால் கன்னியா குமரியிலிருந்து திரும்பும்போது இடைவழியில் சுசீந்திரத்தில் எங்களைச் சந்தித்து விட்டுப் போ!" என்று சொல்லி நாராயணன்சேந்தனை அங்கிருந்து அனுப்பினர் மகா மண்டலேசுவரர்.

கன்னியாகுமரிக்குப் போகிற வழியில் சேந்தன் ஒரு புன்னைமரத் தோட்டத்துக்கருகே சிலர் கடலில் குளித்துக் கொண்டிருப்பதைக் கண்டான். அவர்களுடைய உடைகள் இருந்த மரத்தடியில் நின்று அங்கே தலைப்பாகைக்குள் கிடந்த திருமுக ஓலையை எடுத்துப் பார்த்தான். அவன் மனத்துக்குள் அவர்களைப் பற்றிச் சந்தேகம் உண்டாயிற்று. அதே சமயத்தில் அவர்கள் உடைகளை நாடி வரவே அவன் அங்கிருந்து மெதுவாக நழுவிச் சென்று விட்டான்.

அதன்பின் அன்றுமாலை கன்னியாகுமரியில் மகாராணியார் விஜயம் செய்திருந்த போது நடந்த எல்லா நிகழ்ச்சிகளையும் சேந்தன் மறைந்திருந்து பார்த்துக் கொண்டான். மகாராணி அரண்மனைக்குத் திரும்பும்போது பின்னலேயே தானும் தொடர்ந்து சென்ற அவன், இடையில் சிறிது நேரம் சுசீந்திரம் சென்று விழிஞத்திலிருந்து தம் புதல்வியுடனும் ஒரு புதிய இளம் துறவியுடனும் அங்கு வந்திருந்த இடையாற்றுமங்கலம் நம்பியிடம் அதுவரையில் நடந்தவற்றைக் கூறிவிட்டு, அவருடைய கட்டளைப்படி மேலும் மகாராணியாரைப் பின்பற்றிச் சென்றான்.

சுசீந்திரம் பாதிரித் தோட்டத்தின்வழியே அவனுடைய குதிரை சென்றபோது கன்னியா குமரியில் மகாராணியைக் கொல்ல முயன்ற அந்த மூன்று ஒற்றர்களும் குதிரையை வழிமறித்துக் கொண்டனர். அவன் சாதுரியமாக அவர்களுடைய பிடியிலிருந்து தப்பிப் புறத்தாய நாட்டு அரண்மனை நந்தவனத்தில் போய் ஒரு மகிழ மரத்தில் ஏறி உட்கார்ந்து மறைந்து கொண்டான். அந்த ஒற்றர்களும் விடாமல் அவனைத் துரத்திக் கொண்டு வந்து அதே மகிழ மரத்தில் ஏறவே கிளை முறிந்தது. சேந்தன் தப்பினன். மற்றவர்கள் ஓடி விட்டனர். தப்பிய சேந்தன் இடையாற்றுமங்கலம் புறப்பட்டான்.

அந்தரங்க மண்டபத்தில் "உன் மடியிலிருக்கும் ஓலையைக் காண்பி!" என்று மண்டலேசுவரர் கூறியதைக் கேட்டுத் தளபதி மலைத்துப் போயிருந்த போது கதவைத் திறந்து கொண்டு சேந்தன் உள்ளே நுழைந்தான். சேந்தனும், நம்பியும் பேசிய பேச்சுகள் தளபதியை மடியிலிருந்து ஓலையை எடுத்துக் கொடுக்கும்படி செய்து விட்டன. ஓலையை வாங்கிப் படித்தார் மகாமண்டலேசுவரர். "மகாராணியைக் கொலை செய்யவும், தென் பாண்டி நாட்டை அடிமைப் படுத்தவும் வடதிசை மூவரசர் செய்திருந்த சதி அதிலிருந்து வெளியாயிற்று. ஓலையைப் படித்து முடித்ததும் அதைத் தளபதியிடம் திருப்பிக் கொடுக்காமல் குபீரென்று பக்கத்திலிருந்த தீபத்தில் காட்டி எரித்து விட்டார் நம்பி. தளபதிக்குத் திகைப்பை உண்டாக்கியது அந்தச் செயல்.

உறையூர்க் கோட்டையில் சோழன் பராந்தகன், கொடும்பாளூர் மன்னன், அரசூருடையான் ஆகிய வடதிசை மூவரசரும் சேர்ந்து சதித்திட்டம் வகுத்துத் தென்பாண்டி நாட்டு மகாராணியையும், கடல் கடந்து சென்றிருப்பதாகக் கருதப்பட்ட குமார பாண்டியனையும் கொலை செய்ய ஆட்களை நாகப்பட்டினத்திலிருந்து கப்பல் மூலம் அனுப்பியிருந்தனர். அவர்களிடமிருந்துதான் மேற்கூறிய ஓலை தளபதியால் கைப்பற்றப்பட்டது. அதைக் கொண்டு வந்த ஒற்றர்கள் தென்பாண்டி நாட்டை அடைந்ததும் முன்சிறை அறக்கோட்டத்தில் வந்து தங்க இடம் கேட்டு அதன் மணியகாரனை அண்டராதித்த வைணவனிடமும் அவன் மனைவி கோதை நாச்சியாரிடமும் வம்பு செய்து அவமானப் பட்டுக்கொண்டு போக நேர்ந்தது. சத்திரத்து மணியகாரன் நாராயணன் சேந்தனுக்குத் தமையன் முறையினன்.

மகாமண்டலேசுவரர் ஓலையை எரித்ததாலும், வேறு பல காரணங்களாலும் அவ



ரைப் பற்றிப் பலவிதமான சந்தேகங்களோடு அன்றிரவு இடையாற்றுமங்கலம் விருந்தினர் மாளிகையில் உறக்கம் வராமல் தவித்துக் கொண்டிருந்தான் தளபதி. அப்போது அந்த மாளிகையின் தரை அதிர்ந்து உண்டாகிய ஓசையால் தூண்டப்பட்டு வெளியே வந்த தளபதி, அருகிலுள்ள லதா மண்டபத்துக்குக் கீழே ஒரு பாதாள மண்டபம் இருப்பதைக் கண்டுபிடித்து உள்ளே இறங்கிச் சென்றான்.

அந்த மண்டபத்தில் ஆயுதக் குவியல்களுக்கு நடுவே சேந்தன், நம்பி, குழல்மொழி அவர்கள் எல்லோருக்கும் மேலாக எங்கோ ஓடிப் போயிருப்பதாகச் சொல்லப்பட்ட குமார பாண்டியனையும் பார்த்து வியப்புக் கடலில் மூழ்கினான் தளபதி. தானே அப்போது நம்பியிடம் அகப்பட்டு விடுவோமோ என்ற பயத்துடன் கவனமாகப் பாதாள மண்டபத்திலிருந்து வெளியேறி வசந்த மண்டபத்துக்கு வந்து அங்கே பொற்கட்டிலில் உறங்கும் அந்தத் துறவியைப் பார்த்தான். அவன் உள்ளத்தில் சில ஐயப்பாடுகள் உண்டாயின. அவன் மனம் குழம்பினான்.

இது இவ்வாறிருக்க, விரக்தி நிறைந்த மனநிலையோடு இருந்த மகாராணி அன்றிரவு வாழ்வை வெறுத்து அரண்மனை நீராழி மண்டபத்துக்கு அருகிலிருந்த பாழும் கிணற்றில் விழுந்து உயிரை மாய்த்துக் கொள்ள முயன்றாள். நல்லவேளையாக அப்போது பகவதி அங்கே வந்து மகாராணியைக் காப்பாற்றினாள். அதே நாள் இரவு முன் சிறை அறக்கோட்டத்தில் அண்டராதித்த மணியகாரன் ஊரில் இல்லாமலிருக்கும்போது திடீரென்று அவனுடைய மனைவி கோதை காணாமற் போய் விட்டாள். முன்பு அவனால் அவமானப்பட்ட முரட்டு ஒற்றர்கள் பழி வாங்கி விட்டார்கள். ஊரிலிருந்து திரும்பிய மணியகாரன் மனைவியைக்காணாமல் அதிர்ச்சியடைந்து தம்பி நாராயணன் சேந்தனின் உதவியை நாடலாமென்று இடையாற்றுமங்கலம் புறப்பட்டான். போகிறபோது பாதிரித் தோட்டத்து வழியில் ஒரு மரத்தில் தன் மனைவி கட்டுண்டு மயங்கிக் கிடப்பதைக் கண்டு விடுவித்துக் கொண்டு திரும்பினான்.

**ம**றுநாள் காலையில் புறத்தாய நாட்டு அரண்மனையில் பேரவைக் கூட்டத்துக்காகக் கூற்றத் தலைவர்கள் கூடிவிட்டனர். கூட்டத்துக்கு இன்றியமையாதவர்களான மகாமண்டலேசுவரரும், தளபதியும் மட்டும் இன்னும் வந்து சேரவில்லை.

இந்த நிலையில் எதிர்பாராத சில நிகழ்ச்சிகள் நடந்தன. இரவோடிரவாக இடையாற்று மங்கலத்திலிருந்து யாருக்கும் தெரியாமல் வெளியேறிய தளபதி கோட்டாற்றிலுள்ள படைத்தளத்துக்குச் சென்று மகாராணிக்குப் பாதுகாப்பாக மகர நெடுங்குழைக்காதன் தலைமையில் ஆபத்துதவிப் படைகளை அரண்மனைக்கு அனுப்பினான். விடிந்ததும் தளபதியைக் காணாமல், நாராயணன் சேந்தனும், மண்டலேசுவரரும் இடையாற்று மங்கலம் தீவு முழுவதும் தேடினார்கள். பின்பு, நம்பியைக் கூற்றத் தலைவர் கூட்டத்துக்கு அனுப்பி விட்டுச் சேந்தன் கோட்டாற்றுப் படைத்தளத்திற்குவந்துதளபதியை வியப்பிலாழ்த்தினான். சேந்தனும், தளபதியும் அரண்மனைக் கூட்டத்துக்குப் புறப்பட்டார்கள். சாலையில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டிருப்பதாகக் கூறித் திருநந்திக்கரை சுற்றுவழி மூலம் தளபதியை அழைத்துக் கொண்டு போனான் நாராயணன் சேந்தன்.

நம்பி, சேந்தன், எல்லோரும் சென்றபின் இடையாற்று மங்கலம் தீவில், வசந்த மண்டபத்துப் பொற்கட்டிலில் உறங்கிக் கொண்டிருந்த இளந் துறவியை மகா மண்டலேசுவரரின் புதல்வி எழுப்பி நீராட அழைத்துக் கொண்டு போகிறாள். போகும்போது ஒருவருக்கொருவர் உல்லாசமாகப் பேசிக் கொண்டார்கள். துறவி நீராடும் போது, அவள் அவருடைய பூசைக்கு மலர் கொய்யச் சென்றாள். அப்போது படகோட்டி அம்பலவன் வேளான் அவளருகே வந்து துறவியைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொள்ளச் சொல்லி நம்பி கூறி விட்டுப் போனதாக ரகசியமாகச் சொன்னான்.

இது இவ்வாறிருக்க, அங்கே அரண்மனையில் கூற்றத் தலைவர் கூட்டத்துக்கு வந்து கூடியிருந்தவர்கள் மந்திராலோசனை மண்டபத்தில் அமர்ந்து மனம் போனபோக்கில் பேசிக் கொண்டிருந்தார்கள். மகாராணியாரும், மகாமண்டலேசுவரரும் வந்தவுடன் அமைதி நிலவியது. மண்டபத்தைச் சுற்றும் முற்றும் பார்த்த மண்டலேசுவரர் சுற்றிலும் கட்டியிருக்கும் திரைகளை அகற்றுமாறு ஆணையிட்டார். அப்போது திரைக்குப் பின்னா



விருந்து யாரோ மிக மிக அவசரத்துடன் வேகமாக நடந்து செல்லும் ஒலி கேட்டது.

அரண்மனைக் கூட்டத்துக்காகத் திருநந்திக் கரை வழியே சுற்றி வந்து கொண்டிருந்த சேந்தனும் தளபதியும் உச்சிப் போதுக்குத் திருநந்திக் கரையை அடைந்தனர். அங்கே ஒரு சமணப் பள்ளியில் தண்ணீர் குடிக்கப் போன தளபதி மடத்து அதிபரிடம் "சாலை உடைப்பெடுக்கவில்லை" என்று அறிந்து பொய் கூறிய சேந்தன் மேல் அளவற்ற சினம் கொண்டான். வெளியே வந்து பார்த்தால் சேந்தனையும் காணவில்லை, குதிரைகளையும் காணவில்லை. அங்கே இருந்த ஒரு பூக்காரப் பெண்ணிடம் விசாரித்தான். அவள் ஊமையாதலால் பதில் சொல்லவில்லை. ஏமாற்றத்தோடு கால்நடையாக நடந்தான் தளபதி.

இடையாற்று மங்கலத்தில் துறவியின் பூசை முடிந்ததும், அவர் விருப்பப்படியே இடையாற்றுமங்கலம் மாளிகையை அவருக்குச் சுற்றிக் காட்டலானாள் குழல்மொழி. யாருக்கும் காட்டக் கூடாததும் பரம இரகசியமுமான ஒன்றை அவள் துறவிக்குக் காட்டாமல் மறைத்தாள். ஆனால் துறவியோ அந்த இரகசிய இடத்தில் என்ன இருக்கிறதென்பதை ஆருடம் கூறிச் சிரித்தார். துறவிக்கு அது எப்படித் தெரிந்ததென்று திகைத்தாள்.

அரண்மனையில் யாரோ அன்னியர் காலடிச் சத்தம் கேட்டதும் கூட்டத்தில் சலசலப்பு ஏற்பட்டது. கூட்டத்தை ஒத்திப் போட மகாராணி யோசனை கூறினார். ஆனால் அன்றே கூட்டம் நடக்க வேண்டும் என்றார் மகாமண்டலேசுவரர்.

தளபதி நடந்து நடந்து கடைசியில் அறக்கோட்டத்துக்கு வந்து சேர்ந்தான். அச்சமயம் அண்டராதித்த வைணவனும் கோதையும் ஒரு குதிரை வீரனை வழியனுப்பினார்கள். தளபதியைக் கண்டதும், அவன் தான் கரவந்தபுரத்துத் தூதன் என்றும், அவசர ஓலையுடன் அரண்மனைக்குச் செல்வதாகவும் தெரிவித்தான். இனி மேலே படியுங்கள்.

## அத்தியாயம் 27

# நிலவறைக்குள் நிகழ்ந்தவை

திருநந்திக் கரையில் தளபதியை ஏமாற்றி விட்டு அவசரமாகக் குறுக்கு வழியில் அரண்மனைக்குத் திரும்பி வந்து விட்டான் நாராயணன் சேந்தன். கோட்டை வாயிலில் நுழையும்போதே குறிப்பாகச் சில காட்சிகளைக் கண்டு கொண்டான் அவன். மதில் சுவரைச் சுற்றி மூலைக்கு மூலை காவல் வீரர்கள் இரண்டொருவராகக் கூடி நின்று கொண்டிருந்தனர். தான் ஏறி வந்த குதிரை, கைப்பற்றிக் கொண்டு வந்த தளபதியின் குதிரை இரண்டையுமே கோட்டைச் சுவர்களின் அருகே ஒரு மரத்தடியில் கட்டி விட்டு அதன் பின்புதான் கோட்டைக்குள் நுழைந்தான் சேந்தன்.

கோட்டையின் முதல் இரண்டு பிரதான வாயில்களைக் கடந்த பின்பே மகாராணியின் அரண்மனை அமைந்திருந்தது.

பராந்தகப் பெருவாயிலைக் கடக்கின்ற வரை நாராயணன் சேந்தனுக்கு ஒரு தடையும் ஏற்படவில்லை. மதிற் சுவரோரத்தில் சிறு சிறு கும்பல்களாகக் காவல் நின்று கொண்டிருந்த வீரர்கள் கூட அவனை ஒரு பொருட்டாக மதித்துத் தடுக்கவோ, விசாரிக்கவோ செய்யாமல் போக விட்டு விட்டார்கள். ஆனால் வரகுணன் வாயிலை நெருங்கியபோது தான் அன்றைய தினம் கோட்டையிலும், அரண்மனைக்குள்ளும், எவ்வளவு கடுமையான பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள் என்பது அவனுக்குத் தெரிய வந்தது.

அவனுக்குப் பின்புறம் 'சுரிகை' எனப்படும் பயங்கரமான சுழல் வாளை அணிந்த இரண்டு வீரர்கள் மௌனமாகப் பின்தொடர்ந்தனர். நாராயணன் சேந்தனுக்கு ஆத்திரம், ஆத்திரமாக வந்தது. கோபத்தோடு பின்புறம் திரும்பித் தன் புறாமுட்டை போன்ற பெரிய கண்களை உருட்டி விழித்து அவர்களைப் பார்த்து, "ஏன் என்னைப் பின்தொடருகிறீர்கள்? நான் மகாமண்டலேசுவரரின் அந்தரங்க ஒற்றன். அவர் இங்கே தங்கியிருக்கும்போது அவரைப் பார்ப்பதற்கு வரவும், போகவும் எனக்கு முழு உரிமை உண்டு. நான் சந்தேகத்துக்குரியவனா, உளவறிய வந்திருப்பவனா, அல்லவே?" என்று சீற்றத்தோடு கேட்டான். அப்போது சேந்தனுக்குக் கண்கள் கோவைப் பழம்போல் சிவந்து விட்டன. உதடுகள் துடித்தன.

ஆனால் அவனுடைய கேள்விக்கு அவனைப் பின் தொடர்ந்த வீரர்கள் பதிலே சொல்லவில்லை. அவ்வளவேன்? அவனுடைய சினமும், கொதிப்புடன் வெளிப்பட்ட கேள்வியும், அவர்கள் முகங்களில் உணர்ச்சியின் ஒரு சிறிய மாறுதலையாவது தோற்றுவிக்க வேண்டுமே. அதுகூட இல்லை, அவர்கள் சிலைபோல் நின்றனர். அவன் நடந்தால் அவர்களும் பின்பற்றி நடந்தனர், நின்றால் அந்த வீரர்களும் நின்றனர்.

சேந்தன் திகைத்தான். அவன் மனத்தில் சந்தேகம் வளர்ந்தது. சிறிது திகிலும் எட்டிப் பார்த்தது. அவர்களை

அடியிலிருந்து முடிவரை நன்றாகக் கவனித்துப் பார்த்தான். ஆபத்துதவிப் படையைச் சேர்ந்தவர்களாக இருக்கலாமென்று அவனுக்குத் தோன்றியது. அவர்கள் நடந்து கொண்ட விதமும் அவர்களைப் பற்றி அப்படி அனுமானிக்க ஏற்றதாகத்தான் இருந்தது.

"வந்தது வரட்டும்! இவர்களிடம் கேள்வி கேட்டுக் கெஞ்சிக் கொண்டு நிற்பதில் பயனில்லை. துணிந்து உள்ளே நுழைகிறேன். முடிந்ததைச் செய்து கொள்ளட்டும்" என்று பின்னால் வருபவர்களைக் கவனிக்காமல் வரகுணன் வாயிலில் நுழைந்தான் அவன். பின்னால் தொடர்ந்து வந்த ஆபத்துதவிகள் வரகுணன் வாயில் வரைதான் அவனைப் பின்பற்றி வந்தனர். அதற்குமேல் அவர்கள் அவனைப் பின்தொடரவும் இல்லை; உள்ளே போகக் கூடாதென்று தடுக்கவும் இல்லை. பேசாமல் வாயிலுக்குஇந்தப்புறமே ஒதுங்கி நின்றுகொண்டனர். ஆனால் வாயிற் காவலுக்கென்றே வழக்கமாக அந்த இடத்தில் அரண்மனையைச் சேர்ந்த வேறு இரு காவலர்கள் இருப்பதுண்டு. அவர்கள், "காலையிலிருந்து அரண்மனையில் கூற்றத் தலைவர்களின் அந்தரங்க ஆலோசனைக் கூட்டம் நடக்கிறது. உள்ளே யாரையும் விடுவதற்கு அனுமதி இல்லை" என்று சொல்லி நாராயணன் சேந்தனைத் தடுத்து விட்டனர்.



"காவல் வீரர்களே! உங்கள் கடமை உணர்ச்சியைப் பெரிதும் பாராட்டுகிறேன். அந்தரங்க ஆலோசனைக் கூட்டம் நடக்கும்போது யாரையும் உள்ளே விடக்கூடாது என்ற கட்டுப்பாடு நல்லதுதான். ஆனால் எல்லோரையும் அதற்காகத் தராதரம் பார்க்காமல் தடுத்து நிறுத்தி விடலாமா? நான் இப்போது உடனே மகாமண்டலேசுவரரைச் சந்தித்து ஓர் அவசரச் செய்தியைக் கூறியாகவேண்டுமே! உங்களிடம் வாதாடிக் கொண்டிருக்காமல் நான் திரும்பிப் போய்விட்டாலோ, என்னை உள்ளேவிட மறுத்த குற்றத்துக்காக நீங்கள்தான் பிறகு மகாமண்டலேசுவரரிடம் திட்டுக் கேட்க நேரிடும். எனக்கென்ன வந்தது? நான் பேசாமல் இப்போதே திரும்பிப் போய் விடுகிறேன்" என்றான் சேந்தன்.

அவனுடைய தந்திரமான பேச்சும், நடிப்பும் நல்ல பயனை அளித்தன.

"ஐயா! இருங்கள். போய் விடாதீர்கள். எங்களுக்கு எதற்கு வம்பு? உங்கள் பெயரைச் சொல்லுங்கள். உள்ளே போய் மகாமண்டலேசுவரரிடமே சொல்லி அனுமதி பெற்று வந்து விடுகிறேன். அதுவரையில் இப்படி நில்லுங்கள்" என்றான் காவலர்களில் ஒருவன். உடனே நாராயணன் சேந்தன் சிரித்துக் கொண்டே தன் பெயரைக் கூறினான். காவலன் அதைக் கேட்டுக் கொண்டு உள்ளே சென்றான்.

கோட்டைக்குள் ஆபத்துதவிகள் இரகசியக் காவல் புரிவதையும், காவல்-பாதுகாப்பு ஏற்பாடுகள் அதிகரித்திருப்பதையும் பார்த்தபோது அன்று ஏதோ சில முக்கிய நிகழ்ச்சிகள் அங்கு நடந்திருக்கவேண்டுமென்று நினைத்துக் கொண்டான் நாராயணன் சேந்தன்.

உள்ளே போனவன் திரும்பி வருகிற வரையில் மற்றவனிடம் பேச்சுக் கொடுத்துப் பார்த்தால் நடந்த நிகழ்ச்சிகள் பற்றி ஏதாவது தெரியும் என்று அவன் வாயைக் கிளறி வம்புக்கு இழுத்தான். ஆனால் அந்த மற்றொரு காவலன் சேந்தனின் கேள்விகளுக்கு அழுத்தலாக இரண்டொரு சொற்களில் பதில் சொல்லி முடித்து விட்டான். அவனிடமிருந்து எதையும் தெரிந்து கொள்ள முடியவில்லை சேந்தனுக்கு.

அதற்குள் உள்ளேசென்றவன் திரும்பி வந்தான். "மகா மண்டலேசுவரர் உங்களை அழைத்து வரச் சொன்னார்."

"நானே போய்க் கொள்வேன். நீ அழைத்துச் செல்ல வேண்டாம்" என்று கூறிவிட்டு வரகுணன் வாயிலைக் கடந்து உள்ளேசென்றான் நாராயணன்சேந்தன்.

அரண்மனையில் கொலு மண்டபத்தின் வடக்குப்புறத்தில் புலவர்கள் வாதிடும் இடமான அரசவைப் பட்டி மண்டபத்தில் கூற்றத் தலைவர்களின் கூட்டம் நடந்து கொண்டிருந்தது. 'அந்தரங்க மந்திராலோசனைக்கென்றே தனி மண்ட

பம் இருக்கும்போது அங்கே கூடாமல் பட்டி மண்டபத்தில் ஏன் கூடியிருக்கிறார்கள்?' என்ற கேள்வி சேந்தனின் மனத்தில் உண்டாயிற்று. பட்டிமண்டபத்தின் வெளிப்புறத்திலேயே மகாமண்டலேசுவரருக்காகக் காத்துக் கொண்டு நின்றான் அவன்.

சிறிது நேரத்தில் அவர் வெளியே வந்தார். "என்ன செய்தி? இப்பொழுது தான் வருகிறாயா?" என்று மலர்ந்த முகத்தோடு தம் அந்தரங்க ஒற்றனை வரவேற்றார். "சுவாமீ! தளபதியைத் திருநந்திக் கரை வரைக்கும் இழுத்தடித்து ஏமாற்றி விட்டேன்" என்று அவர் காதருகில் வந்து கூறினான் சேந்தன்.

"அதெல்லாம் சரிதான், சேந்தா! இப்போது வேறொரு திறமையான செயலை உன் கைகளில் ஒப்படைக்கப் போகிறேன். மந்திராலோசனை மண்டபத்தின் பின்புறமுள்ள நிலவறையில் நமக்கு ஆகாத எதிரி ஒருவன் புகுந்து விட்டான். அவன் புகுந்து சில நாழிகைகள்கூட ஆகியிருக்காது. நிலவறையின் கதவை வெளிப்புறமாக அடைத்துத் தாழ்போடச் செய்திருக்கிறேன். நீதான் நிலவறைக்குள் போய் அங்கு ஒளிந்திருப்பவனை யாருக்கும் தெரியாமல் வெளியே இழுத்துக் கொண்டு வர வேண்டும். என்ன சொல்கிறாய்? உன்னால் முடியுமா? முடியாதா?" என்று மெல்லிய குரலில் அவனுக்கு மட்டும் கேட்கும்படி சொன்னார் அவர்.



"ஐயோ! நான் மட்டும் தனியாகவா?" என்ற சொற்கள் சேந்தனுடைய நாக்கு நுனி வரை வந்து விட்டன. அவரிடம் தனக்கிருந்த பயம் மரியாதைகளை எண்ணி இவற்றைக் கூறிவிடாமல் 'ஆகட்டும்' என்பது போல் தலையை ஆட்டினான்.

"போ! முதலில் அதைக் கவனி! வேறு யாரையும் உன்னோடு துணைக்குக் கூப்பிடாதே!" என்று துரத்தினார் மகாமண்டலேசுவரர்.

"சுவாமீ! இன்னொரு இரகசியம்: உங்களிடம் சொல்லி விட்டுப் போய் விடுகிறேன்" என்றான் சேந்தன்.

"என்ன? சொல்லேன்!"

"அரண்மனையில் ஆபத்துதவிகள் வந்திருக்கிறார்கள் போலிருக்கிறதே?"

"அது எனக்கு முன்பே தெரியும்! நீ போய் உன் காரியத்தைப் பார்."

சேந்தன் நிலவறையை நோக்கிப் புறப்பட்டான். இருட் குகையாக, அந்தகாரக் களஞ்சியமாக இருக்கும் நிலவறையில் தனியாக நுழைய வேண்டுமென்பதை நினைத்தபோதே துணிவு மிகுந்தவனான நாராயணன் சேந்தனுக்கு பாதாதிகேச பரியந்தம் நடுங்கியது. ஒரு நாழிகை இரண்டு நாழிகையில், சுற்றித் தேடிப் பார்த்துவிடக் கூடிய நிலவறையா அது? விடிய விடியத் தேடினாலும் அங்கு ஆள் ஒளிந்து கொண்டிருப்பதைக் கண்டு பிடிக்க முடியாதே?

வெளிப்புறம் இழுத்து அடைத்திருந்த மரக் கதவைத் திறந்து கொண்டு நிலவறையின் இருண்ட படிகளில் இறங்கினான் சேந்தன். எந்த விநாடியும் அந்த இருள் பரப்பின் எந்த மூலையிலிருந்தும், எதிரி ஒருவனின் முரட்டுக் கைகள் தன் கழுத்திலோ, பிடரியிலோ பாய்ந்து அழுத்தலாம் என்ற முன் எச்சரிக்கை அவன் மனத்தில் இருந்தது.

படிகளைக் கடந்து நிலவறைக்குள் இறங்கியாயிற்று. நின்ற இடத்திலிருந்து மிரண்ட விழிகளால் நான்குபுறமும் பார்த்தான்.

வலதுபுறத்துச் சுவர் முழுவதும் மனிதர்கள் தலையிழந்த முண்டங்களாய்த் தொங்குவதுபோல் செப்புக் கவசங்கள் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்தன. இன்னொருபுறம் மின்னல் துண்டங்களைச் சுவரில் பிடித்து வைத்தது போல் வீர வாள்கள் விளங்கின. மூலைக்கு மூலை பழைய நாணயங்கள் குவிந்திருந்தன. நிலவறையில் தன்னைச்சுற்றிலும் சிறிதும் பெரிதுமாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்த சிலைகள் யாரோ உயிருடன் கூடிய மனிதர்கள் தன்னைப் போல் பயந்து ஒடுங்கி மௌனமாக அந்த இருளில் நின்று கொண்டிருப்பது போல் தோன்றியது.

வலது கையில் தாமரை மலரை ஏந்தி அபிநயம் பிடிப்பது போன்ற பாவனையில் ஒரு நடன மங்கையின் சிலை. வட்டக் கண்ணாடியால் தன் முகத்தை அழகு பார்த்துக் கொண்டே நெற்றிக்குத் திலகமிடும் கோலத்தில் ஒரு குமரிப் பெண்ணின் உயிரும் உணர்வும் துடிக்கும் உருவம். கைகளில் விளக்கு தாங்கி நிற்கும் விளக்குப் பாவைகளின் வெண்கலச் சிலைகள். பாண்டிய அரச பரம்பரையைச் சேர்ந்த மன்னர்களின் சிற்பங்கள்.

அப்போது இருந்தாற் போலிருந்து நடன மங்கை சிலைக்கு அருகில் நிழல் அசைவது போல் கறுப்பாக ஏதோ அசைந்தது.

"நில் அங்கேயே! ஒரு அடி நகர்ந்தாலும் உன் உயிர் உனக்குச் சொந்தமில்லை" என்று கத்திக் கொண்டே பாய்ந்தான் சேந்தன். அவன் கையில் இருந்த வாள் நடன மங்கையின் வெண்கலச் சிலையில் மோதி மணி அடித்தாற் போன்ற பெரிய ஓசையையும் எதிரொலியையும் உண்டாக்கி விட்டு இரண்டாக முறிந்து கீழே விழுந்தது. "வெறும் பிரமை தானோ?" என்று திகைத்து நின்றான். யாரோ மெல்லச் சிரிக்கின்ற ஒலி அவனுக்கு அருகில், மிக மிக அருகில் கேட்டது.

"யார் அது சிரிப்பது? மானமுள்ள ஆண்பிள்ளையானால் நேருக்கு நேர் வந்து நிற்க வேண்டும்."-பயத்தையும் நடுக்கத்தையும் மறைத்துக் கொண்டு தன் முழு மூச்சையும் அடக்கி இரைந்து கத்தினான் அவன். அவன் குரல் ஆயிரம் பதினாயிரம் எதிரொலிக் குரல்களாக மாறி அந்த நிலவறைக்குள் ஒலித்து அவனையே பயமுறுத்தின. எதிரொலி ஓய்ந்ததும் முன்பு கேட்ட அதே சிரிப்பொலி முன்னினும் பலமாகக் கேட்டது.

சேந்தன் இரண்டு கைகளாலும் இருளைத் துழாவிக் கொண்டு முன்னால் பாய்ந்தான். பிறந்த மேனியராய்ப் பல கன்னிப் பெண்கள் இருளில் நின்றுகொண்டு இருப்பது போல் அவனைச் சுற்றிலும் அவன் உயரத்துக்குச் சரியாகச் சிலைகள் நிறுத்தப்பட்டிருந்தன. அவற்றில் முட்டி மோதி மண்டையை உடைத்துக் கொள்ளாமல் இருட்டில் பார்த்து நடக்க வேண்டியிருந்தது. அவன் முன்னால் நடக்க, நடக்க அந்தச் சிரிப்பொலியும் அவனை விட்டுத் தள்ளிச் சென்று கொண்டே இருந்தது. திடீரென்று ஒரு பெரிய வௌவால் வேகமாகப் பறந்து வந்து சேந்தன் முகத்தில் மோதியது. அப்போது சேந்தனுக்கு ஏற்பட்ட அதிர்ச்சியில் யாரோ முகத்தில் ஓங்கி அடித்துவிட்ட மாதிரி இருந்தது. கையிலிருந்த ஒரே ஒரு பாதுகாப்புக்கருவியான வாளும் சிலையில் மோதிமுறிந்துவிட்டது.

உயிரின் மேலுள்ள இயற்கையான ஆசையும், பயமும் சேந்தனைக் கட்டுப்படுத்தி நிறுத்தின. சுவரில் வரிசையாகக் கட்டுப்பட்டுத் தொங்கும் வாள்களின் வரிசையிலிருந்து ஒன்றை உருவிக் கையில் எடுத்துக் கொண்டு அப்புறம் அந்த நிலவறை முழுதும் சுற்றலாமென்று எண்ணினான் அவன். பயம் அந்த முன்னெச்சரிக்கையை அவன் மனத்தில் எழுப்பி விட்டிருந்தது.

பதற்றமும், அவசரமும் உந்தித் தள்ளச் சுவர் அருகில் சென்று ஒரு வாளின் நுனியைப் பிடித்து இழுத்தான். அது மேற்புறம் நன்றாக இறுக்கிக் கட்டப்பட்டிருந்ததால் அவ்வளவு இலேசாக அவன் இழுத்த மாத்திரத்தில் கைக்கு வந்துவிடவில்லை. எனவே பக்கத்தில் சென்று இரண்டு கைகளாலும் பலங் கொண்டமட்டும் அதைப் பிடித்து இழுத்தான். அடுத்த விநாடி நூற்றுக் கணக்கான வெண்கல மணிகளை ஒரே சமயத்தில் யாரோ தாறுமாறாக அடித்தது போன்று ஓர் ஒலிக் குழப்பம் அங்கு உண்டாயிற்று. மடமடவென்று சுவரிலிருந்த அத்தனை வாள்களும், கேடயங்களும் சரிந்து உதிர்ந்தன. நாராயணன் சேந்தன் பின்னுக்கு விலகி நின்று கொண்டான். அவன் எதிர்பாராதது நடந்து விட்டது. அந்தச் சுவரில் கட்டப்பட்டிருந்த எல்லா வாள்களும் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடி வரை ஒரே நீளக் கயிற்றினால் கட்டப்பட்டிருந்தன. அவன் இழுத்த வேகத்தில் கயிறு அறுந்து விட்டது. அந்த எதிர்பாராத நிகழ்ச்சியால் அவன் திகைத்து நின்று கொண்டிருக்கும்போது மேலே நிலவறையிலிருந்து வெளியேறும் படியில் யாரோ ஏறி ஓடும் காலடியோசை கேட்டது. **(தொடரும்)**



புதுமை பெறுக!
இதம் பெறுக!
நளினமாய் இருங்கள்! நாள்முழுதும்!

மணமுள்ள சார்மிஸ் டால்கம் பௌடர் உபயோகித்த பின் நீங்கள் பெறும் உணர்ச்சிகள் இவை. சார்மிஸ் குளுமையும் புத்துணர்ச்சியும் அளிக்கிறது ... உன்னத மனோ ரம்மிய மணம் கொண்டது.




**சார்மிஸ்**
**டால்கம் பவுடர்**

உன்னத. மனோரம்மிய மணத்துடன்.

## இருட்டில் உங்களது துணைவன்



**எஸ்ட்ரேலா**
**பாட்டரீஸ்**



அணையாத வெளிச்சத்திற்கு எப்பொழுதும் எஸ்ட்ரேலாவை உங்கள் டார்ச்சில் உபயோகிக்கவும் நீடித்த உழைப்பு பிரகாசமான வெளிச்சம்




**எஸ்ட்ரேலா பாட்டரீஸ் லிட்.,**
பம்பாய் - மதராஸ் - டில்லி - கல்கத்தா - கான்பூர்

# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

50

எல்லாருக்கும் உணவும் துணியும் இன்னும் வாழ்வதற்கு வேண்டிய முக்கியமான பொருள்கள் எல்லாம் சமமாகக் கிடைக்கும்படியும் யாரும் அவையின்றி வருந்துவது இல்லாத படியும் சட்டங்களினாலும் அரசியல் பலத்தாலும் செய்ய முயற்சிகள் இப்போது பல தேசங்களில் நடைபெற்று வருகின்றன. இந்தவிதமான அரசியல் முயற்சி முற்காலத்தில் கனவிலும் யாரும் கண்டதில்லை. அந்தக் காலத்தில் ஏழைகளின் பசிக்கும் வறுமையினால் உண்டாகும் வேறு துயரங்களுக்கும் சமூக தருமம் விதித்து வந்த மருந்து ஒன்றே. அதாவது ஈகை. இரக்கமும் ஈகையும் தருமத்தில் முதல் இடம் பெற்று உலகத்தில் வறுமைக்கு மருந்தாகி வந்தன.

எல்லா நாடுகளிலும் எல்லா மதக் கொள்கையின்படியும் இரக்கம் மக்களின் கடமை என்றும் ஈகையே சிரேஷ்டமான தருமம் என்றும் வற்புறுத்தப்பட்டு வந்தது. 'தருமம்' என்றாலே தானம் என்றும் பிச்சை என்றும் பொருளாகி விட்டது. "ஐயா தருமம் கொடு!" என்றால் பிச்சை போடு என்று அர்த்தம்.

தற்காலத்தில் இந்தக் காரியத்தைச் சர்க்கார் எடுத்துக் கொண்டு வருவதால் பிச்சை போடுவதும் பிச்சைக்காரர்களைக் கண்டு இரங்குவதும் குறைந்து போயிற்று. அது குற்றமே ஆகும் என்றுகூட உணர்ச்சி ஏற்பட்டு விட்டது. ஈகையைப் பற்றி வள்ளுவர் உபதேசங்களைப் படிக்கும் போது, அந்தக் காலத்தில் அரசர்கள் மக்களின் சொத்தை மக்களுக்கே பூரண சுதந்திரத்துடன் விட்டு விட்டிருந்தார்கள் என்பதையும், இந்தக் காலத்து அரசியல் யோசனைகள் அந்தக் காலத்தில் இருக்கவில்லை என்பதையும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். அக்காலத்தில் வறியாரின் துயரத்துக்கு மருந்து ஈகை ஒன்றே.

ஈகையை உயர்த்திச் சொல்லும் பாட்டுக்கள் குறளில் வேகமும் மிக்க அழகும் மனத்தைக் கவ்வும் சொல் வன்மையும் கொண்டவை.

* * *

**ஆற்றுவார் ஆற்றல்**
**பசிஆற்றல் அப்பசியை**
**மாற்றுவார் ஆற்றலின்**
**பின்.**

உண்ணாவிரதம் இருந்து தவம் செய்பவர்கள் அதனால் ஆற்றல் பெறுவார்கள். ஆனால் அந்தத் தபசிகளின் ஆற்றலைவிட அதிக ஆற்றல், பசித்தவர்களுக்குத் தானம் செய்த புண்ணியவான்களினது.

தமக்குள்ள ஆற்றலைக் கொண்டு உபவாச விரதம் காக்கிறார்கள். அதனால் மேலும் ஆற்றல் பெறுகிறார்கள். இந்த இரண்டு ஆற்றல்களை விடப் பெரியதாகும், பசியைத் தீர்க்கப் பிச்சை போட்டவர்களின் ஆற்றல். அதாவது ஈகையினால் அடையும் புண்ணியத்தின் பலம்.

தான் பசித்திருக்கும் தவத்தைவிடப் பிறனுடைய பசியைத் தீர்த்தல் நல்லது. உபவாச விரதத்தைவிட ஈகை அதிகப் புண்ணியம் தரும்.

உபவாசம் இருப்பது மனத்தின் திடத்தைக் காட்டுகிறது. ஆனால், தான் நுகர்வதைக் குறைத்துக் கொண்டு பசித்தவருக்கு இரங்கி ஈவது அதை விடச் சிறந்த மன வன்மையாகும்.

**அற்றார் அழிபசி**
**தீர்த்தல் அஃதுஒருவன்**
**பெற்றான் பொருள்வைப்**
**புழி.**

வறுமையால் அனுபவிக்கும் பசி மனிதனுடைய நற்குணங்களையெல்லாம் அழித்து விடுகிறது. அப்படி

அழிக்கும் பசியைத் தீர்ப்பது மேலான செயல். பிறர் பசியைத் தீர்ப்பதற்காகக் கொடுத்த பொருள் யாரும் திருடாத நல்ல பத்திரமான காப்பில் வைக்கப்பட்டதாகும். தருமம் செய்வதே சொத்தைக் காத்தபடி. சொத்து அழியாத புண்ணியம் ஆகிவிடுகிறது. பெட்டியில் போட்டு மூடி வைத்துக் காப்பதைவிட, பிறர் பசியைத் தீர்க்கும் வழியில் செலவழித்துச் சொத்தைப் புண்ணியமாக மாற்றிவிடுவதே நல்ல காப்பு முறை.

*   *   *

சிலர் நெஞ்சில் ஈரம் இல்லாத லோபிகளாகித் தம்முடைய பொருளை யாருக்கும் தருமம் செய்யாமல் வைத்துக் காப்பாற்றிக் கடைசியில் அதை விட்டு விட்டுச் சாகிறார்கள். கூடக் கொண்டு போவதில்லை. இவர்கள் ஏன் இப்படிச் செய்கிறார்கள்? வறியருக்குக் கொடுப்பதால் உண்டாகும் இன்பத்தை இவர்கள் கண்டதில்லை. அதனால் இப்படிச் செய்கிறார்களோ? இந்த மடமைக்கு வேறு சமாதானம் காண முடியாது என்கிறார் முனிவர்.

**ஈத்துவக்கும் இன்பம்**
**அறியார்கொல் தாமுடைமை**
**வைத்திழக்கும் வன்கண**
**வர்**

*[அறியார்கொல் - அறியவில்லையோ!]*

பிறருக்கும் தமக்கும் எவ்வளவு இன்பம் தரும் வசதியைப் பெற்றும் அதைப் பயன்படுத்தாமல் சாகும் போது அந்தப் பொருளை விட்டுப் பிரிகிறார்கள். என்ன மடமை!

*   *   *

பிச்சை கேட்க நேர்ந்தது ஒருவனுடைய துர்ப்பாக்கியம். ஆனால் அதைவிடத் துர்ப்பாக்கியவான் ஆவான், கொடுக்க மனம் வராமல், பசியோடு வருகிறவர்களை உள்ளே விடாமல் கதவு சாத்தித் தனியாக உண்பவன்.

**இரத்தலின் இன்னாது**
**மன்ற நிரப்பிய**
**தாமே தமியர்**
**உணல்.**

*நிரப்பிய-தாம்பெற்ற செல்வத்தை. தமியர்-தமியராகி. தாமே தமியர் உணல் - பகிர்ந்து உண்ணாமல் தாமே தனியாக உண்பது. மன்ற-'இதைப் பற்றிச் சந்தேகமில்லை' என்று குறிக்கும் பழைய தமிழ்ச் சொல்.*

# செங்கோலும் ஜனநாயகமும்

**• க. சந்தானம் •**

## 12. சட்டசபைகள்

தற்காலத்திய ஜனநாயகம் இருவகைப்பட்டது. ஒன்று அமெரிக்க ஐக்கிய நாட்டிலுள்ள பிரசிடெண்ட் முறை. மற்றொன்று பிரிட்டிஷ் மந்திரி சபை முறை. இவ்விரண்டுக்குமுள்ள தத்துவங்களை நன்கு உணர்வது அவசியம்.

ஜனநாயகத்தில் சட்டம், நிர்வாகம், நியாயம் தனித்தனியாகச் சுதந்திர விபாகங்களாக இருக்க வேண்டுமென்பது பிரசிடெண்ட் முறை. முக்கிய நிர்வாகியான பிரசிடெண்டைப் பொதுத் தேர்தல் மூலம் ஜனங்கள் தேர்ந்தெடுக்கிறார்கள். நான்கு வருஷங்களுக்கு அவர் நிர்வாகம் செய்வார். எல்லா முக்கிய அதிகாரிகளையும் அவரே நியமனம் செய்வார். ஏதாவது பெரிய குற்றம் செய்து உத்தம நீதி மன்றத்தால் விசாரணை செய்யப்பட்டு, அமெரிக்க காங்கிரஸின் இரு சட்டசபைகளாலும் தீர்மானிக்கப்பட்ட பொழுதே அவரைப் பதவியிலிருந்து நீக்கலாம். அதுவரையில் அவர் தமது மனச்சாட்சிப்படி நிர்வாகத்தை நடத்த உரிமையுண்டு.

அவர் சட்ட ஸ்தாபனமாகிய காங்கிரஸில் அங்கம் வகிக்க மாட்டார். அதில் ஆஜராகி வாத விவாதங்களில் கலந்து கொள்ள முடியாது. அவருடைய முக்கிய நிர்வாகிகளும் அதற்கு வெளியில் தானிருக்க வேண்டும். காங்கிரஸ் சபை செய்த சட்டங்களை நிராகரிக்க அவருக்கு ஓரளவு அதிகாரம் இருக்கிறது. தனக்கு விருப்பமான சட்டம் செய்ய எவ்வித அதிகாரமுமில்லை.

அவ்விதமே, உத்தம நீதிமன்றத்தின் நீதிபதிகள் பிரசிடெண்டால் நியமிக்கப்பட்ட போதிலும், அவர்களை விலக்க எவருக்கும் அதிகாரமில்லை. குற்றவாளியென்றோ, தமது வேலைக்குத் தகுதியற்றவரென்றோ விசாரணை செய்து முடிவு செய்யப்பட்ட பின் காங்கிரஸ் சபைகளின் தீர்மானத்தின் பேரிலேயே அவர்களை விலக்கலாம்.

இம் மூன்று அதிகாரங்களும் தனியாகவும், சுதந்திரமாகவும் இல்லாவிடில் அரசாங்கம் ஏதேச்சாதிகாரமாகி விடக்கூடும் என்பது இவ்வேற்பாட்டின் மூலக் கொள்கை.

இவ்விதம் அரசாங்க அதிகாரத்தைப் பிரித்து விடுவதால் சட்டசபைக்கும், நிர்வாகத்துக்கும் தகுந்த தொடர்பும் ஒத்துழைப்பும் இல்லாமல் போய் விடும்; சட்ட ஸ்தாபனத்தின் பிரதான்யத்தை ஏற்றுக் கொள்வதே பிரதிநிதித்துவ ஜனநாயகத்தின் சரியான வழி என்பது பிரிட்டிஷ் மந்திரி சபை முறையின் முக்கிய கொள்கை. பொதுத் தேர்தலுக்குப் பின் பொதுஜன சபையில் பெரும்பாலரின் ஆதரவைப் பெற்ற கட்சியின் தலைவர்கள் மந்திரிசபை அமைத்து நிர்வாகம் செய்ய வேண்டும். எப்பொழுது சட்ட ஸ்தாபனத்தின் ஆதரவை இழந்து விட்டதோ, அப்பொழுதே ராஜிநாமா செய்து விட்டு, அந்த ஆதரவு பெற்ற இதர கட்சிகள் நிர்வாகத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும். ஒரு தனிக் கட்சிக்குப் போதிய ஆதரவு இல்லாவிட்டால், இரண்டு மூன்று கட்சிகள் சேர்ந்து கூட்டு மந்திரிசபை ஸ்தாபிக்கலாம்.

இந்த ஏற்பாட்டில் ஒரு முக்கிய சௌகரியமுண்டு. சட்டம், வரி, நிர்வாகம் மூன்றும் முரண்பாடின்றி ஒரே மந்திரி சபையின் தலைமையில், சட்டசபையின் மேற்பார்வையில் நடைபெறும். சட்டசபை அங்கத்தினர்கள் கட்சி மாறுதல்களாலும், கட்சிக்குள் ஏற்படும் தகராறுகளாலும் மந்திரிசபை அடிக்கடி மாறக் கூடுமென்பது இதன் பெரிய கஷ்டமாகும். இரண்டு பெரிய அரசியல் கட்சிகள் இருக்கும் நாடுகளில் இம்முறை அதிகச் சிக்கலின்றி நடைபெறும். பிரான்சு போல் பல சில்லறைக் கட்சிகள் இருக்கும் நாடுகளில் அரசாங்கம் நிலையின்றிப் பொது வாழ்வு சீர்குலைந்து போய்விடும்.

முறையைத் தவிர, அமைப்பிலும் ஜனநாயகம் இருவகைப்படும். ஒரு நாடு முழுதும் ஒரே சட்ட ஸ்தாபனத்துக்கும் ஒரே நிர்வாகத்துக்கும் உட்பட்டிருக்கலாம். அல்லது பிரதேசங்களாகப் பிரிக்கப்பட்டு, சில பொதுக் காரியங்கள் ஒரு மத்திய அரசாங்கத்தாலும், பிரதேசப் பணிகள் பிரதேச அரசாங்கங்களாலும் நடைபெறலாம். இரண்டாவது முறைக்கு சமஷ்டி (ஆங்கிலத்தில் பெடரேஷன்) என்று பெயர். பிரிட்டன், பிரான்ஸ், பெல்ஜியம், இத்தாலி முதலிய நாடுகள் ஏகராஜ்யமாக இருக்கின்றன. அமெரிக்க ஐக்கிய நாடு, கனடா, ஆஸ்திரேலியா, ஜெர்மனி, ஸ்விட்சர்லாந்து முதலிய தேசங்களில் சமஷ்டி அரசாங்கங்கள் இருக்கின்றன. பாரத அரசாங்கமும் சமஷ்டியே.

சமஷ்டியில் பிரதேச அரசாங்கங்களுக்கும் மத்திய அரசாங்கத்துக்குமுள்ள அதிகாரங்கள் தெளிவாகப் பிரிக்கப்பட்டு, அவற்றின் பரஸ்பரத் தொடர்புகள் நன்கு விளக்கப்பட்டு விரிவான அரசியல் அமைப்பு அவசியம் தேவை. அரசியல் அமைப்பின்றி, சம்பிரதாயத்தின் வழியாகவே பிரிட்டிஷ் ஜனநாயகம் இன்றும் நடைபெற்று வருகிறது. ஆயினும், அவசியம் நேரிட்டபொழுது அதன் பாகங்கள் சட்ட மூலமாக நிர்ணயிக்கப்பட்டு வருகின்றன.

பாரதத்தின் ஜனநாயகம் பிரிட்டிஷ் மந்திரி சபை முறையின் பேரில் அமைக்கப்பட்டுள்ளது. ஆதலால் ராஜ்ய மத்திய சட்டசபைகளிடமே அரசியல் அதிகாரம் அனைத்தும் குவிந்துள்ளது. சட்டசபைகளில் பெரும்பாலரான கட்சி இதைத் தாற்காலிகமாக ஏற்று அமுல் செய்து வரும். பெரும்பான்மைக் கட்சி தனது அதிகாரத்தைத் தலைவர்களிடம் ஒப்புவிக்கும். இவ்விதம் பெரும்பான்மைக் கட்சியின் தலைவர்களே அரசாங்கத்துக்கு அதிபதியாவர். அவர்களுக்குத் தலைவ

ரான பிரதமர் அல்லது முக்கிய மந்திரி ஏறக்குறைய சர்வாதிகாரி பதவியிலிருந்து வருவார். ஆனால் அவருடைய அதிகாரத்தின் அளவு கட்சியில் அவருடைய செல்வாக்கைப் பொருத்திருக்கும். கட்சியில் பெரும்பாலோர் அதன் தலைவரின் செல்வாக்கை அண்டியிருப்ப வர்களாயின், அதிகாரம் அவரிடம் இருக்கும். அப்படியின்றித் தலைவர் சொந்தமான செல் வாக்கு அதிகமின்றி கட்சியின் ஆதரவிலேயே தலைமை வகித்தால், அவருக்கு எதிர்ப்பு எளி தில் பெருகிப் பதவியும் போய் விடும்.

சட்ட ஸ்தாபனங்கள் இரண்டு சபைகளாக வும், ஒரு சபையாகவும் இருக்கலாம். பாரதத் தில் மத்திய அரசாங்கத்திலும், பத்து ராஜ் யங்களிலும் இரண்டு சபைகளும், மீதி ராஜ் யங்களில் ஒரு சபையும் இருக்கின்றன. எல்லா வற்றுக்கும் பொதுவானது பொதுஜன வாக் காளர்களால் பொதுத் தொகுதிகளில் தேர்ந் தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அடங்கிய ஜன சபை. மத்திய சட்ட ஸ்தாபனத்துக்குப் பார்லிமெண்ட் என்றும், அதன் சபைகளுக்கு லோக சபை, ராஜ்ய சபை என்றும் பெயர். ராஜ்யங்களில் ஜன சபை அசெம்பிளி என் றும், மேல் சபை கௌன்சில் என்றும் சொல் லப்படுகிறது. பொதுஜனப் பிரதிநிதிகள் கொண்ட சபைகளே மந்திரி சபை அமைப்ப திலும், வரிவிதிப்பதிலும் அதிகாரம் பெற்றி ருப்பதால் அவைகளே பிரதானமானவை.

ஒரு கட்சியின் அங்கத்தினர்கள் அறிவு, புத்திகூர்மை, வாக்கு வன்மை முதலியவற்றில் சிறந்தவர்களாக இருந்தால் திறமையான மந்திரி சபை அமைக்கவும், திட்டங்களுக்குப் பொதுஜன ஆதரவு தேடவும் சுலபமாக இருக்கும். ஆனால் அப்பொழுது மந்திரி பதவிக் குப் போட்டி பலமாக இருக்கும். அப்படி யின்றிக் கட்டுப்பாட்டின்படி வோட்டுப் போடு வதே தமது முக்கிய சிறப்பாகக் கொண்ட வர்களே மிகுதியாக இருக்கும் கட்சியில் பதவிப் போட்டி அதிகம் இல்லாதிருப்பினும், விரைவில் மக்களின் மதிப்பை இழந்துவிடும்.

பெரும்பான்மையாக இருந்து மந்திரி சபை அமைத்து அரசபுரியும் கட்சியைப் போலவே, அதற்கு எதிரான கட்சிகளும் ஜனநாயகத்தின் முக்கியமான அங்கங்கள். எதிர்க்கட்சி வலு வாகவும், திறமையான தலைவர்கள் பெற்ற தாகவும் இருப்பின், நிர்வாகம் பயபக்தியுடன் நடைபெறும். ஊழல்களுக்கு அஞ்சும். அடுத்த தேர்தலில் என்ன நடக்குமோ என்ற கவலை யில் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளும். எதிர்க் கட்சிகள் சிதறி, ஒன்றுக் கொன்று சண்டை போட்டுக் கொண்டிருந்தால், மந்திரி சபை அவைகளைப் பொருட்படுத்தாமல் தன் இஷ்டம் போல் நிர்வாகம் செய்யும்.

சட்டங்களைப் பரிசீலனை செய்து ஒழுங்கு படுத்துவதில்-எதிர்க்கட்சிகள் சிறந்ததொண்டு புரியக் கூடும்.

அதிகாரத்திலிருக்கும் கட்சிக்கும், எதிர்க் கட்சிகளுக்கும் கொள்கைகளிலும், திட்டங் களிலும் வித்தியாசங்கள் இருந்தபோதிலும், பரஸ்பர நன்மதிப்பும், சகிப்புத் தன்மையும் மிகவும் அவசியம். எதிர்க்கட்சிகளுக்கும், அவற்றின் தலைவர்களுக்கும் கௌரவமளித்து அவர்களின் வாதங்களை நன்கு ஆலோசித்து, உபயோகமான யோசனைகளை ஏற்றுக் கொள் வது அதிகாரத்தில் இருப்போரின் புத்திசாலித் தனமாகும். அபிப்பிராய பேதங்களைக் கொண்டு வெறுப்பையும், மனக் கசப்பையும் வளர்ப்பதால் ஜனநாயகத்தின் தன்மை திரிந்து விடும்.

ஏராளமான பணம் செலவழித்துச் சட்ட சபைகளில் புகுந்து, பின்னர் சட்டசபைக் கூட்டங்களுக்குச் செல்லாமலும், அதன் நட வடிக்கைகளில் கவனம் செலுத்தாமலும் தனது சட்டசபை ஸ்தானத்தைச் சொந்த கௌரவத்துக்கும், சுயநலச் சலுகைகளுக்கும் பயன்படுத்திக் கொள்ளுவோர் ஜனநாயகத் தின் விரோதிகள் என்று கூறுவது மிகை யாகாது. ஆயினும் இந்தக் கூட்டத்தாரின் தொகை வளர்ந்து வருகிறது. இதைக் கண்டு ஜனநாயகத்தில் பக்தியுள்ளவர்கள் வருந்தா மல் இருக்க முடியாது. கட்சிகளுக்குள் சூழ்ச்சி செய்து இவர்கள் மந்திரி சபைகளிலும் புகுந்து கொண்டு அரசாங்கத்தின் நிர்வாகத்தையும் சீர்குலைத்து விடுகின்றனர். இதைத் தடுப்ப தற்காகவாவது கட்டுப்பாடும், திறமையும் உள்ள எதிர்க்கட்சி இருப்பது அவசியம்.



"மிஸ் ஜுலேய்கா ஸெட்டிற்கு வர மறுக்கிறாள். **டினோபால்** உபயோகப் படுத்தப்பட்ட வெள்ளைப் புடவையை அணிந்திருக்கும் "எக்ஸ்டிரா" நடிகை, எல்லோர் உள்ளத்தையும் கவர்கிறாளாம்"




தயாரிப்பவர்கள் :

ஸுஹ்ருட் கெய்கி டிரேடிங் பிரைவேட் லிமிடெட், வாடி வாடி, பரோடா.

ஏக விநியோகஸ்தர்கள் :

ஸுஹ்ருட் கெய்கி டிரேடிங் பிரைவேட் லிமிடெட்

பி.ஓ. பாக்ஸ் 965, பம்பாய்

**சிறிதளவு டினோபால் வெள்ளைத் துணிகளை அதிவெண்மையாக்குகிறது**

SISTA'S-SG-43-TAM

தமிழ் நாட்டு ஆலயங்களுக்குப் போனால், பரம பக்தியோடு வந்தவர்கள், பொழுது போக்காகக் கோயில் பார்க்க வந்தவர்கள், ஆசாரசீலர்கள், ஆடம்பரப் பிரியர்கள், இளைஞர்கள், முதியவர்கள்—என்று பலதரப் பட்ட மக்கள் கூட்டங்களைக் காணலாம்.

அருணாசலம் பிக்சர்ஸ் தயாரிப்பான "பெரிய கோயில்" படமும் கூட அந்த நோக்கத்தோடு தயாரிக்கப்பட்ட படந்தானோ என்று முதலில் நான் ஐயங் கொண்டேன். அந்த ஐயம் வீணாகவில்லை.

இந்தப் படத்தில், கல்யாணமான பிறகு இன்ப வாழ்க்கை நடத்தும் இளம் தம்பதிகள் வருகிறார்கள்; காதல் புரியும் இளைஞனும், இளம் பெண்ணும் வருகிறார்கள்; இவற்றைப் பொருட்படுத்தாத தமிழாசிரியர் ஒருவர் வருகிறார்; அவர் மனைவியும் வருகிறாள்; கள்ளக் கடத்தல், சிறைச்சாலை, போலீசுக்கு 'டிமிக்கி' கொடுத்தல் யாவும் வருகின்றன. சதிகாரர்கள் உலவுகிறார்கள். பல வித நடனங்கள் வருகின்றன. தன் மகன் மாசற்றவன் என்று நிரூபிக்கப் பல இன்னல்களுக்கு ஆளாகும் வீரத்தாய் ஒருத்தி வந்து வீர வாசகமும் பேசுகிறாள். கடைசியில் சதிகாரர்கள் அகப்பட்டுத் தண்டனை அடைகிறார்கள்.

இந்தப் படத்துக்குத் தியேட்டரில் அதிகக் கூட்டம் இல்லையே என்ற கவலை யாருக்கும் வேண்டாம். ஏனென்றால் படத்தில் வரும் அந்தத் திருவிழாக் கூட்டம் மட்டும் நேரில் வருமானால் நிச்சயம் தியேட்டர் கொள்ளாது. ஆகவே அது படத்தில் வருவதே நல்லது!

தமிழாசிரியர் மூத்த மகன் செல்வமாக வரும் எம். என். ராஜம் மிகவும் நன்றாகவே நடித்திருக்கிறார். கணவனோடு இருந்த போது மகிழ்ச்சியில் நெகிழ்ந்த அவருக்கு, கணவனைப் பிரிந்து கண்ணீரில் கரையவும் சந்தர்ப்பம் கிடைக்கிறது.

நற்றமிழாசிரியராக வந்து நற்றமிழ் பேசும் வி. கே. ராமசாமி இந்தப் படத்தில் வழக்கத்துக்கு விரோதமாகக் கூச்சல் போடவில்லை. தமிழோடு ஹாஸ்யத்தையும் வளர்க்கிறார்.

வில்லன் மோகனசுந்தரமாக வரும் டி. ஆர். நடராஜனின் நடிப்பு இந்தப் படத்தில் குறிப்பிடத்தக்கதாயிருக்கிறது. பாட்டனும் பேரனுமாக அவர் இரு பாகங்களை ஏற்று மிகவும் நன்றாக நடித்திருக்கிறார்.

செல்வத்தின் கணவனாக, பிரேம் நசீர் வருகிறார். மனதில் பதியும்வண்ணம் இல்லாவிட்டாலும் பல பாகங்கள் ஏற்று நடித்திருக்கிறார். படத்தில் வரும் பாடல்கள் மிகவும் நன்றாக இருக்கின்றன. கண்ணாம்பா பேரனை வைத்துக்கொண்டு கொஞ்சம் பாட்டு அவற்றுள் குறிப்பிடத்தக்கது. அது மூன்று முறை பாடப்பட்டும் கூடக் கேட்பதற்கு அலுக்கவில்லை.

கண்ணாம்பாவின் நடிப்பு வழக்கம்போலவே இருக்கிறது என்றாலும், அதுமட்டும் இல்லையென்றால் இந்தப் படத்தில் நல்ல நடிப்பே இல்லை யென்று கூறி விடலாம். மேலும் கள்ளக் கடத்தலையும் சதிகாரர்களின் நாச வேலையையும் கண்ணாம்பாதான் அம்பலப் படுத்துகிறார்; அத்துடன் நில்லாமல், படத்தின் தலைப்புக்கும் அவர்தான் ஆதாரமாயிருக்கிறார்! உலகில் தாயார்தான் பெரிய கோயில் என்னும் கருத்து அவர் இல்லாவிட்டால் படத்தில் வெளிப்பட்டிருக்க முடியாதல்லவா?

படத்தின் வசனம் மிகவும் நன்கு அமைந்திருக்கிறது.

நடனங்களில் பல வகைகள் வருகின்றன. இந்தப் படத்தில், சாயி, சுப்புலக்ஷ்மி இருவரும் வில்லன் மோகனசுந்தரத்தின் அன்புக்குரியவளான இந்திராவின் இல்லத்தில் இடையிடையே தோன்றி ஆடுகின்றனர். அந்த நடனத்தில் விசேஷமாக ஒன்றும் இல்லாவிட்டாலும், துரிதகாலத்தில் நிகழும் சிறுமிகளின் ஹாஸ்ய அபிநயங்களும், லயவு குழைவுகளும் பாராட்டத் தக்க விதத்தில் இருக்கின்றன. ஆண்களும் பெண்களுமாக, மீனவர்கள் கடற்கரையில் உல்லாஸ நடனம் புரிகின்றனர். பிரேம் நசீரும், எம். என். ராஜமும் அவர்களுடன் சேர்ந்து நடனமாடுகின்றனர். அப்பொழுது பாடப்படும் பாட்டு இனிமையாயிருக்கிறது. படப்பிடிப்பும் அந்த இடங்களில் நன்றாயிருக்கிறது. ஒலிப்பதிவும் ஒழுங்காயிருக்கிறது.

கூட்டத்தில், இடிபடாமல், தாராளமாக உட்கார்ந்து கொண்டு மிகவும் சௌகரியமாகப் பார்க்கக் கூடிய படம் "பெரிய கோயில்!"




காந்தன்



# மனமுள்ள மறுதாரம்

பொதுவாக ஒரு படத்தைப் பார்த்ததும் 'இந்தப் படம் அதிக நாள் ஓடும்'—'ஓடாது' என்று அபிப்பிராயம் கூறுவது அவ்வளவு சிரமமான காரியம் இல்லை என்றுதான் நான் இதுகாறும் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் அது சில சமயம் அசாத்தியமான காரியமாகவும் ஆகிவிடுகிறது.

படம் வெளியிடப்படும் முன்பு ஸ்டூடியோவில் பார்க்கும்போது நம் மனத்தில் உருவாகும் அபிப்பிராயம் பொது மக்களின் அபிப்பிராயத்தோடு சில சமயம் ஒத்துப் போவதில்லை. அந்தக் குறிப்பிட்ட படத்தில், பொது மக்கள் விரும்பும் அம்சம் ஏதோ ஒன்று இருந்து விட்டால் போதும். தியேட்டர் நிறைந்து விடுகிறது.

சமீபத்தில் நான் பார்த்த படம் ஒன்று இப்படித்தான் என்னை ஏமாற்றி விட்டது. அந்தப் படத்தின் கதையில் சாரம் இல்லை; நடிகர்களின் நடிப்பிலும் விசேஷம் இல்லை; காட்சிகளும் அப்படி ஒன்றும் கண்ணைக் கவர்ந்து விடவில்லை. ஆனால் பாட்டு ஒவ்வொன்றும் செவியில் நிறைந்து உள்ளத்தில் உறைந்தது. ஆனால் பாட்டுக்களுக்காக மட்டும் மக்கள் கூடி விடுவார்கள் என்று என்னால் அப்பொழுது நம்ப முடியவில்லை. ஆனால் படம் வெளி வந்ததும் மக்கள் கூட்டமாகப் போய்ப் பார்த்தனர்.

பத்மா பிலிம்ஸாரின் "மனமுள்ள மறுதாரம்" என்னும் படத்தைப் பார்த்ததும் எனக்கு அவ்வளவாக நம்பிக்கை ஏற்படவில்லை. ஆனால் பொதுமக்கள் சில குறிப்பிட்ட காட்சிகளுக்காக அந்தப் படத்தை ரஸிக்கின்றனர் என்னும் விஷயம் பிறகுதான் தெரிய வந்தது.

கொட்டும் மழையில் அகப்பட்டுக்கொண்டு நனைகிறவர்களுக்குக் கண்ணில் தென்படும் எந்தக் குடிசையிலும் நுழைந்து விடும் அவசரம் உண்டாகிவிடும். அதைப்போல், படம் பார்க்க வேண்டும் என்னும் ஆவல் உண்டாகி விட்டால், நல்ல படம் எதுவும் இல்லையென்பதற்காகப் படமே பார்க்க வேண்டாம் என்று தோன்றாது. ஏதாவது ஒரு தியேட்டருக்குள் நுழையத் தோன்றும்.

பாலாஜி கதாநாயகனாக வரும் இந்தப் படத்தில் சரோஜாதேவிதான் "மனமுள்ள மறு தாரம்." வழக்கம் போல் பகட்டான ஆடை அலங்காரங்களோடு மட்டும் நின்று விடாமல் கொஞ்சம் நடித்தும் இருக்கிறார்.

முதல் மனைவியை இழந்த ஒருவன், அவள் பெற்றெடுத்த குழந்தையை மாமனார் வீட்டில் விட்டு விட்டுத் திரும்பிப் பாராமல் இருந்து விட்டதோடு மறுமணமும் செய்து கொண்டு விடுகிறான். அந்த மறுதாரம் உலக இயல்புக்கு விரோதமாக மூத்த மனைவி பெற்ற குழந்தையிடம் அன்பு பாராட்டும் மனமுள்ள மறுதாரமாக அமைந்து விடுகிறாள். படத்தின் முடிவில் கணவன் அவள் அன்பை உணர்வதற்காகக் குழந்தை விபத்தில் சிக்கி, பிழைக்கிறது.

திரைக்கதை எப்படியெல்லாமோ திரும்புகிறது. இடையில் தங்கவேலு—குபேரம் பிள்ளை என்னும் கருமியாக வந்து, செவிடனாக நடித்து அமர்க்களம் பண்ணுகிறார். அவரது தத்ரூபமான நடிப்பும் அதற்கேற்ற சம்பாஷணையும் நன்றாயிருக்கின்றன. அவர் சம்பந்தம் இல்லாமல் வந்து சம்பந்தம் இல்லாமலே போய் விடுகிறார். அவரோடு படத்தில் சிரிப்பும் போய் விடுகிறது.

படத்தில் வரும் ஒரு பாட்டுக் கூட நன்றாயில்லை. மதுரைத் திருவிழாக் காட்சி இந்தப் படத்திலும் வருகிறது என்பதைத் தவிர விசேஷமாகக் கூற ஒன்றும் இல்லை.

# நரஸூ காபி

அருந்தி அதன்
பிரத்யேகமான ருசியை
அனுபவியுங்கள்



நரஸூ'ஸ் மான்யுபாக்சரிங்
கோ. பிரைவேட் லிட்.,
சேலம் & சென்னை

NCZ-21 ATM

---

# அமிர்தாஞ்சனம்

## முதல்மருந்தாக

## உபயோகித்துப் பாருங்கள்

அமிர்தாஞ்சனம் 9 இல் 7 வகை
வலிகளை அறவே போக்கிவிடுகிறது.
உண்மையில், எல்லாவிதமான தசை
வலிகளையும் தசை நோவுகளையும்
தணித்து இதமளிக்கிறது. 65
வருட காலமாக ஆதிக்கம்
செலுத்திவரும் இந்த அருமருந்து,
வலிகண்ட பகுதியினுள் ஊடுருவி
வலிகளுக்குப் பொதுப்படையான
காரணமான இரத்த நெருக்கத்தைக்
கரைத்துவிடுகிறது.

முதல் மருந்தாக
அமிர்தாஞ்சனம்
உபயோகித்துப் பாருங்கள்.
9 இல் 7 வகை வலிகளை
அறவே போக்கி
விடுகிறது.






அமிர்தாஞ்சன் லிமிடெட்
சென்னை-4




அமிர்தாஞ்சனம் இன்ஹேலர் மூக்கடைப்பை அகற்றுகிறது.

AL-56-3C TAM.




''பிருந்தா! நாளை நம் வீட்டுக்குப் புதிய விருந்தினர் ஒருவர் வரப் போகிறார்.''

''வீட்டுக்கு வருகிறவர்களை உபசரிக்கக் கடமைப் பட்டிருக்கிறோம்.''

''வருகிறவர் யாரென்று தெரிந்தால்...'' கேள்விக்குறியோடு நிறுத்தினான் சங்கர்.

''வருகிறவர்கள் யாராயிருந்தாலும் சரியே. உங்களுக்கு வேண்டியவர்கள் எனக்கும் வேண்டியவர்கள்தான். சந்தோஷமாய் வரவேற்கக் காத்திருக்கிறேன்.''

''உன் சித்தப்பாவாக இருந்தால்...''

''என்ன என் சித்தப்பாவா...?''

''ஏன் பிருந்தா அப்படிச் சீறி விழுகிறாய்..?''

''ஒன்றுமில்லை...எங்கள் குடும்ப விவகாரம் உங்களுக்குத் தெரிந்திருந்தால் இதன் காரணமும் தெரிந்திருக்கும்...ம்...அவர் இங்கு அவசியம் வரத்தான் வேண்டுமா?''

''நான் விரும்பி அழைத்து வரும் விருந்தினருக்கு மரியாதை கொடுக்க விரும்பினால் செய்யலாம். இல்லையானால்...''

''உங்கள் விருப்பத்துக்கு மாறாக நடக்க மாட்டேன். ஆனால்...ஆனால் அவர் என் தந்தைக்குச் செய்த துரோகத்தை மட்டும் உங்களுக்குத்தெரிவிக்க அனுமதிதருகிறீர்களா..?''

மனைவியின் விழிகளில் தேங்கிய கெஞ்சல் அவனை அங்கேயே இருக்கச் செய்தது. பதில் எதுவும் பேசாமல் எதிரே இருந்த நாற்காலியில் அமர்ந்தான். சிறிது நேரச் சிந்தனைக்குப் பின் பேசத் தொடங்கினாள் பிருந்தா.

** ** **

குழந்தையும் தெய்வமும் கொண்டாடுமிடத்திலல்லவா? பிருந்தா குழந்தையாக இருந்தபோது அவளைக் கொண்டாடிய தெய்வம் சித்தப்பா வேணு. படிப்பு முடிந்து வேலை கிடைக்காத வேளை. குழந்தையைப் பார்த்துக் கொள்வது அவன் வேலை.

ஆதாயம் இல்லாத அந்த உத்தியோகத்தில் அலுப்படையாமல் ஆனந்தமே கொண்டான், வேணு. சிரிக்கச் சிரிக்க முத்து உதிர்க்கும் பிருந்தாவோடு பொழுதைப் போக்குவதில் எல்லையில்லா இன்பம் வேணுவுக்கு.

அவன் கையில் கிடைக்கும் இரண்டணா, நாலணா அவ்வப்போது குழந்தையின் விளையாட்டுப் பொருளாக மாறும். அண்ணன் கண்டிப்பார். அண்ணி அலுத்துக் கொள்வாள். தனக்கென எதுவும் வாங்கிக் கொள்ளாமல் இப்படிக் குழந்தைக்காக,

செலவு செய்கிறுனே என்ற அங்கலாய்ப்பு இருவருக்கும். பலமுறை தடுத்தும் அவன் போக்கை மாற்ற முடியவில்லை.

குழந்தையோடு குழந்தையாகக் களித்திருக்கும் வேணுவின் மனத்தில் தன்னைப்பற்றிய சிந்தனைகள் அடிக்கடி எழுவதுண்டு. எத்தனை நாட்களுக்குத்தான் உடன்பிறந்த அண்ணனுக்குப் பாரமாய் வாழ முடியும்?

சிறுவயதிலேயே பெற்றோரை இழந்துவிட்ட அவனை அண்ணன் மூர்த்தியும் அவர் மனைவி சாரதாவுமே ஆதரித்து அவனை ஒரு மனிதனுக உருவாக்கியிருந்தார்கள்.

வாழ்க்கையில் அண்ணு அவனுக்குச் செய்திருந்த உதவிகள்; அதனுல் அண்ணன் அடைந்த சிரமங்கள் எல்லாம் அவன் நெஞ்சில் ஆழப் பதிந்த நினைவுகள். இனியாவது அண்ணனின் பாரத்தைச் சற்றுக் குறைக்க. அவன் சுமைக்குத் தோள் கொடுத்து உதவ வேண்டுமென்று கனவு கண்டு வந்தான்.

அவன் கனவு கனவாகவே நின்றது. நினைவாக மாறும் நாள் என்று வரும் என்று எண்ணி யெண்ணி ஏங்கியது மனம்.

அண்ணனுக்கேற்ற அண்ணி. வேணுவின் பரீட்சைக்காகப் பணம் கட்ட வேண்டிய தருணங்களில், அண்ணன் சமாளிக்க முடியாமல் கையைப் பிசைந்த நேரங்களில் தன் கை வளையலைக் கழற்றிக் கொடுத்த ஈரமுள்ள கையை அவனுல் மறக்க முடியுமா?

வேணுவுக்கு வேலைகிடைத்தால் அவன்வாங்கும் முதல்சம்பளத்தில் என்ன செய்யவேண்டுமென்ற ஒரு எண்ணம் அவன் மனத்தில் உருவாகியிருந்தது. அவன் அன்பிலே தோய்ந்த பிருந்தாவின் சின்னஞ் சிறிய ஆசையை நிறைவேற்றிவிட வேண்டுமென்பதுதான்.

குழந்தையின் ஆசை சின்ன ஆசைதான். ஆனல் அவர்கள் குடும்பத்தைப் பொறுத்த வரையில் அவனுக்கு எட்டாத ஆசையாகத் தானிருந்தது. பக்கத்து வீட்டுப் பெண் கோமளா கட்டிக் கொண்டிருப்பதைப் போல் தனக்கொரு பட்டுப் பாவாடை வேண்டுமென்ருள்.

# குற்றம்

கோமதி சுப்பிரமணியம்



கோமளா வீட்டுக்கும் தன் வீட்டுக்குமுள்ள வேற்றுமையைப் புரிந்து கொள்ள முடியாத வயது. குழந்தையைத் திருப்தி செய்ய வேண்டுமென்பதுதான் பெற்றோர்களின் விருப்பம். ஆனால் அவர்கள் குடும்ப நிலைமை அதற்கு இடம் கொடுத்தால்தானே?

சித்தப்பாவின் கல்யாணத்துக்கு என்று சொல்லி வைத்திருந்தார்கள் குழந்தையிடம். அதுவரை குழந்தையை ஏங்கவிடாமல் தன் சம்பளத்தில் வாங்கிக் கொடுத்துவிட வேண்டுமென்பதுதான் வேணுவின் விருப்பம்.

வேணுவின் பிரார்த்தனையோ அல்லது பிருந்தாவின் அதிர்ஷ்டமோ என்றுகூடச் சொல்வதற்கில்லை. வேணுவின் சகோதரன் மூர்த்தியின் முயற்சியாலே வேலையொன்று கிடைத்தது. கிடைத்த வேலை கௌரவமானது; அவனுக்கு அதிக சம்பளமும் கிடைத்து வந்தது.

வேலைக்குச் செல்லுமுன் எப்படி அண்ணனின் பாதத்தைப் பணிந்து சென்றானோ, அப்படித்தான் முதல் சம்பளம் பெற்று வந்த அன்றும் அண்ணனை நமஸ்கரித்து நின்றான். தம்பியின் அன்பையும் பண்பையும் கண்ட அண்ணனின் மனம் ஆனந்தத்தால் பூரித்தது.

"அண்ணா! ஒரு ஆசை.." என்று தயங்கினான் வேணு.

"என்ன, வேணு? சொல்லேன். முதல் சம்பளத்தில் எந்தத் தெய்வத்துக்காவது பிரார்த்தனை செய்வதாக வேண்டிக் கொண்டிருக்கிறாயா?" என்று கேட்டார் மூர்த்தி.

"ஆமாம், அண்ணா! என் இஷ்ட தெய்வமான பிருந்தாவின் பட்டுப் பாவாடை ஆசையைப் பூர்த்தி செய்வதாக..."

"அது உன் கல்யாணத்துக்கு...இது என் குடும்பச் செலவுக்கு. தெரிந்ததா...?"

அதற்குமேல் அண்ணனிடம் எதிர்த்துப் பேசத் துணிவில்லை. குடும்பச் செலவுக்கென்று சொன்னாரே தவிர மூர்த்தி அந்தப் பணத்தைக் குடும்பத்துக்காகச் செலவிடவில்லை. வேலைக்குச் செல்லும் தம்பிக்கு அவசியமான கைக்கடியாரம் வாங்கிக் கொடுத்தார். தன்னலமற்ற அண்ணனின் அன்பிலே திக்கித் திணறினான் வேணு. தெய்வநிலையிலே மதிப்பிட்டிருந்தான் அண்ணனை.

அன்பு நிறைந்த சகோதரர்களிடையே பிளவு ஏற்பட்டதென்றால் ஆச்சரியம் ஏற்படாதிருக்குமா? அதுவும் அற்ப விஷயத்தில் ஒருவரையொருவர் ஒத்துப் போகவில்லையென்றால் நம்ப முடியுமா?

வேணுவின் உத்தியோகத்தால் அவனது குடும்பத்து வறுமைகள் கரைந்தன. காலம் வளர வளர அவர்கள் குடும்பத்தில் பட்டும் பகட்டும் தலைதூக்கின.

வேணு அடிக்கடி அவர் மானேஜர் வீட்டுப் பக்கம் போய் வருவதை மூர்த்தி கேள்விப்பட்டான். ஆபீஸில் மானேஜரிடம் அவனுக்குத் தனிச் சலுகையென்று சக நண்பர்கள் முணுமுணுத்தனர்.

வேலையைத் தேடித் தந்த அதிர்ஷ்டம் வேணுவின் காலடியில் பொன்னையும் பொருளையும் குவிக்கக் காத்திருந்தது. அந்த அதிர்ஷ்டம் மானேஜரின் பெண் உருவத்தில் வந்தது. வேணுவின் அடக்க ஒடுக்கத்தையும் திறமையையும் விரும்பிய மானேஜர் அவனுக்குத் தம்முடைய பெண்ணைக் கொடுக்க வலிய முன்வந்து பேசினார்.

மூர்த்தி திடுக்கிட்டார். கலப்பு மணம்... சமூகத்தில் தனக்குள்ள கௌரவம் அத்தனையும் பாதிக்கப்படுவதாகக் கருதினார். உடனடியாகப் பதிலளிக்க முடியாத மூர்த்தி யோசித்து முடிவு சொல்வதாகக் கூறினார்.

தம்பியைக் கண்டிக்கத் துணிவற்ற சங்கர மூர்த்தி, தம்பியின் முற்போக்கைக் கண்டித்தான். வாழும் வகை தெரிந்த வேணு அண்ணனுக்கு எதிரியானான்.

அண்ணனின் போக்குக்கு எதிராகத் தான் விரும்பிய பெண்ணை மணந்தான். பெண்ணோடு பொன்னும் பொருளும் வந்தன. பதவியின் உயர்வு பாசத்துக்குத் தடை விதிக்கவில்லை. ஆனால் பாசம் அறுந்து விட்டது.

தம்பி தனக்கு உதவவில்லையென்ற ஏக்கம் அண்ணனுக்கு இல்லை. ஆனால் தனக்கு அளிக்க வேண்டிய கௌரவம் இழந்த குறைதான் அவன் மனத்தைச் சூறையாடின.

கண்ணுக்குக் காணாமல் வாழ நினைத்த மூர்த்தி ஊரைவிட்டே குடும்பத்தைப் பெயர்த்து வந்து விட்டார்.

அதன்பின் அவருக்குப் பல கஷ்டங்கள். தம்பியால் நேர்ந்த மன உளைச்சலும், அவரைப் படுக்கையில் தள்ளியது. கையிலிருந்த பணமெல்லாம் வியாதியில் கரைந்தது. மீண்டும் குடும்பத்தில் தரித்திரம்.

தக்க சமயத்தில் நீங்கள் முன் வந்து என்னை மணந்து கொண்டிராவிட்டால் இதற்குள் அப்பாவின் உயிர் என்றைக்கோ முடிவாகியிருக்கும். இப்பொழுது சொல்லுங்கள், சித்தப்பா குடும்ப விரோதியா இல்லையா என்று....?" என்று கூறி நிறுத்தினாள் பிருந்தா.

"குடும்பத்துக்கு விரோதமாக நடந்து கொண்டால் குடும்ப விரோதிதான். ஆனால் செய்யாத குற்றத்தைச் செய்ததாகச் சொல்லி வெறுத்தால் அதற்கு அவர் பொறுப்பாக முடியுமா?"

"செய்யாத குற்றமா?" வியப்பும் திகைப்பும் போட்டியிடக் கேட்டாள் பிருந்தா.

"ஆம் .." என்று அழுத்தமாகக் கூறினான்.

"வளர்த்து உருவாக்கிய அண்ணனை விரோதித்துக் கொண்டு அவர் விரும்பாத பெண்ணை மணந்து கொண்டது குற்றமில்லையா?" என்று துடித்தாள் பிருந்தா.

"உன் சித்தப்பா செய்த குற்றம் என்ன? கலப்பு மணம் செய்து கொண்டார். இது தானே அவர் செய்த தவறு? அப்படியானால் உன் கணவனும் ஒதுக்கித் தள்ளப்பட வேண்டியவன்தான்...!" அவன் சொல்லிலேதான் எத்தனை அழுத்தம்.

"நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? எனக்கு ஒன்றுமே புரியவில்லையே?"

பிருந்தாவின் நினைவு தட்டாமாலை சுற்றியது. "தயவுசெய்து உங்களைக் கெஞ்சிக் கேட்கிறேன். சற்றுப் புரியும்படியாகச் சொல்லுங்கள்" என்று கெஞ்சினாள் பிருந்தா.

"என் குடும்ப வரலாற்றை ஓரளவு புரிந்து கொண்டால்தான் நான் கூறியதையும் புரிந்து கொள்ள முடியும்."

"செல்வம் மிகுந்த குடும்பத்தில் ஒரே பிள்ளையாகப் பிறந்திருந்தார் சுந்தரம். பெரிய

# வேர்க்குருவிலிருந்து

# 2

## வழி நிவர்ரணம்!

சுகமளிப்பதும், கிருமிகளை ஒழிப்பதுமான ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் சோப்பு எரிச்சலூட்டும் வேர்க்குருவிற்குக் காரணமான அடைபட்ட சரும துவாரங்களை சுத்தம் செய்கிறது.

இதமளிப்பதும் புத்துணர்ச்சியூட்டுவதுமான ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரை ஸ்நானத்திற்குப்பின் உபயோகித்தால், உங்களுக்கு சுகமும் குளுமையும் அனுபவமாகும்.




**ஜான்ஸன்ஸ்** ப்ரிக்லி ஹீட் சோப் மற்றும் பவுடர் ஒன்றுக்கொன்று இணங்கி வேலை செய்து வேர்க்குருவிலிருந்து நிவாரணமளிக்கின்றன

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் ஆப் இந்தியா பிரைவேட் லிமிடெட்

இடத்தில் பிறந்த பிள்ளை. ஆனாலும் படிப்பில் நன்கு தேர்ச்சி பெற்றார். படிப்பு முடித்ததும் உத்தியோக வேட்டைக்குப் புறப்பட்ட போது அவர் தந்தை மறுத்து விட்டார். தம் கம்பெனியிலேயே ஒரு வேலையில் நியமித்துத் தம்மோடு தங்கச் செய்துவிட்டார்.

சுந்தரம் கம்பெனி விஷயமாக அடிக்கடி வெளியூர் செல்ல நேரிடும். அப்படிச் செல்ல நேர்ந்தபோதுதான் ஜானகியைச் சந்திக்க நேர்ந்தது. மலையாள நாட்டைச் சேர்ந்தவள் அந்தப் பெண். அந்தப் பெண்ணின் குணத்திலும் அழகிலும் மனத்தைப் பறி கொடுத்த சுந்தரம் அவளையே மணந்து கொள்ளுவதென்றும் முடிவுக்கு வந்திருந்தார்.

தந்தையிடம் அந்தப் பெண்ணைப் பற்றிக் கூறியபோது சீறியெழுந்தார் தந்தை. 'நமது குடும்பமென்ன? சாதி விட்டுச் சாதி...ஊர் விட்டு ஊர் சம்பந்தம் செய்யும் பழக்கம் நம் வழியிலேயே கிடையாதே.........உனக்காக அடுத்த தெருவில் இருக்கும் நம்' உறவுப் பெண்ணை முடிவு செய்து வைத்திருக்கிறேன். முகூர்த்தமும் குறித்து 'விட்டேன். அதை மீறி உன் இஷ்டப்பட்ட' பெண்ணை மணந்து கொள்வதானால் என் முகத்திலேயே விழிக்காதே' யென்று கடுமையாகத் திட்டினார்.

தீர யோசித்தார் சுந்தரம். தந்தையின் விருப்பப்படியே அவர் குறிப்பிட்ட பெண்ணை மணந்து கொள்வது. தம் விருப்பப்படி காதலித்த பெண்ணையும் மணந்து கொள்வது என்று நிர்மானித்தார். என்ன, பிருந்தா! அப்படிப் பார்க்கிறாய்? இரண்டு பெண்களை எப்படி மணந்துகொள்ள முடியுமென்று தானே பார்க்கிறாய்? அப்பொழுது இருதார மறுப்புச் சட்டம் அமுலுக்கு வராத காலம். மீண்டும் சொல்லுகிறேன் கேள். தான் காதலித்த பெண்ணுக்கும் துரோகம் செய்யக் கூடாது. அதேசமயம் தந்தையின் கோபத்துக்கும் ஆளாகக்கூடாது என்று எண்ணினார். இந்த இரண்டு காரணங்களுமே சுந்தரத்தை அந்த முடிவுக்கு வரச் செய்தன. அவர் உத்தியோகமோ ஊர் ஊராய்ச் சுற்றுவது. அவரைப் பற்றி யாருமே சந்தேகிக்க முடியாது. அவர் ஏற்பாட்டை யாருமே தெரிந்து கொள்ளவும் முடியாதென்று எண்ணினார்.

எத்தனைதான் முன்னேற்பாடாக நடந்து கொண்டாலும் அவர் ரகசியம் சீக்கிரமே வெளிப்பட்டு விட்டது.

மகனது கல்யாணத்தோடு தன் பொறுப்பு நீங்கிவிட்டது என்று எண்ணியவரைப் போல் சுந்தரத்தின் தந்தை கம்பெனிப் பொறுப்பு முழுதும் மெதுவாகச் சுந்தரத்தின் கைக்கு மாற்றி விட்டார். இப்பொழுதெல்லாம், சுந்தரந்தான் முன்போல் வெளியூர் செல்ல முடிவதில்லை. பொறுப்பு நிறைந்த நிர்வாகியான பின்பு அடிக்கடி ஊர் சுற்றித் திரிய முடியுமா? ஜானகியும் அவனும் சந்தித்துக் கொள்வது அரிதாயிற்று. ஒரு தடவை அவளைச் சந்திக்கச் சென்றிருந்த போது கம்பெனிப் பொறுப்பு தம்மிடம் வந்துவிட்டதென்றும் மெதுவாக அப்பாவின் மனத்தை மாற்றிச் சீக்கிரமே தம்மிடம் அழைத்துக் கொள்வதாகவும் ஜானகியைத் தேற்றி, சிறிது காலம்காத்திருக்கும்படிகேட்டுக்கொண்டார்.



**திருவையாறு கல்கி ஏஜண்ட் ஸ்ரீ எம். புடார்ஜுனய்யர் அவர்களுக்கு சஷ்டி அப்த பூர்த்தி செப்டம்பர் 9ந் தேதி திருவையாற்றில் சிறப்பாக நடந்தேறியது.**

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

ஆனால் அவள் அதிர்ஷ்டம் சுந்தரத்தின் தந்தைக்கு உடல்நிலை நாளுக்குநாள் அதிகமாகிக்கொண்டு வந்தது. இந்நிலையில் மாதக் கணக்காக ஜானகியைச் சந்திக்க முடியாமற் போய் விட்டது.

அப்பாவியான அவள் சுந்தரத்துக்குக் கடிதம் எழுதியிருந்தாள், அவரைப் பார்க்க முடியாமல் தான் படும் அவதியைக் குறித்து. கஷ்டகாலம் அந்தக் கடிதம் அவர் தந்தையின் கையிலா கிடைக்க வேண்டும்? கடிதத்தைப் படித்த தந்தை எரிமலையாய்க் குமுறினார். கடைசிக் காலத்தில் அவர் கையால் தமக்குக் கொள்ளி வைக்க வேண்டாமென்று மனம் குமுறிப் பேசினார். ஆதியிலேயே சுந்தரம் தந்தையின் பேச்சுக்கு மதிப்பு கொடுப்பவர். அதுவும் கடைசிக் காலத்தில் அவர் மனம் கொதிக்கும் நிலை நேர்ந்ததை நினைத்து வருந்தினார். அந்த உணர்ச்சியில்; தாம் மறைத்த ரகசியத்தைத் தந்தையிடம் முறையிட்டு அதற்குப் பரிகாரமும் அவரிடமே கேட்டார். இனி அந்தப் பெண்ணுக்கும் சுந்தரத்துக்குமுள்ள சம்பந்தம் அறவே அற்றுப் போய் விட்டதென்பதை அவரையே எழுதச் சொல்லித் தபாலிலும் சேர்த்து விட்டார் தந்தை.

கடிதத்தைக் கண்ட ஜானகி துடியாய்த் துடித்தாள்; அழுதாள்; அவள் நினைத்தால், சுந்தரத்தின்பேரில் வழக்குத் தொடுத்து, வாதாடியிருக்கலாம். ஆனால் அவள் அப்படிச் செய்ய விரும்பவில்லை. தன்னால் கணவனின் சுகவாழ்வும் அமைதியும் கெடவேண்டாம் என்று நினைத்து ஜானகி தன்னையே தன் துயருக்குப் பலியிட்டுக் கொண்டாள்.

என் தாயாரின் முகம் எனக்குத் தெரியாது. ஆனால் அவளது அன்பு மனத்தைப் பற்றி என்னை வளர்த்த பாட்டி சொல்லக் கேட்டிருக்கிறேன். நான்தான் அந்தத் துர்ப்பாக்கியவான். ஜானகியின் பிள்ளை யென்பதை நான் உனக்குச் சொல்லாமலே புரிந்து கொண்டிருப்பாய்'' என்று கூறி நிறுத்தினான்.

இதுவரை செயலற்றுச் சிலையாய்ச் சமைந்திருந்த பிருந்தா உணர்ச்சியுடன், "நீங்கள்
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~



'குருவாயூர் சகோதரிகள்' என்று பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி அவர்களால் பட்டம் சூட்டப்பெற்ற திரு கே. கே. நாயரின் குமாரிகள் சசி, லதி ஆகிய இரு குழந்தைகளின் பரத நாட்டிய அரங்கேற்றம் சென்ற மாதம் சென்னை அண்ணாமலை மன்றத்தில் சிறப்பாக நடைபெற்றது. விழாவுக்குத் தலைமை தாங்கிய திரு ஏ. எஸ். பி. ஐயர் குழந்தைகளின் திறமையையும் அவர்களுக்கு நாட்டியம் பயிற்றுவித்த நடன ஆசிரியர் திரு டி. வி. சௌந்தரராஜனின் மேதையையும் பாராட்டிப் பேசினார்.

---

உங்கள் தந்தையைக் காண விரும்பவேயில்லையா?'' என்று கேட்டாள்.

''இல்லை...என் தாயாருக்கு இல்லாத உறவு எனக்கும் வேண்டாமென்றே ஒதுங்கி நின்று விட்டேன்.

நான் பெரியவனானேன். என்னை வளர்த்து ஆளாக்கிய என் பாட்டி இறக்கும்தறுவாயில் இந்த வரலாற்றைச் சொல்லி என் தந்தையின் இருப்பிடத்தையும் தெரிவித்தாள்.

உலகத்தில் எனக்கிருந்த ஒரே பற்றுக்கோலான பாட்டியின் மறைவுக்குப் பின் என் மனம் ஒரே சூன்யமாகி விட்டது. எதிலும் பிடிப்பில்லாமல் சுற்றுப்பிரயாணத்தில் இறங்கினேன். மனம் போன இடத்தில் சுற்றுவது. நினைத்த இடத்துக்கு நினைத்தபோது போவது.

இப்படி நாடோடியாகத் திரிந்த என்னோடு விதி விளையாட விரும்பியது. பல ஊர்களையும் சுற்றி வந்தவன் திருச்சிக்கு வந்தபோது என்னையுமறியாமல் என் மனத்தில் விசித்திர ஆசை தோன்றியது. பாட்டி குறிப்பிட்ட விலாசம் என் கையில் இருந்தது. அந்த ஊரில்தான் என் தந்தை வாழ்கிறார். ஒரு முறை அவரைக் காண ஆவல் உந்தியது.

எப்படியோ அவர் இடத்தைக் கண்டு பிடித்து விட்டேன். அரண்மனை போலிருந்த பங்களா உள்ளே அன்னியனைப் போல் தயங்கித் தயங்கிச் சென்றேன்.

என் அதிர்ஷ்டம் காவற்காரர்கள் யாரும் வாசலில் நிற்கவில்லை, என்னைத் தடுக்க. நான் சென்ற சமயம் என் தந்தை (அவர்தான் சுந்தரம்) வெளி வராந்தாவில் சாய்வு நாற்காலியில் சாய்ந்து ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து கிடந்தார். திடுதிப்பென்று அவர் முன் போய் நின்றேன். யாரோ எவரோ என்று மரியாதையோடு வரவேற்றார், அவருக்கும் எனக்குமுள்ள உறவைத் தெரிவிக்கக் கூடாதென்றுதான் போனேன். ஆனால்...ஏனோ என்னையுமறியாமல் நான் யாரென்பதைக் கூறி விட்டேன். அவர் முகம் கணத்தில் பேயறைந்தாற் போல் மாறியது. அதுவரை அன்பொழுகப் பேசி வந்தவர் காவற்காரனை அழைத்தார், என்னை வெளியே துரத்த. என் தலையில் அகில உலகும் உருண்டு விழுவது போன்ற பிரமை. 'வேண்டாம் நானே போய் விடுகிறேன்' என்று எழுந்து வந்து விட்டேன்.

'சார்...ஒரு நிமிஷம் நிற்கிறீர்களா? உங்களோடு சில விஷயங்கள் பேச வேண்டும். அனுமதி தருகிறீர்களா...' என்றதும் ஏனோ எனக்கு ஆத்திரம் வந்தது.

'நீங்கள் அந்தப் பெரிய மனிதரின் பிள்ளை தானே......' என்று வெடுக்கெனக் கேட்டேன்.

'பிள்ளை இல்லை. மாப்பிள்ளை.'

'அதைவிடச் சிலாக்கியம்தான்......போம். ஐயா போம்......மாமன் அறையை விட்டுத் தள்ளினார். நீர் இந்த ஊரைவிட்டே துரத்தவா பின் தொடருகிறீர்......'

'இங்கே பார் உன் நலத்தில் எனக்கும் முக்கிய பங்குண்டு. உறவினன் என்ற முறையில் அல்ல, உன்னைப்போல் இளைஞன் என்ற முறையில். இப்பொழுதாவது நான் சொல்வதைக் கேட்கப் போகிறாயா இல்லையா?' என்று என் கையைப் பற்றினான் அவன்.

அத்தனை அன்பாகப் பழகும் அவன் நட்பை உதறிக் கொண்டு மேலே செல்லத் திடமில்லை. முதலில் அவன் யாரென்பதைத் தெரிவித்துக் கொண்டான். அவன் வேறு யாருமல்ல; என் தங்கையின் கணவன். ஆம்! சுந்தரத்தின் இரண்டாவது மனைவியின் பெண். தங்கை என்ற உறவும் எண்ணமும் என் உள்ளத்துக்குப் புத்துணர்ச்சியை ஊட்டியது. அது முதல் அவர் சொற்படி நடக்கத் தீர்மானித்தேன்.

எனக்குத் தேவையான உதவிகள் செய்வதாகச் சொன்னார். நான் மறுக்கும்போதே பல உதவிகள் செய்து என் தந்தைக்கும் தெரியாமல் என்னை முன்னேற்றினார். முக்கியமாக உன்னை எனக்கு அளித்தவர் அவர். அவர் பணமும் அவர்யோசனையும்தான் உன்னை நான் அடைய முக்கிய காரணமாக இருந்தது.''

''என்ன சொல்லுகிறீர்கள்...?''

''ஆம்...இதற்குள் நீ புரிந்து கொண்டிருக்கலாம். என்னைக் கைதூக்கிவிட்ட இளைஞர் வேறு யாருமல்ல...உன் சித்தப்பாதான். அவர்தான் என் தங்கையை மணந்துகொண்டு உன் குடும்பத்தாரால் நிராகரிக்கப் பட்டவர். பிருந்தா...பிருந்தா...உன் கண்களில் ஏன் கண்ணீர்...கலப்பு மணம் செய்து கொண்டோமே என்கிற வருத்தத்தினலா...? பிருந்தா, எங்கே எழுந்து ஓடுகிறாய்...ஏன் பேனாவும் பேப்பரும் கையில் எடுக்கிறாய்... உன் தந்தைக்குக் கடிதமெழுதவா...?

காதல் மணத்தின் உயர்வை உன் தந்தைக்கு விளக்கி எழுதி நல்ல காரியத்தைச் செய், பிருந்தா! அது சரி! நாளை உன் சித்தப்பாவுக்கு வரவேற்பு எப்படி? ஏகபோகம் என்கிறாயா...? அதைத்தான் நானும் விரும்பியது.''

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

# கால்கேட் டூத் பிரஷ்

DCG/2682

---

# மிக அழகிய...

## அடர்ந்த நீண்ட ஒளியுள்ள கூந்தல்!

பிரதிதினமும் கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவி வந்தால், கூந்தலானது அடர்த்தியாகவும், நீளமாகவும் வளருவதுடன் இளமையின் ஒளியுடனும், அற்புத ஜ்வலிப்புடன் விளங்குவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள். அது உங்கள் கூந்தலின் இயற்கை அழகை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்கச்செய்யும்.

மகிழ்ச்சியூட்டும் நறுமணம்—
உங்கள் குடும்பம்
முழுவதும் விரும்புவது!




# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்!

CCHO/6/3





இனிய நாதம்!

அழகிய தோற்றம்!



மாடல் 0254

- 6 - வால்வ்
- ஆல் - வேவ்
- 4 - பாண்ட்
- ஏஸி அல்லது ஏஸி/டிஸி (இரு மாடல்கள்)
- ரூ. 390/- உள்ளூர் வரிகள் தனி

**murphy radio**

# மர்பி ரேடியோ

பல ஆண்டுகளுக்கு உங்களை மகிழ்விக்கும்!

தென் இந்தியாவுக்கு சோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்:

**முகமது இப்ராஹிம் & கோ. பிரைவேட் லிட்., சென்னை-பெங்களூர்-ஹைதராபாத்**

# திருச்செங்கோடு காந்தி ஆசிரமம்

**" காந்தி பக்தன் "**

மரத்தில் பூக்கும் புஷ்பங்களெல்லாம் காயாவதில்லை. காய்த்த காய்கள் எல்லாம் கனியாகி விடுவதில்லை. எத்தனையோ பூக்கள் காற்றில் உதிர்ந்து போகின்றன. வெய்யிலில் கருகிப் போய் விடுகின்றன. காய்கள் பிஞ்சில் வெம்பிப் போகின்றன. அல்லது அணில் கிளி முதலியவை கடித்தும் கொத்தியும் வீணாகிப் போகின்றன.

அம்மாதிரியேதான் பொது ஸ்தாபனங்களின் விஷயத்திலும். பொழுது விடிந்தால் பொது ஸ்தாபனங்கள் திறந்து வைக்கப்படுவதற்குக் கணக்கில்லை. மந்திரிகளின் முக்கிய அன்றாட வேலையே இத்தகைய ஸ்தாபனங்களைத் திறந்து வைப்பதுதானோ என்று எண்ணும் அளவுக்குப் போய் விடுகிறது. இப்படி ஆரம்பிக்கப்படும் ஸ்தாபனங்கள். இவற்றில் எத்தனை நிலைத்து நின்று சமூக சேவை புரிகின்றன என்று எண்ணைப் புகுந்தால் விரல் விட்டு எண்ணி விடலாம்!

சுதந்திர சுயாட்சியில், பொதுநல சர்க்காரில், இத்தகைய பொதுநல ஸ்தாபனங்கள் ஆரம்பிக்கத் திட்டமிட்டிருக்கிறார்கள் என்றால் சர்க்கார் மனமுவந்து உதவியளிக்கிறார்கள்! இருப்பினும் நிலைத்து நிற்பதில்லை.

ஆனால் முப்பத்திமூன்று ஆண்டுகளுக்கு முன், அந்நிய ஆதிக்கம் ஓங்கியிருந்த காலத்தில், அந்நிய அரசாங்கம் கண்காணித்து வந்த தேசபக்தரால் பொதுஜன சேவைக்கு என்று துவக்கப்பட்ட ஸ்தாபனம் ஏழைஎளியவர்களுக்குச் சீரிய தொண்டு புரிந்து வருகிறது என்றால் எவ்வளவு பெருமைப்படத்தக்க விஷயம்.

சேலம் ஜில்லாவில் புதுப்பாளையம் என்றோர் கிராமம். இந்தக் கிராமத்துக்குப் பக்கத்து ரயில்வே ஸ்டேஷன் எது என்றால் பதினைந்து மைல் தூரத்துக்கு அப்பாலிருக்கும் சங்கிரிதுர்க்கம்தான். இந்த ஸ்டேஷனிலிருந்து ஏழு மைல் தூரம், அதாவது திருச்செங்கோடு வரை பஸ் போகும். அதற்குமேல் ஏழு மைல்கள் கட்டை வண்டியில்தான் போயாகவேண்டும். இப்படி மிகவும் பிற்பட்ட ஒரு கிராமத்தில் முப்பத்திமூன்று ஆண்டுகளுக்கு முன் ஒருநாள் 6-2-1925 அன்று நமது அருமைத் தலைவர் ராஜாஜி அவர்கள், காந்தியடிகளின் நிர்மாணத் திட்டப்படி கிராம சேவை செய்ய ஒரு சில தேசபக்தர்களுடன் காந்தியடிகளின் பெயரிலேயே ஒரு ஆசிரமம் ஆரம்பித்தார். அன்று அவருடன் துணை நின்றவர்களில் பேராசிரியர் கல்கி அவர்களையும், திரு க.சந்தானம் அவர்களையும் குறிப்பிட வேண்டும்.

அந்த நாட்களில் கிராம சேவை செய்ய முன்வந்தால் கிராம மக்கள் எவ்வளவு எதிர்ப்பு தெரிவித்தார்கள் என்பதை அந்நாட்களில் கூட இருந்தவர்கள் இன்று கதை கதையாகச் சொல்லுவார்கள்.

ஆசிரமத்தில் ஒரு அன்பர் சிரசாசனம் தினம் செய்வாராம். இதைக் கிராமத்துப் பட்டிக்காட்டு மாது ஒருத்தி பார்த்து விட்டாள்! "ஆசிரமத்தில் ஒருவர் வானத்தை நோக்கிக் காலைக் காட்டிக் கொண்டு நிற்கிறார்; அதனால் தான் மழை பொழியவில்லை" என்று ஒரு செய்தியைப் பரப்பி விட்டாளாம்.

இப்படி உதவி செய்ய வந்தவர்களை விரோதிகளாக ஏழைப் பட்டிக்காட்டு மக்கள் பாவித்த காலம் அது. ஆனால் ராஜாஜியும் அவரது சகாக்களும் உறுதியாக இருந்து தங்கள் அந்தரங்கசுத்தியான தொண்டினால் மக்களின் பெருமதிப்புக்குப் பாத்திரராகி விட்டார்கள்.

அந்த நாட்களில் தறிகள் சோம்பிக் கிடந்தன; ராட்டைகள் சுழலாமலிருந்தன. அதனால் நூல் நூற்றுச் சிட்டங்கள் கொண்டுவருபவர்களுக்கும், சிட்டங்கள் வாங்கிச் சென்று கதர் ஆடையாகக் கொண்டு வருபவர்களுக்கும் கூலியும் கொடுத்து, பட்டிக்காட்டு ஏழை நெசவாளிக் குடும்பங்களுக்குக் கால்வயிற்றுக் கஞ்சிக்கு வழிவகுக்கப்பட்டது.

இந்தக் கதர்ப்பணி-காந்தி மகானுக்கு எவ்வளவு உகந்தபணி என்பதைச் சொல்லத் தேவையில்லை. இந்தத் தூயபணி நாளுக்கு நாள் விருத்தியாகி வந்தது.

இன்று தமிழ் நாட்டில் கதர்ப்பணி புரியும் முக்கிய இடங்களில் திருச்செங்கோடு காந்தி ஆசிரமமும் ஒன்று.

இங்கு வருஷத்துக்குச் சுமார் பதினெட்டு லட்சம் சிட்டங்கள் தயாராகின்றன; சுமார் 5 லட்சம் கஜம் கதர் துணி தயாராகின்றது. பத்து லட்சம் பெறுமானமுள்ள கதர் உற்பத்தியாகிறது. சுமார் நாலரை லட்சம் ரூபாய் நூற்கிறவர்களுக்கும், நெசவாளிகளுக்கும் சாயம் போடுகிறவர்களுக்கும் சலவைத் தொழிலாளிகளுக்குமாக விநியோகம் செய்யப்படுகின்றது. சுமார் ஏழாயிரம் குடும்பங்கள் திருச்செங்கோடு காந்தி ஆசிர

மத்தினால் உதவி பெற்று வருகின்றன. எத்தகைய மகத்தான பணி காந்தி ஆசிரமம் செய்து வருகிறது என்பதை இதிலிருந்து ஊகித்தறியலாம்.

ஆசிரமத்துக்கு நூல் கொண்டு வருபவர்கள், ஆசிரமத்துக்குச் சுற்றியுள்ள 330 கிராமங்களிலிருந்து வருகிறார்கள். இவர்களில் பெரும்பாலோர் கொட்டாத பஞ்சை ஆசிரமத்திலிருந்து எடுத்துப் போய் அவர்கள் வீட்டிலேயே பட்டைப் பஞ்சு தயார் செய்து கொள்கிறார்கள். நூற்போர் வீடுகளுக்கு ஆசிரம ஊழியர்கள் அடிக்கடி போய்ப் பழுதுபட்ட ராட்டைகளைச் சீர்செய்தும் நூற்காதவர்களை நூற்கும்படியும் விடாது தூண்டி வருகிறார்கள்.

நூற்போர், சம்பாதிக்கும் ஊதியத்தில் ஒரு பாகம் டிபாசிட்டாக வரவு வைக்கப்படுகிறது. வருஷத்துக்கு அவர்களுக்கு வேண்டிய கதரை அவர்கள் டிபாசிட்டிலிருந்து வாங்கிக் கொள்கிறார்கள்.

காந்தியடிகளின் நிர்மாணத் திட்டத்தில் கண்டுள்ள மற்ற அம்சங்களும் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் அனுசரிக்கப்பட்டு வருகின்றன. பொலிகாளை, பண்ணை எரு, தேன் பண்ணை, கோழிப்பண்ணை, மளிகைக்கடை, கூட்டுறவு பாங்கு முதலியன நடைபெற்று வருகின்றன.

ராஜாஜி சுமார் ஏழு வருஷகாலம் சிறப்பாக ஆசிரமத்தை நடத்தி விட்டு வந்தார். இந்த ஆசிரமத்துக்கு இப்போது ஸ்ரீமான் எம். எஸ். நாராயணராவ் அவர்கள் டைரக்டராக இருந்து வருகிறார். அவரது சீரிய பண்பினாலும் தன்னலமற்ற சேவையினாலும் இந்தக் காந்தியத் தொண்டு இவ்வளவு சிறப்பாக நடைபெற்று வருகிறது.

அதன் விளைவாக தெய்வபக்தி கொண்டவர்களுக்கெல்லாம் மதுரை, ராமேசுவரம் முதலிய இடங்கள் எப்படிப் புண்ணிய க்ஷேத்திரங்களாக விளங்குகின்றனவோ, அதேபோல் தேசபக்தி, காந்தி பக்தி கொண்டவர்களுக்கெல்லாம் திருச்செங்கோடு ஆசிரமம் ஒரு புனித க்ஷேத்திரமாக விளங்கி வருகிறது.

## பூரணப் புனிதன்!

தூண்டும் வெறியில் வீண்
மாண்டு மடியத்
துணியும் உலகினையே — தடுத்(து)
ஆண்டு நிறுத்திட
வேண்டியே மண்ணிடை
அன்புருவாகி வந்தான் — காந்தி
செம்பொருள் ஆகிவிட்டான்!

வஞ்சமும் பொய்மையும்
நெஞ்சிற் புழுவென
வாழ்வை அரித்துவிட — அதைத்
துஞ்சும் வகைசெய
நெஞ்சுறுதி கொண்டு
வீரமே பூண்டுவந்தான் — இன்றோ
பூரணம் ஆண்டுவிட்டான்!

அன்னியர் கைத்தலம்
கண்ணீர் சொரியும்
அடிமையாய் நாமிருக்க — அதை
முன்னே விடுவிக்க
முன்னி எழுந்தே
முறையொன்று கொண்டுவந்தான் — இன்றோ
நெறியன்றோ கண்டுவிட்டான்!

எண்ணு வதற்குமே
நுண்ணு(து) இருளிடை
ஏங்கி மனம்தவிக்க — அன்றே
மண்ணக மெல்லாம்
விண்ணக மாக்க
மனிதனாய்த் தோன்றிவந்தான் — இன்றோ
புனிதனாய் மாறிவிட்டான்!

— நாரிமுமுகன்

## 8. கொரில்லா

குரங்குகளிலே கணக்கற்ற வகைகள் உண்டு. மிருகக்காட்சிசாலைகளிலே நாம் ஒரு சில ஜாதிகளைத்தான் பார்க்கிறோம். மனிதனுக்கு முற்பட்டது குரங்குகள்தான் என்று ஆராய்ச்சியாளர் கூறுவார்கள். குரங்குகளில் மனிதக்குரங்கு (ஏப்) ஒரு வகை. மனிதர்களைப் போலவே சகல அம்சங்களிலும் இந்தக் குரங்குகள் காணப்படுவதால் இதற்கு இந்தப் பெயர் வந்தது.

இந்த மனிதக் குரங்கு வகைகளிலே மிகப் பெரியதும், பயங்கரமானதும், அசாதாரணமான பலம் பொருந்தியதுமான குரங்குதான் 'கொரில்லா'. அவலட்சணமான முகம், இரும்பை உருக்கி வார்த்தது போன்ற அத்தனை உறுதியான பிரும்மாண்டமான உருவம், கறுப்பான, அடர்த்தியான ரோமம் மண்டிக் கிடக்கும் உடல், அகன்ற தோள்கள், கணுக்காலைத் தொடும்படியான உறுதியான நீண்ட கைகள் — இதுதான் கொரில்லா. நன்றாக வளர்ந்த ஒரு கொரில்லா நிமிர்ந்து நின்றால் ஆறு அடிக்குமேல் உயரமுள்ளதாக இருக்கும். இவ்வளவு இருந்தும் கொரில்லாவினால் ஆதாரமில்லாமல் நிமிர்ந்து நிற்க முடியாது.

பார்வைக்குக் காட்டு மனிதனைப் போல் இருந்தாலும் இவற்றின் கால்களின் அமைப்பு மனிதர்களுடையதைப் போல் இல்லை. பூமியோடு பதிந்து ஊன்றக் கூடிய அழுத்தமான பாதங்களை இவை பெற்றிருந்தாலும், இரண்டாவது ஜோடிக் கைகளைப் போலத்தான் இவை பயன்படுகின்றன.

மற்ற எல்லாக் குரங்குகளையும் போலவே கொரில்லாவும் மரங்களின் மீதுதான் வசிக்கிறது. தன் கால்களினால் மரக்கிளைகளை உறுதியாகப் பற்றிக் கொள்ளும். மரங்களின் மீது ஏறுவதற்கும் கால் விரல்கள் மிகவும் பயனுள்ளவையாக இருக்கின்றன.

கொரில்லா சாதாரணமாகத் தரையில் நடக்கும்போது பாதங்களின் பக்கவாட்டை ஊன்றித்தான் மெல்ல மெல்ல அசைந்து வரும். அப்போது இதைப் பார்க்க, விகாரமாக, ஏதோ ஒரு நொண்டி தள்ளாடியபடி நகர்ந்து வருவதுபோல் இருக்கும்.

கொரில்லாக்கள் உலகின் எல்லாப் பகுதிகளிலும் வாழுவதில்லை. மனிதர்களின் காலடி படாத மத்திய ஆப்பிரிக்காவின் அடர்ந்த கனமான காடுகளில் மட்டும்தான் காணப்படுகின்றன.

கொரில்லாக்களின் பழக்க வழக்கங்களைப் பற்றி இதுவரையில் யாராலும் பூரணமாக அறிந்து கொள்ள முடியவில்லை. ஏனென்றால் இவை வசிக்கும் காடுகள் பயங்கரமானவை.

கொரில்லா ஒரு சாகபட்சிணி. இதன் உணவு பெரும்பாலும் பழங்கள், காய்கள், கிழங்குகள், மரங்களின் வேர்கள் ஆகியவைதான். பகல் வேளையில்தான் இவை இரை தேடக் கிளம்பும்.

கொரில்லா பார்வைக்கு எப்படிப் பயங்கரமானதாக இருக்கிறதோ அதே போலத்தான் அதன் குணமும். ஆப்பிரிக்கக் காடுகளில் சுதேசிகள் சிங்கம், புலி இவைகளை விடக் கொரில்லாக்களிடம்தான் அதிகம் பயப்படுகிறார்கள். நன்றாக வளர்ந்த கொரில்லாவை உயிருடன் பிடிக்கவே முடியாது.

தன்னைக் காத்துக் கொள்ளுவதற்காகவே, இது மனிதர்களையோ மற்றப்பிராணிகளையோ தாக்குகிறது. சாதாரணமாகக் கொரில்லா மற்ற மிருகங்களைத் தனது ஆகாரத்துக்காகக் கொல்லுவதில்லை. தனது விரோதி எத்தனை பெரியவனானாலும் கொரில்லா கொஞ்சமும் அஞ்சாமல் எதிர்க்கும். பயங்கரமான உறுமலுடன் இது தன்னைத் தாக்குபவரை நோக்கி ஓடி வரும். விரோதியை நேருக்கு நேர் சந்திக்கும்போது இது இரு கால்களையும் ஊன்றி நிமிர்ந்து நின்று எதிர்க்கும்.

கொரில்லா குடும்பம் குடும்பமாகத்தான் ஒரு இடத்திலிருந்து மற்றொரிடத்துக்குப் போகும். இரவில் தூங்குவதற்கு மரங்களின் மீதோ அல்லது தரையிலோ, மரக்கிளைகளாலும் கொடி தழைகளாலும் மேடை அமைத்துக் கொள்ளும். மறுநாள் காலையில் வேறு இடத்துக்குப் போய் விடும். ஒரு தடவை அமைத்த படுக்கையில் மறுமுறை இவை படுப்பதில்லை. கொரில்லாக்கள் முதுமைப் பருவத்தில் மற்றக் குரங்குகளைப் போலவே நான்கு கால்களாலும் நடக்கின்



# மூன்று நண்பர்கள்

## 8. டாக்டரின் வீட்டில்

ரங்கசாமி கவலையோடு மயங்கிக் கிடந்த பட்டுவையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்கு இப்போது எல்லாம் விளங்கி விட்டது. பட்டுவின் இந்த நிலைக்குத் தான்தான் காரணம் என்று வேதனைப் பட்டது அவன் உள்ளம். அவர்கள் பேச்சைக் கேட்டு அவர்களை வீட்டில் கொண்டு போய் விடாமல் தெரு முனையிலேயே இறக்கி விட்டுச் சென்றதினால் தான் பட்டு இந்தத் துஷ்டர்களின் கையில் சிக்கி இருக்கிறாள் என்ற முடிவுக்கு வந்ததும், "அப்படியானால் கிட்டுவுக்கும் இவர்களால் ஏதாவது நேர்ந்திருக்கும். இல்லிங்களா?" என்றான் ரங்கசாமி.

மேற்கொண்டு என்ன செய்வது என்ற சிந்தனையிலே ஈடுபட்டிருந்த சேகர் ரங்கசாமியின் கேள்விக்கு, "அப்படித்தான் நானும் நினைக்கிறேன். இருவரும் சேர்ந்து தானே வீட்டுக்குத் திரும்பியிருக்க வேண்டும்? ஆகவே கிட்டு இன்னமும் அவர்கள் வசமிதில்தான் இருப்பான்" என்றார். ரங்கசாமியின் உடல் பதறியது. இன்று ரங்கசாமி சுகமாக இருப்பதற்குக் கிட்டுவின் அப்பா தான் காரணம். தன் எஜமானரின் மகன் கிட்டுவுக்கு ஆபத்து—அவன் துஷ்டர்களின் பிடியில் சிக்கி இருக்கிறான் என்பதை அறிந்த போது அவன் ஆத்திரம் பதின்மடங்காயிற்று. எங்கு சென்றாலும், அந்தச் சதிகாரர்களின் காரைக் கண்டுபிடித்துக் கிட்டுவை மீட்க வேண்டுமென்று உறுதி செய்து கொண்டான் ரங்கசாமி.

"நாம் நமது காரை நிதானமாக ஓட்டிச் செல்லாமல் அவர்களைப் பிடிக்க வேண்டுமென்று வேகமாகப் பின்தொடர்ந்து போயிருந்தோமானால் என்ன ஆகி இருக்கும்?" என்றான் ரங்கசாமி. அவன் குரல் நடுங்கியது.

"நம் பட்டுவின் மீது நாமே நமது காரை ஏற்றி விருப்போம். அப்படிச் செய்ய வேண்டும் என்பது தான் அந்த அயோக்கியர்களின் ஏற்பாடு. தங்கள் ரகசியங்களை அறிந்து விட்ட மனிதர் யாரானாலும், அது பச்சைக் குழந்தையானாலும் அந்தப் பாதகர்கள் விட்டு வைக்க மாட்டார்கள். தவிர, தங்களைப் பின்தொடராமல் தாமதப் படுத்தித் தாங்கள் தப்பித்துக் கொள்வதற்காகவும் அவர்கள் இந்த ஏற்பாட்டைச் செய்திருக்க வேண்டும்" என்றார் சேகர். ரங்கசாமி காரைப் பல தெருக்களில் திருப்பி வேகமாகச் செலுத்திக் கொண்டு போனான்.

"இப்போது நீ எங்கே போகிறாய், ரங்கசாமி? அந்த அயோக்கியர்களைத் தப்ப விட்டு விடுவதாக உத்தேசமா?" என்றார்.

"இல்லை! அவர்கள் இந்த உலகத்தின் எந்த மூலைக்குப் போனாலும் நான் விடப் போவதில்லை. முதலில் நாம் பட்டுவை ஒரு பத்திரமான இடத்தில் கொண்டு போய்ச் சேர்த்து விட்டு மேலே ஆக வேண்டிய காரியத்தைக் கவனிப்போம்" என்று சொல்லிக்





கொண்டே காரை ஒரு பங்களாவின் முன்னால் கொண்டு போய் நிறுத்தினான்.

காம்பவுண்டுச் சுவரிலே பதித்திருந்த டாக்டர் ஜெயராமன் என்ற பெயர்ப் பலகையிலிருந்து அது ஒரு டாக்டரின் வீடு என்பதை ஊகித்து உணர்ந்துகொண்டார் சேகர்.

''கிட்டுவின் வீட்டுக்குக் குடும்ப டாக்டர் இவர்'' என்று சொல்லி விட்டு ரங்கசாமி அந்த வீட்டின் கதவைத் தட்டினான். சேகர் தம் கைக் கடிகாரத்தைப் பார்த்தார். இருளிலே மினுக்கிடும் மின்மினிப் பூச்சியைப் போல் ஒளி வீசி மணியைக் கூறிக்கொண்டிருந்தது. அந்தக் கடிகாரம்.

அப்போது மணி மூன்றரை. விடியும் நேரம். அன்று இரவு முழுவதும் தான் எத்தனைய பயங்கரமான சம்பவங்கள் நடந்துவிட்டன? நினைக்கவே நடுக்கமாக இருந்தது. இந்தச் சதிகாரர்களின் விஷயத்தில் கிட்டு, மணி, பட்டு மூவரும் சிக்கியதை எண்ணிய சேகருக்கு வேதனையாக இருந்தது. இதை விதியின் செயல் என்று தான் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் அரசாங்கத்தின் கண்ணிலேயே மண்ணைத் தூவி விட்டு அட்டகாசம் செய்து வரும் இந்தக் கும்பல், மணியின் கவனத்தில் சிக்குமா? இந்தக் கும்பலை அம்பலப்படுத்த இரண்டு வருஷங்களாக எத்தனையோ பாடுபடுகிறார் சேகர். அவர்களைப் பற்றிய பல விஷயங்களை—ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் அவரால் சேகரிக்க முடிந்ததே தவிர, உருப்படியாக ஒன்றும் அறிய முடியவில்லை. முக்கியமான ஒரு மனிதரை, இந்தச் சதிகாரர்கள் தங்கள் காரியத்துக்குப் பலவந்தமாகப் பயன்படுத்திக் கொள்ளக் கடத்திச் செல்லப் போகிறார்கள் என்பதை அறிந்துதான் சேகர் பின்தொடர்ந்து வந்தார். அதற்கு முன்பே இந்தக் குழந்தைகள் மூன்று பேர்களும் அதில் சிக்கி ஆபத்தை வரவழைத்துக் கொண்டு விட்டார்கள். கிட்டுவுக்கு என்ன ஆபத்தோ? எதையும் ஊகிக்க முடியவில்லை, அவரால்!

ரங்கசாமியின் கதவுத் தட்டலுக்குப் பதில் கிடைத்தது. வாசல் விளக்கு போடப்பட்டது. கதவைத் திறந்து கொண்டு நடுத்தர வயதுள்ள ஒரு மனிதர் வந்தார். அவர்தான் டாக்டர் ஜெயராமனாக இருக்க வேண்டும் என்பதைச் சேகர் ஊகித்துக் கொண்டார். டாக்டரிடம் சுருக்கமாக விஷயத்தை விளக்கி விட்டு ரங்கசாமி காருக்கு வந்தான். சேகரும் ரங்கசாமியும் பட்டுவைத் தூக்கிக் கொண்டுபோய் டாக்டரின் வீட்டு ஸோபாவில் படுக்க வைத்தார்கள். இதற்குள் டாக்டர் தம் அறைக்குச் சென்று ஸ்டெதஸ்கோப்புடன் வந்தார். பட்டுவைப் பரிசோதிக்கும் வரை ரங்கசாமிக்கும் சேகருக்கும் மனம் பட்டபாடு, அப்பப்பா! சொல்லி முடியாது.

டாக்டர் காதிலிருந்த தமது ஸ்டெதஸ்கோப்பை எடுத்து மடித்துக் கொண்டு திரும்பியதும் ''டாக்டர்...! குழந்தைக்கு ஒன்றும் ஆபத்தில்லீங்களே?'' என்றான் தவிப்புடன் ரங்கசாமி. டாக்டர் ஒரு நிமிஷம் புருவத்தை நெரித்து யோசித்தார். பிறகு, ''பயப்படும்படியாக ஒன்றுமில்லை. இவளுக்கு மயக்க மருந்து கொடுக்கப்பட்டிருக்கிறது. வீட்டில் கொண்டு போய்ப் படுக்க வையுங்கள். நன்றாகத் தூங்கித் தானாக விழித்துக் கொள்ளட்டும். மயக்க மருந்தின் பிடியிலிருந்து விடுபட்டு விடுவாள். பிறகு நான் காலையில் வந்து பார்க்கிறேன்'' என்றார்.

ரங்கசாமிக்குப் போன உயிர் திரும்பியது போலிருந்தது. ''டாக்டர்! பட்டு உங்கள் வீட்டிலேயே படுத்துக் கொண்டிருக்கட்டும். நாங்கள் பட்டுவை இந்த நிலைக்கு ஆளாக்கிய அந்த அயோக்கியர்களைத் தொடர்ந்து போகிறோம்'' என்று கிளம்பத் தயாரானான் ரங்கசாமி.

''போலீஸுக்கு இதை அறிவித்தால் அவர்கள் பார்த்துக் கொள்ளுகிறார்கள். உனக்கேனப்பா அந்தச் சிரமம்? அது சரி! இப்படித் துணிகரமான செயல்களில் இறங்கும் அந்தக் கும்பல் யார் தெரியாதா?'' என்று கேட்டார் டாக்டர்.

''என்னை விட அந்தக் கயவர்களைப் பற்றி இவருக்கு அதிகம் தெரியும், டாக்டர்!'' என்று சேகரைச் சுட்டிக் காட்டினான் ரங்கசாமி. அப்போதுதான் சேகரை நன்றாகப் பார்த்தார் டாக்டர். சேகர் கரம் குவித்து அவருக்கு வணக்கம் செலுத்தினான். பிறகு ''இவர்கள் ஒரு பெரிய கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள், சார்! இவர்களின் தலைவன் யார், இவர்களின் இருப்பிடம் எது? நடவடிக்கைகள் என்ன என்பதையெல்லாம் கண்டு பிடிக்க

கவே நான் அலைந்து வருகிறேன். நாட்டிலே நடக்கும் பல துணிகரமான கொள்ளைகளில் இவர்கள் சம்பந்தப் பட்டிருக்கிறார்கள். இந்தக் கும்பலை அம்பலப்படுத்தவே போலீஸ்காரர்களின் வேலையை நான் செய்து வருகிறேன். அதில் ஓரளவு வெற்றியும் கிடைத்திருக்கிறது. இந்த நிலையில் போலீஸ்காரர் தலையிட்டால் காரியம் கெட்டு விடும். சதிகாரர்கள் உஷாராகி விடுவார்கள்'' என்று விளக்கினார் சேகர்.

ரங்கசாமிக்கு அந்த நேரம் ஒவ்வொரு நிமிஷமும் ஒரு வருஷமாகத் தோன்றியது. அகப்படாத தூரத்துக்கு அவர்கள் கிட்டுவுடன் தப்பிச் சென்று விடுவார்களோ என்று தவித்தான். ''வாருங்கள், சேகர்...! நேரமாகிறது'' என்று துரிதப் படுத்தினான். சேகரும் டாக்டரிடம் விடைபெற்றுக் கொண்டு, ''சில முக்கிய தகவல்களுக்காக அலைந்து கொண்டிருக்கிறேன். அவை கிடைத்ததும் இந்தக் கும்பலை வேட்டையாடிப் பிடிக்க நானே போலீஸாரை அழைக்கப் போகிறேன். ஆகவே அது வரையில் தயவுசெய்து இது சம்பந்தமான விஷயங்கள் எதையும் போலீஸாருக்கு அறிவிக்காதீர்கள்'' என்று கேட்டுக்கொண்டார். டாக்டரும் சேகரின் வேண்டுகோளுக்கு இணங்கினார்.

அடுத்த சில விநாடிகளில் ரங்கசாமியின் கார் புயலைப் போலச் சீறியபடி ரஸ்தாவில் முன்னேறிக் கொண்டிருந்தது (தொடரும்)

---

<u>வேடிக்கை விளையாட்டு</u>

## ஆமை வேகம்



இந்த விளையாட்டை விளையாடிப் பாருங்கள். ரொம்பத் தமாஷாக இருக்கும். இதில் எத்தனை பேர் வேண்டுமானாலும் கலந்து கொள்ளலாம். ஒரு மெல்லிய (டிஷ்யூ) பேப்பரில் 2 ஆமை எழுதிக் கத்தரித்துக் கொள்ளுங்கள். விளையாடுபவர்கள் இரண்டு கட்சிகளாகப் பிரிந்து கொள்ள வேண்டும். ஒவ்வொருவரிடமும் ஒரு கெட்டியான அட்டைத் துண்டு இருக்க வேண்டும். அறையின் இரு கோடியிலும் சாக்பீஸினால் நீண்ட கோடு கிழியுங்கள். ஒவ்வொரு கட்சியும் தங்கள் பக்க ஆட்டக்காரரை இரு பாகமாக்கி அறையின் இந்தப் பக்கத்துக் கோட்டின் கோடியில் பாதிப் பேரையும் அந்தப்பக்கத்துக் கோட்டின், எதிர்க்கோடியில் பாதிப் பேரையும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளும்படி ஒருவர் பின் ஒருவராக நிற்க வைக்க வேண்டும். எதிர்க்கட்சியும் இதே போல இரண்டு கோட்டின் வேறு முனைகளில் நிற்க வேண்டும். இனிதான் விளையாட்டு ஆரம்பம். டிஷ்யூ பேப்பர் ஆமையைத் தரையில் வைத்து ஒவ்வொரு கட்சியிலும் முதலில் இருப்பவன் தன் கையிலுள்ள அட்டைத் துண்டினால் ஆமை மீது விசிறி காற்றுண்டாக்கி எதிர்ப்பக்கத்திலுள்ள கோட்டை நோக்கி நகரும்படி செய்ய வேண்டும். ஆமை மெள்ள மெள்ள நகர்ந்து கோட்டை அடைந்ததும் அங்கு தயாராக உள்ளவன் அதை மறுபடியும் விசிறிக் கிளம்பிய இடத்துக்கே கொண்டு வரவேண்டும். இங்கு வந்ததும் அடுத்தவன் அதை மறுபடியும் எதிர்ப்பக்கத்துக்கு விசிறி விசிறி நகர்த்திக் கொண்டு போக வேண்டும். இப்படியே ஒரு கட்சியில் உள்ளவர்கள் எல்லோரும் மாற்றி மாற்றி இந்தப் பக்கத்திலுள்ளவர்கள் அந்தப் பக்கமும், அங்குள்ளவர்கள் இங்குமாக மாறும் வரை ஆமையை இங்கும் அங்குமாக விரட்ட வேண்டும். இதே போல் எதிர்க்கட்சியும் செயல்படும். எந்தக் கட்சி முதலில் ஆமை விரட்டுதலை வெற்றிகரமாக முடிக்கிறதோ அதற்கே வெற்றி.



(டிஷ்யூ பேப்பரை அட்டையினால் காற்றுண்டாக்கி நகரச் செய்வது சுலபமல்ல. தரையோடு தரையாகப் போய் ஒட்டிக் கொள்ளும். அதுவும் தரை வழுவழுப்பாக இருந்ததோ ரொம்பவும் சிரமம். அவசரமாகவும் வேகமாகவும் விசிறினால் டிஷ்யூப் பேப்பர் ஆமை நகரவே நகராது. மெதுவாக விசிறினால் தான் பேப்பர் பறந்து ஆமை நகரும். இதுதான் இந்த விளையாட்டின் முக்கிய ரகசியம்.)



விளையாடிப் பாருங்கள். அப்போதுதான் இதன் சுவாரஸ்யம் தெரியும். எதிர்க்கட்சி ஆமை வேகமாக நகரும்போது உங்கள் கட்சியில் விறுவிறுப்பு ஏற்படும். —மூர்த்தி




தற்பொழுதுகூட நேர்முக வகுப்புகளில் மட்டும் 700-க்கு மேற்பட்டவர்கள் இங்கிலீஷ் மொழிப்பயிற்சி பெறுகின்ற சென்னையின் மாபெரும் கல்வி அரங்கம்.

# THE SCHOOL OF ENGLISH LEARNING

## ஆங்கிலக் கல்வி நிலையம்

60, பிராட்வே, மண்ணடி, சென்னை-1

## தமிழ் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள்

# ஒரே வருடத்தில்

ஓய்வு நேரத்தைப் பயன்படுத்தி

அடிப்படையோடு இலக்கண ரீதியாக திருத்தமான முறையில்

# இங்கிலீஷ் தபால் மூலம் கற்கலாம்

சேர்வதற்கு அச்சிட்ட மனுவைப் பெற்றுப் பூர்த்தி செய்து

**17-10-58-ந் தேதி**

வரை அனுப்பலாம்.

அச்சிடப்பட்ட பாட விளக்கங்கள்

**21-10-58-ந் தேதி**

முதற்கொண்டு தொடர்ந்து அனுப்பப்பட்டு, [illegible]போது எழும் சந்தேகங்களுக்கு முறைப்படி அவ்வப்போது தெளிவுரைகள் வழங்கப்படும்.

ஆங்கிலத்தில் கருத்துக்களை அமைத்துச் சொந்தமாக எழுதவும் பேசவும் கட்டுரைகள் வரையவும் கடிதப் போக்குவரத்துச் செய்யவும் முறையாக அடிப்படையோடு கற்பிக்கப்படும்-திருத்தமுறையில் இலக்கணப் பயிற்சி அளிக்கப்படும். "தபால் மூலம் அனுப்பப்படும் பாடங்கள் ஒரு நீண்ட தொடர் நாவலைப் படிப்பதுபோன்று ஆர்வத்தை ஊட்டுவதாக இருக்கும்" எனில் மிகைப்படுத்திச் சொல்வதாகாது.

**முக்கிய அறிவிப்பு:** (1) 16 வயதிற்கு மேற்பட்டவர்களே சேரத் தகுதியுடையவர்கள். (2) ஆதாரப் பூர்வமான ஒப்பற்ற இலக்கணப் பயிற்சி அளிக்கப்படுவதால் ஓரளவு இங்கிலீஷ் தெரிந்தவர்களும் சேர்ந்து திருத்தமாகக் கற்றுத் தமக்குள்ள சந்தேகங்களைப் போக்கிக் கொள்ளலாம். (3) இத்தபால் முறையில் படிக்க ஆண்களும் சேரலாம்; பெண்களும் சேரலாம்.

அச்சிட்ட மனுவையும் முழு விபரங்களையும் எட்டு நயா பைசா (8 புதிய காசுகள்) தபால் தலை அனுப்பிப் பெறுக.

ஓய்வு நேரத்தைப் பயன்படுத்தி நல்ல முறையில் உலக மொழியாம் ஆங்கிலத்தைக் கற்க முன் வருக.

S. P. S.



# யார் உண்மையிலே பாதிக்கப்படுகிறார்கள்?



தொங்கி ஆடுகையில், குழந்தையின் பிடி தளர்கிறது...தரையில் விழுகையில் வலியினால் அவதியுறுகிறாள். ஆனால் அவள் விழுவதைப் பார்க்கையில் அவளது பெற்றோர்கள் வேறு விதமாக அவதியுறுகிறார்கள்.

பெற்றோர் என்ற நிலை பல மனவெழுச்சிகளைக் கொண்டது. அவைகளில் ஒன்று உங்கள் குழந்தைகளின் குதூகலங்களிற்கும், கஷ்டங்களுக்கும் பிரதியாக ஏற்படும் அனுதாபம், மற்றொன்று அவர்களது இன்றைய நலத்தையும், வருங்கால நலத்தையும் பற்றிய கவலை.

தீர்க்கதரிசியான பெற்றோர் என்ற நிலையில் நீங்கள் அவர்களுடைய எதிர்காலத்திற்குச் சேகரித்து வைக்க விரும்புகிறீர்கள். ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் உங்களது கவலையைத் தனதாக்கிக்கொள்கிறது. உங்கள் குழந்தைகளுக்கான எதிர்காலத் திட்டங்களுக்கு அது உத்திரவாதமளிக்கிறது — நீங்கள் உயிருடன் இருந்தாலும் சரி, இல்லாவிடினும் சரி.

எவ்வளவு முடியுமோ அவ்வளவு சேமியுங்கள் —ஒவ்வொரு மாதமும் லைப் இன்ஷ்யூரன்ஸில் சேமிக்கப்பட்ட ஐந்து அல்லது பத்து ரூபாயும் கூட, உங்களுக்கும் உங்களால் நேசிக்கப்படுபவர்களுக்கும் ஒரு பாதுகாப்பை அளிக்கும்.





**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**



# கலெக்டர் கலங்கினர்

ராபா

"மூட்டாள் பயல்! மடையன்! மட்டி! உதவாக்கரை! விட்டுத் தள்ளு! கோணிச் சாக்கைத் தோளிலே போட்டுக்கிட்டுத் தெருத்தெருவா விற்கிறானும்! இவன்தான் சுயராச்சியம் வாங்கித்தரப் போறானும்! அவன் பிள்ளையா எனக்கு! அணில்பிள்ளை! என்றைக்கு அந்தப் பய சொல்கிற பேச்சைக் கேட்காமே இந்தக் காந்திக் கும்பலிலே சேர்ந்துக்கிட்டுக் கோணிப்பை விற்க ஆரம்பிச்சானே, அன்றைக்கு அவனுக்குத் தலை முழுகிட்டேன்!" மிராசுதார் மீனாட்சி சுந்தரத்தின் அமிமொழிகள் தம் மூத்த மகன்மேல் இப்படிப் பொழியப் பட்டன. இது நடந்து இருபத்தைந்து வருஷங்கள் இருக்கும். மீனாட்சி சுந்தரத்தின் மூத்த மகன் குமாரசாமி மகாத்மாவின் தேசீய இயக்கத்தில் ஈடுபட்டு, கதர்த் தொண்டுக்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டான். இளம் பிராயம்; கலாசாலைப் படிப்பைப் பாதியில் நிறுத்திவிட்டுக் கதர்த் தொண்டில் அவன் இறங்கினான்.

அன்று முதல் அவன் தகப்பனார் கட்டிய மூட்டாள் பட்டத்துடன் ஆத்ம சிநேகிதர்கள் கூட அவனைக் "கதர்ப் பித்து" என்று அழைப்பதற்கு ஆரம்பித்தார்கள்.

அன்று முதல் அத்தொண்டில் சளைக்காமல் ஈடுபட்டு வந்தான். தன் தகப்பனார் வைக்கப் போகும் சொத்து சுதந்திரங்களைக் கூட வெறுத்து எளிய வாழ்க்கை நடத்தி வந்தான். ஊர் ஊராகச் சென்று பிரசாரம் செய்வது மட்டுமல்லாமல் அங்கங்கே கதர்ப் பணியை நிறுவி, தமிழ் நாட்

டின் மூலைமுடுக்குக் கிராமங்களில் ஏழை மக்களுக்குக் காந்திவழியைக் காட்டிக் கைராட்டையைக் கொண்டு கைகொடுத்து உதவினான். நகரத்தில் அவன் சகாக்கள் அவனைக் 'கதர்ப் பிச்சு' என்று அழைத்தார்கள். கிராமங்களிலோ, ஏழைகள் அவனைக் "காந்தி ஐயா!" என்றே வரவேற்றார்கள்.

* * *

மூத்த மகன் இப்படிக் குட்டிச்சுவராகப் போன குறையைத் தமது இளைய மகன் கணேசனை முன்னுக்குக் கொண்டு வந்து கரையேற்றிய பெருமையில் மிராசுதார் மீனாட்சிசுந்தரம் மூழ்கினார். பெரியபடிப்பெல்லாம் ஆனதும், சீமைக்கு அனுப்பினார்; ஐ. ஸி. எஸ். பரீட்சையிலும் தேறி வந்தான். சீமைக்குப் போன மகன் புகழ் மண்டி சிகரெட் புகை சூழத் திரும்பி வந்த பெருமையைக் கண்டு பூரித்தார் மிராசுதார். கணேஷ் ஐ. ஸி. எஸ். வந்த புதிதில், கதிரவன் மலை வாயில் விழுந்ததும், அவன் தொண்டை சீமைத் திராவகத்தில் நனையாவிட்டால் மறுபொழுது புலராது.

ஐ.ஸி.எஸ். ஆனதால், தம் அந்தஸ்துக்குத் தகுந்த பெரிய இடத்துப் பெண்ணையும் தேடிக் கலியாணம் செய்து வைத்தார் மிராசுதார் செல்வக்குமரன் கணேஷுக்கு. நாளடைவில் கணேஷ், பிஞ்சு கலெக்டரிலிருந்து பெரிய கலெக்டர் ஆகி, குழந்தை குட்டிகளுடன் வாழ்ந்த சம்பிரமத்தையும் கண்ணால் கண்டுவிட்டு, ஆனந்தத்தில் கண்ணை மூடினார் மிராசுதார்.

கணேஷ் ஐ. ஸி. எஸ். பெரிய பெரிய கௌரவப் பதவிகள் வகித்து உத்தியோக ஏணியில் ஏறினான்.

குமாரசாமி கதர்ப்பிச்சுவாகவே விடாமல் தொடர்ந்து தன் தொண்டில் ஈடுபட்டிருந்தான்.

ஒரு தாய் வயிற்றில் பிறந்த இரு சகோதரர்களின் வாழ்க்கையும் தனித் தனிப் பாதைகளில் சென்று கொண்டிருந்தன. ஒருவர் ஆகாய விமானத்தில் பறக்கிறார்; மற்றொருவர் கால் நடையாகத்தான் போகிறார். என்றைக்காவது ஒரு நாள் இரு யாத்திரிகர்களும் சந்திக்காமலா இருக்கப் போகிறார்கள்?

* * *

மிராசுதார் மீனாட்சிசுந்தரம் மிராசுக்குட்பட்ட செங்கம்பட்டி கிராமத்தில் ஐந்து வருஷங்களாக மழையென்ற வாசனையே கிடையாது. கழனிகள் வறண்டன; பூமி பாளம் பாளமாக வெடித்தது. நிலத்தை உழுத கலப்பைகள் துருப்பிடிக்க ஆரம்பித்தன. அவற்றை உபயோகித்தவர்கள் விற்க ஆரம்பித்தார்கள்; சிலர் வேறு வழியில்லாமல், நுகத்தடியை வெட்டி விறகாகக்கூட விற்றார்கள். மாடுகளை ஒவ்வொன்றாகக் கசாப்புக் கடை சாயபுவுக்கு விற்றார்கள்.

தங்களுக்கு ஒரே ஜீவனோபாயமாக இருந்த விவசாயத் தொழில் இல்லாமல் போகவே, ஊரை விட்டே சிலர் வெளியேறினர். ஆனால் 'செத்தாலும் சொந்த மண்ணில் சாவோம்' என்று பிடிவாதமாக இருந்தவர்கள் பலர்--அதிலும் பெரும்பான்மையோர் பெண்மணிகள்-' குடிசையானாலும் தங்கள் வீடுகளை விட்டு வெளியே போய் வேலை தேடுவதற்கு மறுத்தார்கள்.

அம்மாதிரி மறுத்தவர்களில் வள்ளியாத்தா ஒருத்தி. அவள் புருஷன் பொன்னப்பன், "ஏம்புள்ளே! இங்கே சாவணும்? டவுனுக்குப்போனால் கூலி கிடைக்கும். அங்கே ஏதோ மில்லு வைச்சிருக்காங்களாம். புதுசா ஆளு எடுக்கிறாங்களாம்! நீ வந்தாலும் வராட்டியும் நான் போகத்தான் போகிறேன்" என்று பிடிவாதமாக வெளியேறி விட்டான். அவன் ஐந்து வயதுப் பையனும், மூன்று வயதுப் பெண் குழந்தையும், "அப்பா! அப்பா! போவாதே!" என்று அலறினார்கள். பொன்னப்பனா கேட்பவன்? தன் போலுள்ள வயசுப் பிள்ளைகள் டவுனுக்குப் போய் நன்றாகச் சம்பாதித்துக் குஷியாகக் காலங் கழிப்பதாகக் கேள்விப்பட்ட பொன்னப்பனின் மனம் ஒரு நிமிஷமும் அந்த வறண்ட கிராமத்தில் நிலைத்திருக்க வில்லை.

பொன்னப்பன் நகர யாத்திரையைத் தொடங்கினான். அவன் குடும்பம் பரிதவித்தால் அவனுக்கென்ன? செங்கம் பட்டியில் ஒரே பரபரப்பு; "காந்தி ஐயா வருகிறாரு" என்று ஊரில் செய்தி பரவியது. "காந்தி ஐயா" நம் குமாரசாமிதான்! அங்கே பட்டினி கிடக்கும் பெண்களுக்குக் கைராட்டையையும் பஞ்சையும் கொடுத்தார்; நூற்கச் சொன்னார். வள்ளியாத்தாவுக்கும் ஒரு ராட்டை கிடைத்தது. அவளும் அவள் குழந்தை செல்லக்கண்ணும் ராட்டையில் எளிதில் நூற்கக் கற்றுக் கொண்டார்கள். அதுவே அவர்கள் வயிற்றில் கஞ்சி வார்த்தது. பெய்யாத மழையினால் உண்டானவதை விட, அவர்கள் வாழ்க்கையும் அந்தக் கிராமவாசிகள் வாழ்க்கையும் குளிர்ந்தன.

* * *

பல ஆண்டுகள் சென்றன. கதர்ப் பிச்சு குமாரசாமி ஆரம்பித்த செங்கம் பட்டி காந்தி சேவாசிரமம் இப்போது

பிரமாதமான சேவை செய்து அந்தக் கிராமத்திலும் சுற்று வட்டாரத்திலும் ஏழைக் குடும்பங்கள் கௌரவமாக வாழுவதற்கான வழியைக் காட்டி உய்வித்து வந்தது.

வள்ளியாத்தாவும் அவள் மகனும் இப்போது ராட்டை நூற்பதில் கைதேர்ந்தவர்களாகி விட்டார்கள். வள்ளியாத்தா மகன் காந்தி சேவாசிரமத்தில் கைத்தொழில் பயின்று, படிக்கவும் படித்து வந்தான்; ஒழிந்த நேரங்களில் தாயாருக்குப் பஞ்சடித்துப் பட்டை போட்டு உதவுவான். கைத்தறி நெசவிலும் அவன் பயிற்சி பெற்றுத் தேர்ந்து விட்டான்.

நாடு சுதந்திரம் அடைந்து பத்து வருஷங்களுக்கு மேலாகிவிட்டன. கணேஷ் ஐ. ஸி. எஸ்.ஸும் மத்திம வயதைத் தாண்டி விட்டார். அவருடைய மூத்த பெண்ணும் அடுத்த பிள்ளையும் கலாசாலையில் படித்து வந்தார்கள். இன்னும் ஒரு பெண்ணும், பிள்ளையும் பள்ளிக்கூடத்தில் படித்து வந்தார்கள். கலாசாலைப் பெண் நாகரிகத்தில் எள்ளளவும் குறைவுபடாத வகையில், முகப்பூச்சு, உதட்டுச் சாயம், நகச்சாயம், நைலான் புடவை, டென்னிஸ் மட்டை முதலிய நாகரிகச் சின்னங்களுடன் விளங்கினாள். பையனோ என்றும் அணையா ஜோதியை வாயில் 'ஸ்டைலா'க வைத்துக் கொண்டு 'குப் குப்'பென்று மெயில் எஞ்ஜின் போல் புகை விட்டுக் கொண்டே இருப்பான். அவன் கலாசாலை மாணவர்களில் தலை சிறந்தவன் என்பதைப் பள பளவென்று வாரிவிட்ட அவன் கிராப்பும், கோரா இருதாவுமே பறைசாற்றின.

ஒரு நாள்—அன்று காந்தி ஜயந்தி தினம்—கணேஷ் ஐ. ஸி. எஸ். பங்களாவுக்குக் கதர் மூட்டையைத் தூக்கிக் கொண்டு விற்க வந்தார்கள் சில தொண்டர்கள். "காடி!" ('காதி'க்கு ஐ. ஸி. எஸ். உச்சரிப்பு இது!) "நோ நோ! கோ அவே! வீ காண்ட் அபோர்ட் பை காடி!" ("எங்களுக்குக் கதர் வாங்கிக் கட்டாது!") என்று விரட்டி விட்டார் கணேஷ் வந்தவர்களை.

அன்றிரவு, அவர் பெண் சுசி (சுசீலாவுக்கு நவீனச் சுருக்கம்) "டாடி, வென் ஆர் வீ கெட்டிங் அவர் பிரிஜ்?" (பிரிஜ் — குளிர்ப் பெட்டியின் ஆங்கிலச் செல்லப் பெயர் இது!) "நான் என் பிரண்ட்ஸுக்குப் பார்ட்டி வைக்கிறேன்! ஐஸ்கிரீம் கூல்டிரிங்க்ஸ் எப்படிக் கொடுப்பேன் பிரிஜ் இல்லாமல்?" என்று கெஞ்சிக் கெஞ்சி அங்கலாய்த்தாள். பெற்ற மனம் எப்படிக் கேட்கும்?

மறுநாளே இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாயில் ஒரு குளிர்ப் பெட்டி வந்து பங்களாவில் இறங்கியதும்தான் சுசியின் உள்ளமும், கணேஷின் மனமும் குளிர்ந்தன.

* * *

அதே சமயத்தில், 'ஹோட்டல் டிலக்ஸ்' என்ற நவீன சிற்றுண்டி விடுதியிலிருந்து சிநேகிதர்களுடன் வெளியே வந்து கொண்டிருந்த மோகனைப் (கணேஷுடைய தனிப் பிறவி) பார்த்து, "ஐயா! தர்மதுரையே! மூணுநாளா பட்டினி சாமி! காலணா பிச்சைப் போடு, சாமி!" என்று ஒரு பிச்சைக்காரன் கேட்டான். அவன் முகத்தில் "புப்" என்று புகையை விட்டு விட்டு "டாம் ந்யூஸன்ஸ் தீஸ் பெக்கர்ஸ்!" என்று சொல்லிக் கொண்டே ஒரு அணாவைத் தூக்கி எறிந்து விட்டு, "இந்தப் பயல்



களுக்கு வேலை செய்யிறத்துக்கென்ன கேடு!" என்று ஒரு சிறிய பிரசங்கமும் ஆங்கிலத்தில் செய்து விட்டுப் போனான்.

பிச்சைக்காரனுக்கு அந்த இளம் முகத்தின் ஜாடை யாரையோ நினைவூட்டியது. பொன்னப்பனுக்கு மிராசுதார் மீனாட்சிசுந்தரம் முகம் எப்படி மறக்கும்? அவர் பேரனுக்கு அப்படியே அதே கண், மூக்கு ஜாடை இருந்ததால் அவனுக்கு மிராசுதார் நினைவு வந்ததில் சிறிதும் அதிசயமில்லை.

* * *

"ஏனப்பா! இப்படிப் பிச்சை எடுக்க வேண்டும்? வேலை எங்கும் அகப்படவில்லை?" என்ற அனுதாபக் குரல் பொன்னப்பனை மீண்டும் பிரமிக்கச் செய்தது. 'இந்தக் குரலை எங்கே கேட்டிருக்கிறோம்?' என்று நினைத்தான்.

ஆளைப் பார்த்ததும் "இந்தக் காந்திக்காரங்களுக்கு வேறுவேலை இல்லை! ஏதோ பெரிதாக உலகத்தையே காப்பாற்றுவதாக எண்ணம்! நமக்கு என்ன இவர்

களால் நலம்!" என்று நினைத்துக் கொண்டான்.

அந்தக் குரல் அவனை மேலும் நினைக்க இடம் கொடுக்கவில்லை. "ஏன்! உனக்கு யாரும் வேலை கொடுக்க வில்லையா, பாவம்! எப்போதும் இப்படிப் பிச்சையா எடுக்கிறாய்? எந்த ஊர் நீ! ஏன் இங்கே இப்படி அல்லாடுகிறாய்?" என்று மேலும் அந்தக் குரல் தொடர்ந்தது.

"அந்த வயிற்றெரிச்சலைக் கேட்காதே, ஐயா! நான் செங்கம்பட்டியைச் சேர்ந்தவன் - மில்லிலே இப்படி வேலை கிடைக்கும்னு வந்தேன். வந்த புதுசு வேலை கிடைச்சுது; சுமாரா சம்பாரிச்சேன். கூட இருந்தவங்க பழக்கத்தாலே சம்பாரிச்ச பணத்தைக் குடி, சூதாட்டத்திலே தோத்தேன். மில்லிலே புது மாதிரி இயந்திரங்கள் வரவழைச்சு ஆளைக் குறைச்சுப்புட்டாங்க. வெளியிலே அனுப்பிச்சவங்களிலே நானும் ஒருவன். வேறே மில்லிலே குறைவு சம்பளத்துக்குச் சேர்ந்தேன். அந்த மில்லிலே வேலைநிறுத்தம் வந்திச்சு. மில்லையே மூடிப் போட்டாங்க. மறுபடியும் தெருவிலே நிற்கவேண்டியதாச்சு. ரோடு கல்லு உடைக்கிறதுலேயிருந்து மூட்டை தூக்கறது வரை எல்லாக் கூலி வேலையும் பார்த்துவிட்டேன். ஆனால் இந்தப் பிச்சையிலே இருக்கிற நிம்மதியும் வரும்படியும் அதுலே எல்லாம் ஏதுங்க!" என்று முடித்தான்.

"அடே, பைத்தியக்காரா! சரி வா, என்னோடே! இதைவிடக் கௌரவமான வேலை தரேன். தயங்காதே! உன் பெயரென்ன?" என்றார் குமாரசாமி.

"பொன்னப்பன்" என்றதும் தூக்கி வாரிப் போட்டது. "பொன்னப்பனா? வாப்பா, என்னைத் தெரியவில்லை?" என்றான் குமாரசாமி.

"யாரு! சின்னப் பண்ணையாரா!" என்று கேட்டு அதிசயத்தில் மூழ்கினான் பொன்னப்பன்.

**கா**ந்தி ஜயந்தி வாரத்தைச் செங்கம்பட்டி காந்தி சேவாசிரமத்தில் வழக்கம் போல் பிரமாதமாகக் கொண்டாடினார்கள். கலெக்டர் கணேஷ் கொண்டாட்ட விழாவில் தலைமை வகிக்க, குமாரி கலா பரிசுகள் வழங்க ஒப்புக் கொண்டிருந்தாள். (குமாரி கலா இப்போது பல நவீன படித்த பெண்களைப்போல் "ஸோஷல் ஸர்வீஸில்" ஈடுபட்டிருந்ததால் இந்தமாதிரி விழாக்களை விடுவதில்லை.) அம்பர் ராட்டை நூற்பில் எண்பதாம் நம்பர் நூல் நூற்று மாதம் ஐம்பது ரூபாய் சம்பாதிக்கும் ஸ்ரீ பொன்னப்பனுக்கு முதற் பரிசு ஒரு கதர் சால்வை வழங்கப்பட்டது.

சாதாரண ராட்டையில் தேர்ச்சியடைந்து மெல்லிய நூல் அதிகம் நூற்கும் ஸ்ரீமதி வள்ளியாத்தாவுக்கும், அவள் பெண்ணுக்கும் பரிசுகள் கதர்ப் புடவைகள்.

நெசவில் நூதன ரகங்கள் நெய்யும் பொன்னப்பன் மகன் கந்தனுக்கு ஒரு தங்கத் தோடா.

அன்று விழாவுக்குத் தலைமை வகித்த கலெக்டர் கணேஷ் கண்களில் நீர் ததும்ப, "நான்தான் முட்டாளாக இருந்தேன், இத்தனை நாட்கள். என் தமையனார் குமாரசாமிதான் அறிவாளி, உத்தமர். நமது ராஜ்யத்தில் இரண்டு லக்ஷம் மக்களுக்கு மேல் பிழைப்புக் கொடுக்கும் இக் கதர் இயக்கத்தைப் பழிப்பவர்கள் அறியாதவர்கள்; படித்த முட்டாள்கள்" என்று விளாசித் தள்ளிவிட்டார்.

சர்க்காரே கதர்த் திட்டத்தை ஏற்று நடத்துவது வீண் போகவில்லை. கலெக்டர்கூடக் கண் கலங்கினார்!

## நூற்பது ஒரு தவம்

ராட்டையில் ஓரோர் இழை நூற்கும்போதும் எனக்கு இந்தியாவின் ஏழை எளியவர்களைப் பற்றிய நினைப்புத்தான் ஏற்படுகிறது. பசியால் துடிக்கும் ஒருவனுக்கு வயிற்றை நிரப்புவதுதான் ஒரே ஆசை. வயிறுதான் அவனுக்குக் கடவுள். பசித்தவனுக்குச் சோறிடுபவன்தான் எஜமான். அவன் மூலமாக அவன் ஆண்டவனைக் கூடக் கண்டுவிடுவான். அம்மாதிரி நொண்டி நடமுற்றவர்களுக்குப் பிச்சை போடுபவர்கள் தன்னையும் அவர்களையும் கேவலப்படுத்தியவர்களாவார்கள். அவர்களுக்கு வேண்டியது அதாவது ஒரு வேலை. லட்சோப லட்சம் மக்களுக்கு ஊதியம் அளிக்கும் வேலை கையால் நூல் நூற்பதுதான். என்னுடைய இந்த நம்பிக்கையை இந்திய உழைப்பாளிகளின் மனத்தில் பதியவைக்க நான் பிரசங்கங்கள் ஏதும் செய்யப் போவதில்லை. நானே நூற்கத் தொடங்குவதன் மூலமே அந்த நம்பிக்கையை அவர்கள் மனத்தில் பதிய வைப்பேன். அதனால்தான் நான் நூற்பதை ஒரு தவமாகவும், வேள்வியாகவும் கருதி விளக்கியுள்ளேன். உண்மையான அன்பும் உழைப்பும் ஏழை எளியவர்களுக்காக எங்கெங்கெல்லாம் காட்டப்படுகிறதோ, அங்கெங்கெல்லாம் ஆண்டவன் இருக்கிறான். ராட்டையில் நான் நூற்கும் ஒவ்வொரு இழை நூலிலும் இறைவனை நான் காண்கிறேன்.

— காந்திஜி

ஏ எல் எஸ்
புரொடக்ஷன்ஸ்
மகிழ்ச்சியுடன் வெளியிடும்
ஹாஸ்ய
சித்திரம்

பத்மினி பிக்சர்ஸ்

சபாஷ்
மீனா

டைரக்ஷன் :
B.R. பந்துலு
ஸ்டுடியோ : பரணி

சென்னை
காஸினோ • பாரத்
மஹாலக்ஷ்மி
(பெரம்பூர்)
மற்றும் தென்னாடெங்கும்
நடைபெறுகிறது

ALS

ARUNA




"தமிழா! தெய்வத்தை நம்பு. பயப்படாதே! உனக்கு நல்ல காலம் வருகிறது. உன் சாதியிலே உயர்ந்த அறிஞர்கள் பிறந்திருக்கிறார்கள். தெய்வம் கண்ட கவிகள், அற்புதமான சங்கீத வித்வான்கள், பல நூல் வல்லார்கள், பல தொழில் வல்லார்கள் தோன்றுகிறார்கள். உன் சாதியிலே தேவர்கள் மனிதர்களாக அவதரித்திருக்கிறார்கள்.

"சாதி வேற்றுமைகளை வளர்க்காதே! பெண்ணை அடிமை என்று கருதாதே! முற்காலத்துத் தமிழர்கள் மனைவியை 'வாழ்க்கைத் துணை' என்று பெருமையோடு போற்றினார்கள். ஆணும் பெண்ணும் சமம்.

"வேதங்களை நம்பு. அவற்றின் பொருளைத் தெரிந்துகொண்டபின் நம்பு. புராணங்களைக் கேட்டுப் பயனடைந்து கொள். புராணங்களை வேதங்களாக நினைத்து மடமைகள் பேசி விலங்குகள் போல் நடந்து கொள்ளாதே!" என்று அறிவுறுத்திய அமுதத் தமிழ்க் கவியின் இரண்டாம் நாள் திருவிழா செப்டம்பர் 12-ந் தேதி காலையில் நடைபெற்றது.

"பொழுது புலர்ந்தது
யாம்செய்த தவத்தால்
புன்மை யிருட்கணம்
போயின யாவும்"

என்று பாடிக் கொண்டே எல்லாரும் பாரதி விழாவின் இலக்கியப் பகுதி மகாநாட்டுக்குச் சென்றோம். தமிழரசுக் கட்சித் தலைவர் திரு ம. பொ. சிவஞானம் அவர்கள் தலைமையில் மகாநாடு சிறப்பாக நடைபெற்றது.

திரு ம. பொ. சி. அவர்கள் இரண்டு நாள் விழாவிலும் பிரமாதமான இலக்கியச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். பெருந்தமிழ்ப் புலவர்களும், பாரதியாரைத் தங்கள் சொந்த உடைமையாகக் கருதுகிறவர்களும் மூக்கின் மேல் விரல் வைத்து அதிசயிக்கும்படி இருந்தன அவருடைய சொற்பொழிவுகள். அவற்றை யெல்லாம் சரியாக எழுதிக் கொள்ளத் தமிழ்ச் சுருக்கெழுத்து தெரியவில்லையே என்று எனக்கு வருத்தமாக இருந்தது.

"தமிழை வளர்ப்பது போல் பாசாங்கு செய்கிறவர்கள் உண்மையில் தமிழ்மீதும் தமிழ் நாட்டின் மீதும் தமிழ் மக்கள்மீதும் பற்றுதல் இல்லாதவர்கள். தமிழ் இன்னமும் தனக்குரிய இடத்தைப் பெறுவதற்குத் தமிழ் மொழியில் எந்தக் கோளாறும் இல்லை. தமிழ் மொழியின் விஷயத்தில் அதிகாரிகள் நடந்து கொள்ளும் விதத்தில்தான் கோளாறு இருக்கிறது. பாரதியார் பல மொழிகளை நன்கு கற்று உணர்ந்தவர். 'யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவதெங்கும் காணோம்' என்று சொல்லியிருக்கிறார். 'தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா!' என்று பாடியிருக்கிறார். தமிழ் நாட்டுக்குப் புத்துயிர் தந்த பாரதியார் இம் மாகாணத்தைத் 'தமிழ்த் திருநாடு!' என்றுதான் சொல்லியிருக்கிறார். இதைக்கூட உணராத சிலர் இந்த மாகாணத்தின் பெயரைக் 'தமிழ்நாடு' என்று மாற்றி வைக்கப் பயப்படுகிறார்கள்" என்று காரசாரமாக வெளுத்துக் கட்டினார். பாரதியின் தினமான செப்டம்பர் 11-ந் தேதியைச் சர்க்கார் விடுதலை தினமாக அறிவிக்க அவர் கேட்டுக் கொண்ட போது சபையோர் கரகோஷம் செய்து வரவேற்றனர். இந்திய சர்க்கார் பாரதியாரின் திரு உருவத்தைத் தபால் தலையில் போடாமல் இருக்கும் குறுகிய மனோபாவத்தை வன்மையாகக் கண்டித்த போது மேடையில் சிலர் 'வெட்கம், வெட்கம்' என்றனர். விழாவுக்கு வந்த ஒரு லட்சம் மக்களும் அமைதியாக இருந்து கேட்ட



**கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் திருவுருவப் படத்தைத் திரை நீக்கம் செய்கிறார் நடிகர் திலகம் திரு சிவாஜி கணேசன்.**

---

சொற்பொழிவு திரு ம. பொ. சிவஞானம் அவர்களின் சொற்பொழிவுதான்.

இந்த ஆண்டு பாரதி விழாவில் எல்லாரையும் திகைத்துத் திக்குமுக்காட வைத்த பிரசங்கம் மந்திரி கனம் பக்தவத்சலம் அவர்களின் பிரசங்கம். இலக்கிய மகாநாட்டைத் துவக்கிவைத்து வழக்கம்போலவே அவர் நிதானமாகப் பேசினாலும் சூழ்நிலை அவர் மனத்தையே மாற்றிவிட்டது. பெயர் மாற்றத்தில் விருப்பமில்லாத அவரே 'சிவாஜி கணேசன்' என்ற பெயரைப் 'பாரதி கணேசன்' என்று மாற்றிக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்டபோது சபையில் பலத்த ஆரவாரம் ஏற்பட்டது. பாரதியாரின் கண்ணன் பாட்டு, பாஞ்சாலி சபதம், குயில் பாட்டு முதலிய கவிதைகளின் சிறப்பை எடுத்துக் கூறி இவ்வுயரிய கவிதைகளை எல்லாரும் அறிந்து அநுபவிப்பதுடன் உலகமும் அறியச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

இலக்கிய மகாநாட்டில் மந்திரியார் திறப்புரைக்கும் ம. பொ. சி.யின் தலைமை உரைக்கும் பிறகு பாரதியார் கவிதைகள் சிறப்புகளைப் பற்றிப் பல்வேறு இனிய சொற்பொழிவுகள் நிகழ்ந்தன. டாக்டர் மு. வரதராசனார் 'பாரதி போற்றிய குழந்தை' என்பது பற்றி அழகான சொற்பொழிவு நிகழ்த்தினார். 'பாரதியாருக்கு முன்னால் ஒரு குழந்தை விளையாடிக் கொண்டு வருகிறது' என்று அவர் சொற்பொழிவைத் தொடங்கிய விதமே கவிதைப் பண்புடன் விளங்கியது. 'கண்ணம்மா, என் குழந்தை' என்ற மகாகவியின் கவிதையை வரிக்கு வரி எடுத்து விளக்கம் கூறிக் கொண்டே வந்து,

**'' இன்பக்கதைகள் எல்லாம்–உன்னைப்போல்**
**ஏடுகள் சொல்வதுண்டோ !**
**அன்புதருவதிலே – உனைநேர்**
**ஆகுமோர் தெய்வம் உண்டோ !''**

என்ற வரிகளை விளக்கும்போது குழந்தை அப்படியே தெய்வத் திருக்கோலம் கொண்டு எழுந்து அன்பு செய்வது போலவே இருந்தது. டாக்டர் மு. வரதராசன் அவர்களுடைய பல்வேறு நூல்களைப் படித்தவர்கள் அவருடைய இலக்கியச் சொற்பொழிவு எவ்வளவு சுவையாக இருந்திருக்கும் என்று ஊகித்துக் கொள்ளலாம். திரு கி. வா. ஜகந்நாதன் அவர்கள் 'அன்னையின் உருவம்' என்ற தலைப்பில் பாரதியின் மூன்று காதல்களைப் பற்றி இனிய தமிழில் கேட்போர் செவிகுளிர உரையாடினார். பராசக்தியிடம் பாரதியார் காதல் கொண்டு நெருங்கியதும் 'ஷாக்' அடித்தது போல் தூர விலகுகிறார். காதல் மறைந்து விடுகிறது; பக்தி பிறந்து விடுகிறது. இந்தச் சம்பவத்தை அழகாக எடுத்துக் காட்டினார்.

**அன்னையின் வடிவமடா !–இவள்**
**ஆதிபரா சக்தி தேவியடா ! இவள்**
**இன்னருள் வேண்டுமடா !–பின்னர்**
**யாவும் உலகில் வசப்பட்டுப் போமடா !**

என்ற பாரதியின் பாடல் வரிகளை திரு கி.வா. ஜகந்நாதன் சொல்லும் போது எல்லாருமே ஆவேச நிலைக்குச் சென்று அன்னைக்குத் தலை வணங்கும்படியாக இருந்தது. பேராசிரியர் சீநிவாசராகவன் அவர்கள் பாரதியார் நடந்த பாதையில் நடந்து சென்று அவர் செய்த கவிதைத் தொழிலை எடுத்துப் பெருமையோடு பேசினார். திரு ப. ஜீவானந்தம் அவர்களின் சொற்பொழிவில் அவருடைய இலக்கியப்பற்று நன்கு வெளியாயிற்று. திரு ப. ஜீவானந்தம் அவர்களின் இரண்டு நாள் பேச்சிலும் அவர் வெறும் வாய்ப்பேச்சுடன் நில்லாமல் பாரதியின் வாக்குகளைச் செயல் முறையில் செயலாற்றுவதிலும் எவ்வளவு ஊக்கம் கொண்டவர் என்பது வெளியாயிற்று. நாவலாசிரியர் திரு அகிலன் பாரதியாரின் உரை நடையைப்பற்றி ஒரு சிறந்த உரையாடல் செய்தார். இந்தக் காலத்தில் உள்ள தலைசிறந்த நாவலாசிரியர்களில் ஒருவர் திரு அகிலன். அவர் தம்முடைய பிரசங்கத்தில் தமிழ்மொழியின் வளர்ச்சிக்குப் பாரதியார் வாழ்ந்து காட்டிய விதத்தை வரிசைப்படுத்திக் கூறினார். பாரதியாரின் தெய்வ நெறியைப் பற்றித் திரு ஐயம்பெருமாள் கோனார் ஒரு அற்புதமான பிரசங்கம் செய்தார்.

இரண்டு நாள் விழாவிலும் இன்னும் பலர் பாரதியின் சிறப்பை எடுத்து முழக்கினார்கள். வீரம் விளைந்த பாரதியைப் பற்றி வீரமும் நகைச்சுவையும் கலந்த ரஸமான சொற்பொழிவாற்றினார் திரு சின்ன அண்ணாமலை.

கம்பர், இளங்கோ, வள்ளுவர் ஆகிய முப்பெரும் புலவர்களைப் பற்றியும் பாரதியார் கண்ட கோணத்தின் சிறப்புகளைக் காட்டிப் பேசினார் திரு எம். ஆர். பி. குருசாமி. 'பாரதியும் தொழிலாளர்களும்' என்பதைப் பற்றி மேஜர் ஆர். சபேசன் அவர்கள் அற்புதமான பிரசங்கம் ஒன்று நிகழ்த்தினார். தொழிலதிபர்களும் தொழிலாளர்களும் கேட்டுப் பயன் அடையக் கூடிய கருத்துச் செறிவுள்ள பேச்சு. திரு கே. டி. கோசல்ராம் 'பாரதி கண்ட தேசியம்' என்பது பற்றியும், 'பாரதியும் பத்திரிகையும்' என்பது பற்றி திரு டி. ராமகிருஷ்ணன் அவர்களும் பேசினார்கள். புத்தனேரி சுப்பிரமணியம் அவர்கள் 'பாரதி யார் ?' என்பதைப் பதினாறு கோணங்களில் நிறுத்திக் காண்பித்தார். தமிழ்நாடு ஆசிரியர் திரு டி. மாணிக்கவாசகம் அவர்கள் பாரதி

யார் தொழில் வளர்ச்சி பற்றிக் கூறிய கருத்துக்களை எடுத்து விளக்கினர்.

விழா நடுவில் பாரதியின் தாய்மாமன் திரு சாம்பசிவ அய்யர் அவர்கள் தம்முடைய புதல்வியுடன் வந்து பாரதியின் பாடலை மிகுந்த உற்சாகத்துடன் பாடினர். பாரதியாரைவிட மூன்று வயது அதிகமான திரு சாம்பசிவ அய்யர் தம்முடைய தளர்ந்த வயதிலும் வாலிப மிடுக்குடன், "முருகா! முருகா! முருகா!" என்று பாடிய போது சபையில் அசாதாரணமான அமைதி நிலவியது.

மற்றும் கலைஞர்கள் ஏ. பி. நாகராஜன், கே. சாரங்கபாணி, எஸ். வி. சகஸ்ரநாமம், பி. டி. சம்பந்தம் ஆகியோர் அருமையான சொற்பொழிவாற்றினர்கள். தர்மபுரியைச் சேர்ந்த மணிமேகலை என்னும் சிறுமி 'பாப்பாவும் பாரதியும்' என்ற தலைப்பில் பேசிச் சபையோரை வியப்பில் ஆழ்த்தி விட்டாள். பாரதியின் புதுமைப் பெண்ணாக எதிர்காலத்தில் மணிமேகலை விளங்குவாள் என்பது அவளுடைய பேச்சில் தெளிவாகத் தெரிந்தது. இவ்வளவு பேர்கள் பேசியதில் உள்ள சாராம்சத்தை எடுத்துக் காட்டிப் பேசிய திரு ம. பொ. சி. அவர்கள் விழாவுக்கு முத்தாய்ப்பு வைத்தார். இத்துடன் பாரதி விழா இலக்கிய நிகழ்ச்சிகள் இனிது முடிந்தன.

** ** **

திருவிழாவில் மற்றொரு சிறப்பான அம்சம் 'மகாகவி மலர்' ஒன்று வெளியிட்டிருப்பதாகும். இந்த மலரை ஒரு ரூபாய் பணம் கொடுத்து வாங்கிப் படாதிபதி திரு எம். ஏ. வேணு அவர்கள் சம்பிரதாயமாக வெளியிட்ட முறை நாடகப் பண்போடு இருந்தது! 'சம்பூர்ண ராமாயணம்' படத்தை வெளியிட்டுத் தலைவர் ராஜாஜியின் பாராட்டுதலையே பெற்ற திரு எம். ஏ. வேணு அவர்கள் தமிழ்ப் பண்பும் உணர்ச்சியும் நிறைந்த அருமையான உரை நிகழ்த்தினர். 'தமிழ்நாடு' என்று இந்த மாகாணத்துப் பெயரை மாற்றச் சாத்துவிகக் கிளர்ச்சி செய்யக் கேட்டுத் தமிழ்ப் பெருமக்களை உற்சாகப்படுத்தினர்.

இந்த ஆண்டு பாரதி விழாவின் சின்னமாக விளங்கும் இந்த மகாகவி மலரிலே தமிழ்நாட்டின் தலைசிறந்த அறிஞர்கள் சுமார் இருபத்தைந்துபேர்களின் கட்டுரைகள் இருக்கின்றன. இந்த அற்புத மலரைக் குறுகிய காலத்தில் கொண்டுவந்தவர் திருபுத்தனேரி சுப்பிரமண்யம் என்று அறிந்தேன். எல்லாரும் வியக்கும் முறையில் இந்த மலரைக் கொண்டு வந்த அவரை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

சிவாஜி கணேசன் அவர்கள் பாரதி மண்டபத்துக்கு முன்னால் ஒளிவீசிப் பிரகாசிக்கும் மின்விளக்கு ஒன்றையும் இந்த விழாவின் ஞாபகார்த்தமாக அமைத்திருக்கிறார். இந்த விளக்கைத் திரு ஏ. பி. சி. வீரபாகு அவர்கள் ஏற்றி வைத்து விழாவுக்கு ஒளியூட்டினர்.

** ** **

திருவிழாவில் முதல் நாள் மாலை சங்கீத டைரக்டர் திரு ஜி. ராமநாதன் அவர்கள் சபையோருக்கு இசைத் தமிழ் விருந்தளித்தார். திரு ஜி. ராமநாதன் சினிமா உலகில் புகழ் பெற்றவர். அவர் தம்முடைய கம்பீரமான குரலில் பாரதியார் பாடலைப் பாடியது வெகு அழகாயிருந்தது. சுமார் பத்து பாரதியார் பாடல்களை அட்சர சுத்தத்துடன் அருமையாகப் பாடினர். அவர் பாடிய பாடல்களில் "கண்ணன் என் சேவகன்" என்ற தலைப்பில் பாரதி பாடியுள்ள 'கூலி மிகக் கேட்பார் கொடுத்ததெலாந் தாமறப்பார்" என்று தொடங்கும் பாடல் சிகரமாக விளங்கியது.



**பேராசிரியர் கல்கியின் படத்தைத் திறந்து வைத்த ஜெமினி அதிபர் திரு எஸ். எஸ். வாசன் அவர்களுக்குக் கதர் சால்வையைப் போர்த்துகிறார் வரவேற்புக் குழுத் தலைவர்.**

இரவு ஒன்பது மணிக்கு மேல் திருமதி கே. பி. சுந்தராம்பாள் குழுவினர் இன்னிசை விருந்து நடைபெற்றது. இசைவிருந்து நடைபெற்ற மூன்று மணிநேரமும் அந்த மாபெரும் சபையில் கூடியிருந்த பல்லாயிரக் கணக்கான மக்களும் இனிமையான தமிழ் இசை இன்பத்தில் மூழ்கித் திளைத்தார்கள்.

இரண்டாம் நாள் மாலை சிதம்பரம் திரு ஜெயராமன் சபையோருக்கு வணக்கம் செலுத்திவிட்டுக் கச்சேரியைத் தொடங்கினர். இரண்டு மணி நேரம் கச்சேரி நடைபெற்றது. அந்த மாபெரும் சபையில் கூடியிருந்த மக்கள் கூட்டம் அவர் பாடிய எல்லாப் பாடல்களையும் கேட்டு அனுபவித்து மகிழ்ந்தது.

அவருக்குப் பிறகு ஐந்தாறு கார்களில் ஏராளமான பக்க வாத்தியங்களுடன் வந்த திரு ஹரிராம் சேட் அவர்களின் கச்சேரி அமோகமாய் நடைபெற்றது. விஸ்தாரமான அந்தப் பந்தலில் அமர்ந்திருந்த மகாஜனங்கள் தங்கள் அசௌகரியங்களையும் பொருட்படுத்தாமல் கேட்டுக் களித்தனர்.

இதற்குப் பிறகு எல்லாரும் ஆவலுடன் எதிர்பார்த்த கலை நிகழ்ச்சிகள் ஆரம்பமாயின. தமிழகமெங்கும் புகழ் பெற்ற கலைஞர்கள் பலர் கலை நிகழ்ச்சிகள் நடத்திப் பாரதி விழாவைச் சிறப்பித்தார்கள்.

குடுகுடுப்பை வேடத்தில் தோன்றிப் பாரதியாரின் பாடலைப் பாடி மகிழ்வித்தார் நகைச்சுவை நடிகர் திரு சாரங்கபாணி. திருவாளர்கள் வி. எம். ஏழுமலை, பி. டி. சம்பந்தம், சாய்ராம், ராஜகோபால் ஆகியோர் பாரதி

யாரின் 'எங்கள் முத்துமாரியம்மா!' பாடலைப் பாடி அதற்குத் தகுந்த வேடம் தரித்து ஆடிச் சபையோரைக் குதூகலத்தில் ஆழ்த்தினர். திரு டி.கே. பகவதி அவர்கள் வீர சிவாஜியாக வந்து பாரதியின் 'சத்ரபதி சிவாஜி'யின் போர் நடைப் பாடலைத் தம்முடைய கணீர் என்ற குரலில் பாடி வீர முழக்கம் செய்தார். கப்பலோட்டிய தமிழன் வ. உ. சி.யாக எஸ். வி. சகஸ்ரநாமமும், வின்ஸ் துரையாக வி. கே. ராமசாமியும் வந்து பாரதியின் பாடலை உணர்ச்சியுடன் பாடி உயிர்த் துடிப்புடன் நடித்தனர். ஸ்ரீராம், சகஸ்ரநாமம், பி. டி. சம்பந்தம், நடராசன், கோபால கிருஷ்ணன் குழுவினர் மகாகவியின் 'பாஞ்சாலி சபதம்' பாடலுக்கு ஒத்திகைக் காட்சி நடத்திக் காண்பித்தனர்.



விழாக் குழுத் தளபதியாகத் திறமையுடன் பணியாற்றிய கவிஞர் ஏ. பி. நாகராஜன்.

கடைசியாக திரு சிவாஜி கணேசன் மகாகவி சுப்பிரமணிய பாரதியார் வேடத்தில் மேடையின்மீது தோன்றியபோது வானுலகிலிருந்து சுப்பிரமணிய பாரதியே மேடைக்கு வந்து விட்டது போன்ற ஒரு பிரமை ஏற்பட்டது. அந்த மாபெரும் ஜனக் கூட்டத்தில் ஒரு கணம் நிசப்தம் நிலவியது. அடுத்தகணம் விழாப் பந்தல் ஆடிவிழும் அளவுக்குக் கைதட்டலும் கரகோஷமும் உண்டாயின. பாரதியாக வந்த சிவாஜி கணேசன் சபையோருக்கு வணக்கம் செலுத்தி விட்டு வலது கையை உயரே தூக்கி 'யாமறிந்த மொழிகளிலே!' என்ற பாடலைப் பாடித் தமிழ் முழக்கம் செய்தார். அப்பொழுது சபையில் குழுமி இருந்த ஒரு லட்சம் மக்களும் வீரத் தமிழ் முழக்கம் செய்து ஆரவாரித்தார்கள்.

** ** **

திருவிழா நடத்தியவர்களைப் பற்றிச் சில வார்த்தைகள் கூறவிட்டால் தமிழ் மக்கள் என்னைச் சும்மா விடமாட்டார்கள். சென்ற பத்து ஆண்டுகளாக நடைபெற்று வரும் எத்தனையோ தமிழ் விழாக்களையும் பாரதி விழாக்களையும் பார்த்திருக்கிறேன். திறமையான ஏற்பாடுகளிலும் வெளியூர்களிலிருந்து வந்தவர்களை உபசரிப்பதிலும், அவர்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுப்பதிலும் இந்தப் பாரதி விழாவை நடத்தியவர்களுக்கு ஈடு இணை சொல்ல முடியாது.

பிரசங்க மேடையாகவும், அரங்க மேடையாகவும் உபயோகிக்கப்பட்ட விசாலமான மேடையும் அதன் அமைப்பும் பார்ப்பதற்குப் பதினாயிரம் கண்கள் வேண்டும். அவ்வளவு அற்புதமாக இருந்தன. அகில இந்திய காங்கிரஸ் மகாசபை வைபவத்தைப்போல் பிரமாதமாக இருந்தது பாரதியார் விழா.

இப்படியெல்லாம் வேறு யாரும் செய்யலாம் என்று நினைக்க முடியாத முறையில் பாரதி விழாவை ஏற்பாடு செய்தவர் நடிகர் திலகம் திரு சிவாஜி கணேசன் அவர்கள். அவருக்கு உறுதுணையாக இருந்து தைரியம் கொடுத்து எல்லாக் காரியங்களையும் நடத்திக் கொடுத்தவர் கவிஞர் திரு ஏ.பி. நாகராஜன்.

திரு சிவாஜி கணேசன் அவர்களுக்கு மற்றும் உதவி புரிந்தவர்களில், நகைச்சுவை நடிகர் திரு டி. என். சிவதாணு, திரு யதார்த்தம் டி. பி. பொன்னுசாமிப் பிள்ளை ஆகியவர்கள் என் கண் முன்னால் வருகிறார்கள். இன்னும் பொதுச் செயலாளர் திரு கி. சாமிநாதன், திரு ஜி. என். வேலுமணி நூற்றுக் கணக்கான வ.உ.சி. கல்லூரி மாணவத் தொண்டர்கள் விழா சிறப்புற நடைபெறத் தொண்டு புரிந்திருக்கிறார்கள்.

திரு சிவாஜி கணேசன் நடிக உலகமே புகழும் சிறந்த நடிகர். வயதில் இளைஞர். ஆனால் காரியத் திறமையில் முதிர்ந்தவர். தற்கால லௌகிக உலகத்தின் போக்கை நன்கு அறிந்தவர் என்று தெரிந்தது. சிவாஜி கணேசன் அவர்களைத் தமிழ்நாடு நன்கறியும். சில மணி நேரம்கூட ஓய்வு இல்லாமல் சினிமாப் படப்பிடிப்பில் ஈடுபட்டிருப்பவர். செல்வமும் செல்வாக்கும் படைத்தவர். செல்வமும் செல்வாக்கும் படைத்த பயனைத் திரு சிவாஜி கணேசன் இந்தப் பாரதி விழாவில் கண்டு கொண்டார். பொது ஊழியத்தில் ஈடுபடுவதால் ஏற்படும் இணையற்ற இன்பத்தையும் அறிந்து கொண்டார்.

மகாநாடு சம்பந்தமான எல்லா ஏற்பாடுகளையும் கவனித்துக்கொண்ட திரு ஏ. பி. நாகராஜன் அவர்களின் திறமையை எப்படிப் பாராட்டுவது என்றே தெரியவில்லை. விருந்தினர்கள் ஒவ்வொருவரையும் கவனித்துக் கொண்டார். போக்குவரத்து வசதிகளைப் பார்த்துக் கொண்டார். திரு ஏ. பி. நாகராஜன் பெயரைச் சொன்னதும் அங்குள்ள கலைஞர்கள் முகங்களும், மற்ற நிர்வாகிகள் தொழிலாளர்கள் முகங்களும் மலர்வதைக் கண்டேன். இவ்வளவு ஒற்றுமையும் பரஸ்பர நம்பிக்கையும் கலைஞர்களுக்குள் இருப்பதைப் பார்க்கும் போது கலை உலகத்தின் எதிர்காலத்தில் நல்ல நம்பிக்கை ஏற்பட்டது.

** ** **

"பாரதிநாமம் வாழ்க!" என்று ஔவை திரு டி. கே. ஷண்முகம் எழுப்பிய பெரு முழக்கத்தை விழாப் பந்தலில் கூடியிருந்த ஒரு லட்சம் மக்கள் சேர்ந்து முழங்க, பாரதியார் விழா இனிது நிறைவேறியது. பாட்டுக்கொரு புலவன் பாரதியின் விழாவை இவ்வளவு சிறப்பாகக் கொண்டாடியதன் மூலம் தமிழ் மொழி உயரும்; தமிழ் மக்கள் உயருவார்கள், தமிழ் நாடு உயர்ந்து விட்டது என்று சொன்னால் வெறும் புகழ்ச்சியாகாது.

# விக்ரமா



(தண்ணீர் வண்டிகள்)



(ட்ரெயிலர்கள்)

சாமான்களை ஏற்றிச் செல்லத் தகுந்த தள்ளு வண்டிகள், பார வண்டிகள்; தண்ணீர் வண்டிகள் முதலியன தயாரிக்கிறோம்

உங்கள் தேவைக்கு:

**விக்ரமா இன்ஜினீரிங் கம்பெனி**

பலகை வாராவதி சாலை

அடையார் - மதராஸ் - 20




பலவித ரகங்களிலும் கவர்ச்சியான தோற்றத்திலும் எங்கும் விற்கப்படும்

Sole Distributors:

**PENMEN'S INDUSTRIAL SERVICES**

Kandivli, Bombay (S. D.)







**இருமல் மற்றும் ஜலதோஷத் திற்கு நிவாரண மளிக்கிறது**

ஜண்டு

**ஜெப்ஸ்**

வில்லைகள்






ஜண்டு பார்மஸூடிகல் வொர்க்ஸ் லிட்.,

கோகலே ரோட் ஸௌத், பம்பாய்-28



# தலை மாணவி - சுசீலா

**செலவழிந்த சக்தியை அவளுக்கு திரும்பத்தந்து உதவும்**
**சமையல் சாதனம் காமதேனு வனஸ்பதி**

சுசீலா வகுப்பிலும், விளையாட்டிலும் எப்பொழுதும் முதல் வருபவள். தேக ஆரோக்கியம், புத்திசாலித்தனம் இரண்டும் உள்ளவள்; உற்சாகம், தெம்பு நிறைந்தவள்.

சுசீலாவின் இல்லத்தில் உபயோகிக்கப்படும் சமையல் சாதனம் காமதேனு வனஸ்பதி. கைபடாமல், சாஸ்திரீய முறையில் தயாரிக்கப்படும் காமதேனு வனஸ்பதி நெய்போன்றது. ஆனால் விலை குறைவானது. கண்பார்வைக்கு தேவையானதும், சரும உபாதைகளை போக்க வல்லதுமான வைடமின் 'A' கலக்கப்பட்டது.

36 பவுண்டு டின்களிலும் 10, 5, 2 பவுண்டு டின்களிலும் கிடைக்கும்

## காமதேனு - இல்லாள் கைகண்ட வனஸ்பதி




தயாரிப்பு:
மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை R. S. சேலம் ஜில்லா
மானேஜிங் ஏஜெண்ட்ஸ்:
சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

MC-527

# பொங்கிவரும் பெருநிலவு

கி.ராஜேந்திரன்

## இருபதாம் அத்தியாயம்

## சிந்தனை சுழன்றது!

மல்லிகாவுக்குப் பின்னாலேயே சுகுமாரனும் கதிர்வேலனும் படகிலிருந்து கரையில் இறங்கி நின்றார்கள்.

''அப்பா! சேகரை உங்களுக்குத்தெரியுமல்லவா?'' என்று கேட்டாள் மல்லிகா.

''காமிராமேன் சேகர்தானே? பார்த்திருக்கிறேன். ஆனால் அதிகமாகப் பரிச்சயம் இல்லை'' என்றார் சுகுமாரன்.

கதிர்வேலனைச் சேகருக்கு அறிமுகம் செய்து வைத்தார் சுகுமாரன். சேகருடைய கையைப் பற்றிக் குலுக்கினான் கதிர்வேலன். தேள் கொட்டியவனைப் போல் தன் கையைப் பின்னால் இழுத்துக்கொண்டு விரல்களை வலியினால் உதறினான் சேகர். இயற்கையிலேயே இப்படி முரட்டுத்தனமாக நடந்து கொள்கிறானா, அல்லது 'என்னிடம் வாலாட்டாதே, ஜாக்கிரதை! என்று எச்சரிக்கை செய்ய வேண்டுமென்றே அழுத்திப் பிடித்துக் குலுக்கினானா?' என்று யோசித்த சேகருக்கு அவனுடைய செய்கை புரியவில்லை.

அவன் தவித்ததைப் பார்த்துவிட்டு மற்ற மூவரும் சிரித்தார்கள்.

''நல்ல இரும்புப் பிடி, ஐயா! அடேயப்பா!'' என்று விரல்களைத் தடவிக் கொண்டே சொன்னான் சேகர்.

''சாதாரணமாகத்தானே பிடித்தேன். அழுத்திப் பிடிக்கவில்லையே?''

''சரியாய்ப் போச்சு! சாதாரணமாகக் கைகுலுக்கினாலே இந்தக் கதி என்றால் அழுத்திப் பிடித்தால் அவ்வளவுதான். உம்மிடம் கையை நீட்டுவதே ஆபத்துதான் போலிருக்கிறது.''

''எங்கே தங்கியிருக்கிறீர்கள்?'' என்று கேட்டார் சுகுமாரன்.

''நீங்கள் தங்கியிருக்கும் அதே ஹோட்டலில் தான். ரூம் நம்பர் பதினைந்து. நீங்கள் இருபத்தெட்டில் இருக்கிறீர்கள் போலிருக்கிறது. இல்லையா?''

''ஆமாம், அது உங்களுக்கு எப்படித் தெரிய வந்தது?''

''மத்தியானம் நன்றாகத் தூங்கி எழுந்த பிறகு டிபன் கொண்டு வரச் சொல்லலாம் என்று வெளியே வந்தேன். சற்றுத் தூரத்தில் நீங்களும் மல்லிகாவும் நடந்துபோய்க் கொண்டிருந்தீர்கள். இந்தப் பக்கம் இவர் கதவைப் பூட்டிக் கொண்டிருந்தார். கைதட்டிக் கூப்பிடலாமா என்று கூட நினைத்தேன். அப்புறம் நாகரிகமாக இருக்காது என்று இருந்து விட்டேன். சாவியைப் பையில் போட்டுக்கொண்டு அவசரம் அவசரமாக உங்களுடன் இவர் வந்து சேர்ந்து கொண்டார். சரி, மூவரும் இந்த நேரத்தில் ஏரிக் கரைப் பக்கமாகத்தான் போவீர்கள். அங்கு சந்திக்கலாம் என்று தீர்மானித்துக் கொண்டு வந்தேன்.''

''எப்போது ஊரிலிருந்து வந்தீர்கள்?'' என்று கேட்டாள் மல்லிகா.

''இன்று மத்தியானம்தான் வந்து சேர்ந்தேன். அதனால்தான் களைப்பு தீரச் சற்று நேரம் தூங்கினேன்.''

எல்லோரும் ஓட்டலை நோக்கி நடக்க ஆரம்பித்தார்கள்.

''இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? முன்பு இருந்த ஸ்டூடியோவில்தான் இன்னும் நீங்கள் வேலை பார்த்து வருகிறீர்களா?''

''இல்லை! அதற்கு ஒரு முழுக்குப் போட்டு விட்டு வந்துவிட்டேன்.''

''அடடா! ஏன் அப்படி?''

''அங்கே ஒன்றும் பிரயோசனமில்லை. ஸார்! கற்பனையே இல்லாத மனிதர்கள். புதிதாக ஒரு 'ஆங்கில்' அல்லது 'ஷாட்' எடுப்போம் என்றால் விடமாட்டார்கள். 'அப்ரிஸியேஷன்' கிடையவே கிடையாது. அங்கே முன்னுக்கு வந்து 'ஷைன்' பண்ண முடியாது, ஸார்!''

"அப்படியானால் இனிமேல் என்ன செய்வதாக உத்தேசித்திருக்கிறீர்கள்?"

"சொந்தமாகப் படம் எடுக்கலாம் என்று தீர்மானித்திருக்கிறேன். நல்ல கதையாக 'ஸெலக்ட்' பண்ணி என் திறமையையெல்லாம் காட்டப் போகிறேன், பாருங்கள்! போட்டோகிராபியைப் பார்த்து அப்படியே 'ஸ்டன்' ஆகப் போகிறார்கள்."

"வெளுத்து வாங்குங்கள்!"

"ரொம்ப நாட்களாக எனக்கு ஒரு ஆசை. நான் சொந்தமாக எடுக்கும் முதல் படத்தில் மல்லிகா கதாநாயகியாக நடிக்க வேண்டும் என்று."



நடந்துகொண்டே இருந்த சுகுமாரன் சட்டென்று நின்றார். சேகர் பக்கமாகத் திரும்பி, "மிஸ்டர், சேகர்! அதுமட்டும் நடக்காத காரியம். இப்போதே கூறி விடுகிறேன். அனாவசியமாக எதையாவது நினைத்துக் கொண்டு அப்புறம் ஏமாற்றம் அடையாதீர்கள்" என்றார் கடுமையாக.

"ஏன் ஸார் அப்படிச் சொல்கிறீர்கள்? அவள் புகழ் கொஞ்சங் கூடக் குறையாது ஸார்! கலர் போட்டோகிராபி கூடக் கையாளலாம் என்று நினைத்துக்கொண்டிருக்கிறேன்."

"இல்லை, மிஸ்டர் சேகர்! மல்லிகா நான் எடுக்கும் படத்தைத் தவிர வேறு எந்தப் படத்திலுமே நடிக்க மாட்டாள்."

"அதை அவளே சொல்லி விட்டால் சரிதான். ஒப்புக் கொள்கிறேன்."

"அவளுடைய சார்பாகத் தான் நான் இப்பொழுது பேசுகிறேன்."

"அவளுக்காகத்தான் நீங்கள் பேசுகிறீர்கள் என்பதையாவது தெளிவாக அவளே சொல்லட்டும்."

"அப்பா! நான் ஊமையில்லையே? எனக்குப் பேசத் தெரியும்" என்றாள் மல்லிகா உறுதியான குரலில்.

சுகுமாரனுடைய முகம் அஷ்டகோணலாகச் சுருங்கிக் கறுத்தது. அசாதாரணமான ஒரு மௌனம் நிலவியது.

சற்றுத் தூரம் சென்றபிறகு உதக மண்டலம் புகை வண்டி நிலையத்தைப் பார்க்க முடிந்தது. பெரிய பெயர்ப் பலகையில் கொட்டை எழுத்துக்களில் 'ஒத்தகமந்து' என்று தமிழில் எழுதப்பட்டிருந்தது. உதக மண்டலம் என்ற அழகான பெயர் இருக்கிறது. உதகம் என்றால் மழை. உதகாரம் என்றால் மேகம். மேகங்கள் சூழ்ந்து நல்ல மழை பெய்யக் கூடிய நாடு என்று பொருள்பட உதக மண்டலம் என்று பெயர் இட்டார்கள். அது ஆங்கிலத்தில் 'ஊட்டகமண்ட்'



ஆயிற்று. 'ஊட்டி' என்ற செல்லப் பெயரும் கொடுத்தார்கள். ஊட்டகமண்ட் என்பதை அப்படியே தமிழ்ப்படுத்தி 'ஒத்தகமந்து' என்று பெயர்ப் பலகையில் பெரிய எழுத்துக்களில் எழுதி யிருந்தார்கள்.

இதையெல்லாம் யாரும் கவனித்ததாகவோ, அதுபற்றிச் சிந்தித்ததாகவோ தெரியவில்லை. ஓட்டலை அடையும் வரை ஒருவரும் ஒன்றும் பேசவில்லை.

ஓட்டலை அடைந்த பிறகு, "நான் போய் வருகிறேன். பிறகு சந்திப்போம்" என்று சொல்லிப்போய்விட்டான் சேகர்.

"ஏதோ எதேச்சையாக நம்மைச் சந்தித்தது போலப் பேசுகிறான். ஆனால் எனக்கு நம்பிக்கையில்லை. முன் கூட்டியே திட்டம் போட்டுக் கொண்டு இங்கு வந்ததாகத்தான் நினைக்கவேண்டியிருக்கிறது" என்றார் சுகுமாரன்.

மல்லிகா பதில் சொல்லாமல் பொருள் பொதிந்த ஒரு புன்னகை புரிந்தாள்.

* * *

இரவில் ஜகஜ்ஜோதியாகக் காட்சி தந்தது உதக மண்டலம். மலைச் சரிவிலே அமைந்திருந்த வீடுகளிலும், தெருக்களிலும் பிரகாசித்த விளக்குகளை நல்ல உயரத்தில் கட்டியிருந்த ஹோட்டல் அறையிலிருந்து அவர்கள் பார்த்த போது நகர்முழுவதும் ஏராளமான கார்த்திகை தீபங்கள் ஏற்றப்பட்டுச் சுடர் விட்டதாகத் தோன்றியது.

இருட்ட ஆரம்பித்ததுமே, ஒரே அமைதி குடிகொண்டு விட்டது. நகரில் நடமாட்டம் குறைந்து விட்டது. அந்தக் குளிரில் யாரும் அதிகமாக வெளியே செல்ல விரும்பவில்லைபோலும். தலையை வெளியே நீட்டினால் 'கட கட' வென்று பற்கள் தாளம் போடும் குளிர்.

அந்தக் குளிரையும் பொருட்படுத்தாமல் சுகுமாரனும் கதிர்வேலனும் உலாவிக் கொண்டே பேசினார்கள். "மல்லிகாவின் காதில் விழ வேண்டாம் என்று வெளியே அழைத்து வந்தேன், கதிர்வேலு! இங்கு வந்ததிலிருந்தே கேட்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன். போலீஸார் நடமாட்டம் அதிகமாயிருப்பதால் ஜாகைக்கு வந்து உன்னை அழைத்துப் போகும்படி நிர்மலா சொன்னாளே, என்ன நடந்தது?"

"அது பெரிய கதை, மாமா! குளிரில் உடல் நடுங்குகிறது. உள்ளேயே சத்தமில்லாமல் மெதுவாகப் பேசலாமே!"

"அவள் தூங்கி விட்டாளா, பார்க்கிறேன்" என்றார் சுகுமாரன்.

விலை உயர்ந்த கம்பளிகளை இழுத்துப் போர்த்திப் படுத்திருந்தாள் மல்லிகா. குளிருக்குச் சுகமாகத்தான் இருந்தது.

ஆனால் தூக்கம் வரவில்லை. சேகரைச் சந்தித்தது நரம்புகளைத் தட்டி எழுப்பிப் பழைய இன்ப நினைவுகளைக் கண் எதிரே கொண்டு வந்து நிறுத்தியது. அவள் புரண்டு கொடுத்தாள்.

சுகுமாரன் வெளியே வந்தார். ''அவள் தூங்கவில்லை, கதிர்வேலு! இங்கேயே சொல்லு'' என்றார்.

''எப்படியோ நடராஜனைச் சந்தேகித்திருக்கிறார்கள், மாமா! எப்படி என்று தான் தெரியவில்லை. நர்ஸ் நிர்மலாவைப் பார்த்து விட்டு வெளியே வந்தேன். 'திபுதிபு' என்று போலீஸார் ஓடி வந்தார்கள். நான் அவர்களைக் கவனிக்கத் தவறியது போலவே அவர்களும் என்னை இருட்டில் பார்க்கவில்லையோ என்னவோ? அல்லது வெளியே வரட்டும், உள்ளே போய்க் கலாட்டா செய்ய வேண்டாம் என்று காத்திருந்தார்களோ தெரியாது. ஆனால் நான் நர்ஸிங் ஹோமுக்கு வருவேன் என்று அவர்கள் எப்படி ஊகித்தார்கள் என்பது புதிராகத்தான் இருக்கிறது!''

''புதிர் ஒன்றும் இல்லையே, கதிர்வேலு! அந்த மடையன் நடராஜன் மல்லிகா வீட்டில் உன்னைப் போலீஸார் தேடிய போது உன்னைப் பார்த்ததாக உளறி வைத்தான். அப்புறம் தயங்கி மூடி மழுப்பினான். அவனுக்கு ஏதாவது தெரிந்திருக்கும் என்று அங்கே 'டியூடி' போட்டிருப்பார்கள்.''

''எப்படியோ தலை தப்பியது தம்பிரான் புண்ணியமாகப் போயிற்று. நேரமாகிறது. தூக்கம் சுழற்றிக் கொண்டு வருகிறது, மாமா!'' என்று கூறி விட்டு அறைக்குள் நுழைந்தான் கதிர்வேலன்.

சிறிது நேரத்தில் இருவரும் குறட்டை விட்டார்கள். ஆனால் இத்தனை நாட்களாக நிம்மதியாகத் தூங்கிய மல்லிகாவுக்கு இன்று தூக்கமே வரவில்லை. படத்தில் நடிக்க வேண்டும் என்று கேட்கமட்டும் சேகர் வரவில்லை என்று அவள் உள்ளுணர்வு கூறியது. நாளைக்கு எப்படியாவது அவரைத் தனியாகச் சந்தித்து விவரமாகப் பேச வேண்டும்.

மறுநாள் காலையிலேயே உதக மண்டலத்தில் உள்ள நந்தவனத்தைப் பார்க்கக் கிளம்பினார்கள். பரந்த புல் தரையும் விதம் விதமான செடி, கொடி, மரங்களும் நிறைந்து குளுமையாக விளங்கியது அந்தப் பூம்பொழில்.

இளம் காதலர்கள் இருவர் ஒரு ஆசனத்தில் உட்கார்ந்து சுவாரஸ்யமாக ஏதேதோ பேசிச் சிரித்தார்கள். ஒரு சிறிய செயற்கைக் குட்டையில் சுற்றிச் சுற்றி வந்த இரு வாத்துகளுக்கு உணவளித்தாள் ஒரு சிறுமி.

இந்த மனங்கவர்க் காட்சிகளையெல்லாம் பார்த்த மல்லிகாவின் கண்கள் திருப்தியடையாமல் தோட்டத்தைச் சுற்றிச் சுற்றி வந்து சேகரைத் தேடின. அவள் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. சற்றுத் தூரத்தில் அவன் ஒரு மலரைப் பறித்து முகர்ந்து கொண்டிருந்தான். அவனைப் பார்த்தும் பார்க்காதது போல் இருந்தாள் மல்லிகா.

மலர்த் தொட்டிகளை அடுக்கி வைத்திருந்த கண்ணாடி வீட்டுக்குள் சென்றார்கள். ஒவ்வொரு செடியாக நிதானமாகப் பார்த்து ரசித்தாள் மல்லிகா. சுகுமாரனும் கதிர்வேலனும் மற்றொரு பக்கத்தில் இருந்த கதவு வழியாகச் சென்று விட்டார்கள். சேகர் கண்ணாடி மாளிகைக்குள் நுழைந்தான். அவனுக்காகவே காத்து நின்ற மல்லிகா புன்னகையுடன் அவனை வரவேற்றாள்.

''நேற்று அப்பா உங்களைக் கொஞ்சம் அலட்சியப் படுத்திப் பேசி விட்டார். கோபப்படாதீர்கள்'' என்றாள்.

''நீதான் அவருடைய மூக்கை அறுத்து விட்டாயே?'' என்றான் சேகர்.

''நர்ஸிங்ஹோமில் கூட என்னைக் காண வந்தீர்களாம்.''

''ஆமாம், மல்லிகா! உடம்பு சரியில்லை என்றுகேள்விப்பட்டேன். உடனே உன்னைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் மிகுதியால் வந்தேன். உள்ளேயே விட மறுத்து விட்டார்கள்.''

''இங்கு நான் வந்திருக்கிறேன் என்று எப்படித் தெரிந்தது?''

''இலங்கை போயிருப்பதாகப் பத்திரிகைகளில் பார்த்தேன். அப்புறம் இரண்டு மூன்று தடவைகள் வீட்டுக்குப் போனேன். பூட்டியிருந்தது. ஒருவேளை டாக்டர் நடராஜனுக்குத் தெரிந்திருக்கலாம் என்று அங்கு போய்க் கேட்டேன். அவர் ஓய்வுக்காக நீங்கள் எல்லோரும் இங்கு வந்திருப்பதாகச் சொன்னார். உடனே இங்கு வந்தேன்.''

''என்னைப் பார்க்க இவ்வளவு சிரமம் எடுத்துக் கொள்வானேன்?''

''உன்னால் ஒரு காரியம் ஆக வேண்டியிருக்கிறது, மல்லிகா! ரொம்ப ரொம்ப முக்கியமான விஷயம். நீண்ட நாட்களாக அதற்காகத்தான் தனிமையில் உன்னைப் பார்க்கத் துடித்துக் கொண்டிருக்கிறேன். முடியவில்லை. இப்போது சொல்லத் தயக்கமாக இருக்கிறது!''

''தயக்கமே வேண்டாம். தாராளமாகச் சொல்லுங்கள்.''

''எனக்குக் கொஞ்சம் பணம் தேவை.''

மல்லிகாவுக்கு ஒரே ஏமாற்றம். ''இவ்வளவுதானா? பணம் மட்டும்தானா வேண்டும்?'' என்று கேட்டாள் அவள்.

சேகரின் சிந்தனை சுழன்றது.

## இருபத்தோராம் அத்தியாயம்

# "அவனைக் கொன்றுவிடு!"

கேமிராமேனாக இருந்த சேகர் படாதிபதியாக மாற விரும்பினான். படாதிபதியாவதற்குப் பணம் தேவைப்பட்டது. பணம் திரட்ட நினைத்துக் குதிரைகளின் ஓட்டத்திலே கவனம் செலுத்தினான். பரிகள் பாய்ந்து ஓடிய போது கொஞ்சம் நஞ்சம் பாக்கி இருந்த செல்வமும் பறி போயிற்று.

கடன்கள் மலையாகக் குவிந்தன. மலைத்து நின்ற அவனுக்கு ஒரே ஒரு வழி தான் புலப்பட்டது.

கிராமத்துப் பெண் மல்லிகா இப்போது பெரிய சினிமா நட்சத்திரமாக விளங்கினாள். செல்வம் அவளிடம் கொழித்தது. 'அதில் பங்கு கேட்டால் என்ன?' என்று யோசித்தான். நியாயமாகப் பார்த்தால் அவள் இவ்வளவு தூரம் முன்னுக்கு வர அவன்தானே ஆதி காரணமாயிருந் திருக்கிறான்?

அவளுடைய பூர்வாசிரமங்கள் அவனுக்குத் தெரிந்திருந்தன. அவள் தகப்பன் கண்ணப்பன் பெரியண்ணனுடன் சேர்ந்து எடுத்துக் கொண்ட புகைப்படம் அவனிடம் இருந்தது. இருவருமே காணாமல் இருந்தார்கள். இப்போது தகப்பன் என்று சொல்லிக் கொண்ட ஒருவன் அகப்பட்டு விட்டான். மற்றொருவனைக் காணோம். போலீஸாரின் முற்றுப் பெறாத வழக்குகளில் ஒன்றாக இன்னும் அந்தச் சம்பவம் இருந்து வந்தது.

மல்லிகாவை அவள் கிராமத்தில் தவிக்க விட்டு வந்த பிறகு அவள் தன் காதலனாகிய தனக்கு எழுதிய ஏராளமான கடிதங்கள் இருந்தன. கிராமத்தில் அவள் அடைந்த அவதூறுகளுக்கு அவை சாட்சியம் கூறின.

இதையெல்லாம் வெளியிட்டால், அவளுடைய ரசிகப் பெருமக்கள் உணரச் செய்தால், புகழ் ஏணியின் உச்சியில் இருக்கும் மல்லிகா அந்த ஏணியே சறுக்கு மரமாக மாறித் தன்னைக் கீழே கீழே தள்ளுவதை உணர்வாள். அப்படி வெளியிடாமல் இருக்க நிச்சயம் தனக்குப் பணம் கொடுப்பாள்!

பல நாட்கள் சிந்தித்த பிறகு இப்படி முடிவு செய்தான் சேகர். அவளைச் சந்திக்க முயன்றான். நர்ஸிங்ஹோமில் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளப்பட்ட சில நாட்களுக்குப் பிறகு அவள் வீட்டையே முற்றுகையிட்டான். அதிலும் ஏமாற்றம் அடைந்து நடராஜன் மூலமாக அவள் ஊட்டியில் இருப்பதைக் கேட்டு அறிந்து வந்தான்.

வந்த பிறகு அவனுக்கு ஒரே திகைப்பு! 'பணம் மட்டும்தானா வேண்டும்?' என்று மல்லிகா கேட்டாள். அதில் மறைந்து கிடந்த பொருள் ஏராளமாக இருக்கலாம். அல்லது வார்த்தைகளில் மேலெழுந்தவாரியாகத் தோன்றிய கருத்தை உள்ளமும் பேசியிருக்கலாம்.

அவன் கணக்கு தீர்ப்பது போல் பாவனை செய்ய வந்தான்; அவள் காதல்மொழி பேச விரும்பினாள்!

பல நாட்களுக்கு முன்னால் தான் அவள் உள்ளத்தில் ஏற்றி வைத்த தீபச்சுடர் ஒளி குன்றி வந்ததே அன்றி முழுதும் அணைந்து போய் இருட்டடிப்பு செய்யவில்லையா? தான் வந்தது எண்ணெய் ஊற்றித் திரியைத் தூண்டி விட்டது போல் ஆகிவிட்டதா?

அதற்குப் பிறகு அவனால் திட்டமிட்டபடி நடக்க முடியவில்லை. தன்னையே கொடுத்துவிடத் தயாராக இருந்தவளிடம் பணத்தை மட்டும் எப்படிப் பிரித்துப் பேசுவது? அவளை அடைவதின் மூலம் செல்வத்தையும் அடையலாம். அதற்கும் எத்தனையோ தடங்கல்கள்.

சூழ்ச்சி புரியும் சிந்தனைக் குதிரையைத் தட்டி விட்டான் சேகர். சில விநாடிகளிலேயே அவனுக்கு ஒரு வழி புலப்பட்டுவிட்டது. 'அடடா! இத்தனை நாட்களாக இது தோன்றாமல் போய் விட்டதே! பணத்துக்குப் பணம்; காதலுக்குக் காதல்! சுகுமாரனிடம் தனிமையில் போய் அவருடைய பழைய பெயரைச் சொல்லி ஒரே ஒரு தடவை அழைத்து விட்டால் போதாதா?'

* * *

டைரக்டர் சுகுமாரன் சோர்ந்து போய் உட்கார்ந்திருந்தார். விடுமுறையாக எண்ணி ஒரு மாதகாலம் நிம்மதியாக இருக்க விரும்பி உதகமண்டலத்துக்கு வந்த அவர் நிம்மதி இழந்து சங்கடப்பட்டார். 'நான் ஊமையில்லையே? எனக்குப் பேசத் தெரியும்!' என்று மல்லிகா சொன்னதும் கண்ணாடி வீட்டில் தயங்கி நின்று சேகருடன் அவள் தனிமையில் பேசியதும் அதற்குப் பின்னர் சேகர் வந்து மிரட்டியதும் அவரைத் துயரத்தில் ஆழ்த்தின.

அலங்கரித்துக் கொண்டு புறப்பட்ட மல்லிகா, "ஏரிப் பக்கம் போவோமா?" என்று கேட்டாள்.

"போகலாம். அதற்கு முன்னால் உன்னிடம் சில விஷயங்கள் பேசவேண்டும். இப்படி உட்கார்" என்றார் சுகுமாரன்.

"நீங்கள் என்ன சொல்லப் போகிறீர்கள் என்று எனக்குத் தெரியும். சேகருக்கு எதிரே உங்களை மட்டம் தட்டுவது போல் பேசியது தவறுதான். என்னை மன்னித்து விடுங்கள்."

"மல்லிகா! என்னை மட்டம் தட்டியதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. உன்னை நினைத்துத்தான் என் கவலையெல்லாம். கதிர்வேலன் இருக்கும்போதே உன்னிடம் சில விஷயங்களை இன்று சொல்லி விடுகிறேன். சொல்ல வேண்டாம், உனக்குத் தெரியக்கூடாது என்று நினைத்திருந்தவற்றைக் கூறி விடுகிறேன். சொல்ல வேண்டிய தருணம் வந்து விட்டது. இனி மூடி மறைக்க முடியாத நிலை உண்டாகிவிட்டது. சேகருடைய குணம் உனக்குத் தெரியாதது அல்ல. தெரிந்தும் அவனுடன் நீ தனிமையில் கண்ணாடி வீட்டில் பேசிக் கொண்டிருந்தாய். என்ன பேசினீர்கள் என்று எனக்குத் தெரியாது. ஆனால் நீ முன்பு கொண்ட காதல் இன்னும் அடியோடு மறையவில்லை என்று உணருகிறேன். அது உண்மைதானே?"

மல்லிகா வெட்க மிகுதியால் மௌனமாகத் தலைகுனிந்தாள்.

"நீ பதில் பேசமாட்டாய், மல்லிகா! ஆனால் அதை நான் ஊகித்து விட்டேன். அதனாலேயே என்னுடைய மனத்தைத் திறந்து காட்ட வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டு விட்டது.

"மல்லிகா! உலகம் என்னைப் பெரிய மனிதனாக நினைக்கிறது. நீயும் அப்படித்தான் இத்தனை நாட்களாக எண்ணி வந்திருப்பாய். ஆனால் நீ ஒரு பெரிய அதிர்ச்சிக்குத் தயாராக வேண்டும், மல்லிகா! எந்தத் தகப்பனும் தன் மக்களிடம் சொல்லக் கூசும் வார்த்தைகளைச் சொல்லப் போகிறேன்..." சுகுமாரன் சற்றுத் தயங்கினார். அவர் கண்களை மறைத்த நீர்ப் படலத்தை ஒரு விரலால் அழுத்தித் துடைத்து அப்புறப் படுத்தினார். அந்தச் செய்கையிலே அவருடைய மன உறுதி பிரதிபலித்தது.

"அப்பா! நீங்கள் ஒன்றுமே சொல்ல வேண்டாம். எனக்குத் தெரிந்து என்ன ஆக வேண்டும்? இப்போது இருப்பது போலவே தொடர்ந்து இருப்போம். உங்கள் ரகசியங்கள் உங்களுடனேயே இருக்கட்டும். நீங்கள் சொல்கிறபடியெல்லாம் கேட்கிறேன். சேகரை மறந்து விடச் சொன்னால் மறந்து விடுகிறேன். அவருடன் பேச வேண்டாம் என்று சொன்னால் பேசாமல் இருந்து விடுகிறேன். எதற்கு உங்களை நீங்களே சித்திரவதை செய்து கொள்கிறீர்கள்? வேண்டாம், அப்பா! சொல்ல வேண்டாம்!"

"சரியான வார்த்தைகளை உபயோகித்தாய், மல்லிகா! என்னை நானே சித்திரவதை செய்து கொள்கிறேன் என்பது உண்மைதான். இத்தனை நாட்களாக நான் புரிந்து வந்த குற்றங்களுக்குத் தண்டனையை அனுபவிக்கிறேன். தனது மகளிடம் தான் புரிந்த குற்றங்களை வாய் விட்டுச் சொல்வதை விட ஒருவனுக்கு வேறு என்ன தண்டனை வேண்டும்? இதோ சொல்லி விடுகிறேன், மல்லிகா! நான் குடிகாரன், நான் கொள்ளைக்காரன், நான் ஒரு கொலைகாரப் பாவி! கொலை புரிந்ததோடு மட்டும் அல்லாமல் விவரமறியாத இரு பச்சைக் குழந்தைகளையும் அவற்றின் தாயாரையும் தவிக்க விட்டு வந்து விட்டேன். அவர்களைப் போய்ப் பார்த்தால் போலீஸாரிடம் மாட்டிக் கொள்வேனோ என்று பயம்! குழந்தாய்! என்னை மன்னிப்பாயா? வேண்டாம், நீ மன்னிக்க வேண்டாம். மன்னிப்பை



நான் எதிர்பார்த்தால் மறுபடியும் மிகப் பெரிய குற்றத்தைச் செய்தவனாவேன். என்னை மன்னிப்பதாகச் சொல்லி விடாதே!" என்றார் சுகுமாரன்.

கதிர்வேலன் மெல்ல அவருடைய தோளில் தட்டிக்கொடுத்தான். "மாமா! உணர்ச்சி மிகுதியில் ஏதேதோ பேசுகிறீர்கள். போதும். கொஞ்சம் நிதானியுங்கள்" என்றான்.

"ஏதேதோ பேசவில்லையே, கதிர்வேலு? உண்மைகளைச் சொல்கிறேன், அவ்வளவுதான். நான் சொல்லாவிட்டால் அந்தச் சேகர் அவளிடம் சொல்லப்போகிறான். அவன் வாயால் கேட்பதை விட என்னிடமிருந்தே இவள் கேட்டு விடட்டும். அம்மா! சேகர் சொல்லமுடியாத சில விஷயங்களையும் நான் சொல்கிறேன். கேள்!"

"அப்பா! சேகர் என்னிடம் ஒன்றுமே சொல்லவில்லை. சொல்லவும் போவதில்லை. நீங்களாக ஏதோ நினைத்துக் கொள்கிறீர்கள்."

"அவன் சொல்லாவிட்டால் பரவாயில்லை. நான் சொல்லியே ஆகவேண்டும். இத்தனை நாட்களாக நான் செய்து வந்துள்ள தீய செயல்களுக்கெல்லாம்

மேலாக மிகப் பெரிய குற்றத்தைச் செய்யப் போகிறேன். இரண்டு உள்ளங்களைச் சுற்றி வந்து பிணைத்துள்ள காதல் கொடியை வேரோடு பிடுங்கி நெருப்பில் போட்டுத் தகிக்கப் போகிறேன். ஈவிரக்கமற்ற கொடிய அரக்கனாக நான் மாறப் போகிறேன்.

"மல்லிகா! செண்பக புரத்திலே திடீரென்று ஒரு நாள் உன் தகப்பன் மனைவியிடம் சண்டை போட்டுக் கொண்டு சென்ற பிறகு குதூகலம் என்றால் என்ன வென்பதையே அறியாமல் நீ இருந்தாய். ஏழு வருஷங்களுக்குப் பிறகு சேகரைச் சந்தித்து அளவளாவிய போதுதான் உன் வாயிலிருந்து சிரிப்பு வந்தது என்று என்னிடம் நீ சொல்லியிருக்கிறாய். அதன் பலனைச் சேகரிடம் நீ கொண்ட தூய்மையான காதலையும் நான் அறிவேன். அவன் உன்னைஏமாற்றி விட்டான் என்பதை உணர்ந்தபோது உனக்குத் துயரமும் கோபமும் உண்டாயிற்று என்பதும் எனக்குத் தெரியும். ஆனால் நீ கொண்டிருந்த காதலை அசைக்க முடியவில்லை என்பதை இப்போது உணர்கிறேன்.



"அசைக்க முடியாத அந்தக் காதல் மாளிகையை இப்போது வெடி வைத்துத் தகர்த்து எறியப் போகிறேன், மல்லிகா! அதற்கு என்னைப் பற்றியே நான் சொல்லிக் கொண்டுதான் ஆக வேண்டும். கேள்!

"கொலைக் குற்றத்தைப் புரிந்து விட்டுச் சென்னைக்கு வந்தேன். ஒரு ஸ்டுடியோவில் வேலை பார்த்தேன். நான் செய்த வேலைகள் கீழ்த்தரமாகப் பட்டன. பெரிய பணக்காரனாகிச் சொந்த வீட்டில் வசிக்க வேண்டும், காரில் சவாரி செய்யவேண்டும் என்று விரும்பினேன்.

"குதிரைப் பந்தயம் அதற்கு ஒரு குறுக்கு வழி என்று நினைத்தேன். அதிர்ஷ்டம் என் பக்கம் இருந்தது. கொஞ்சம் பணமும் சேர்ந்தது.

"அத்துடன் கள்ளக்கடத்தல் வியாபாரத்திலும் ஈடுபட்டேன். திருட்டுத்தனமாகக் காரைக்கால், பாண்டிச்சேரி முதலிய இடங்களிலிருந்து பல பொருள்களைக் கொண்டு வந்து கொள்ளை லாபத்துக்கு விற்று வந்தேன்.

"இந்தச் சமயத்தில்தான் ஒரு நாள் பஸ்ஸில் ஏறும்போது கதிர்வேலன் என் சட்டைப் பைக்குள் கையை விட்டான். திருடனிடமே திருட்டுத்தனம் செய்ய முயன்ற திருட்டுப் பயல்! அவனைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டேன். அவன் திமிறினான். பதினெட்டு வயதுச் சிறுவன். இப்போதிருக்கும் வலிமை அப்பொழுதும் இருந்தது. நாலைந்து பேர்கள் அவனைக் கட்டிப் பிடிக்க உதவினார்கள். போலீஸ் ஸ்டேஷனுக்கு இழுத்துச் சென்றேன் அவனை. ஸ்டேஷனை நெருங்க நெருங்க என் மனம் மாறி விட்டது. 'சிறிய திருடனை; பெரிய திருடன் காட்டிக் கொடுப்பதா? தொழில் முறைக்கே விரோதமாயிற்றே!' என்று எண்ணி 'என் பர்ஸை வீட்டிலேயே வைத்துவிட்டேன். இப்போதுதான் ஞாபகம் வருகிறது. இது என் பர்ஸ் அல்ல. இவன் குற்றமற்றவன்' என்றேன். சுற்றி யிருந்தவர்கள் என்னைப் பைத்தியம் என்றார்கள். நன்றியுடன் என்னைப் பார்த்த கதிர்வேலனுக்கு என் தொழிலைக் கற்றுக் கொடுத்து இயக்க விட்டு நான் பின்னணியில் இருந்தேன்.

"பணம் சேரச் சேரப் பெரிய மனிதனாகி விட்டேன். நான் வேலை பார்த்து வந்த ஸ்டுடியோவை விலைக்கு வாங்கிப் படாதிபதியாகவும் மாறி விட்டேன்.

"என்னுடைய வாழ்க்கையின் பின் பகுதி சேகருக்குத் தெரியாது, மல்லிகா. ஆனால் எனக்குத் தண்டனை கிடைக்குமளவுக்கு அவனுக்குச் செண்பக புரத்தில் நடந்த விஷயங்கள் தெரியும். அது வெளிப்பட்டு விட்டால் மற்ற விஷயங்களும் தானாகவேவெளியே வந்து விடும். கதிர்வேலனும் மாட்டிக் கொள்வான். அப்புறம் உன்கதி என்ன ஆவது?

"இதையெல்லாம் யோசித்துப் பார்த்துச் சேகர் சூழ்ச்சி புரிந்தான். உன்னிடம் பணம் கேட்டான். நீ காதலை வெளிப்படுத்தினாய். அங்கே அவன் ஜம்பம் சாயவில்லை. என்னிடம் வந்தான், பணம் கேட்டு. கொடுத்து அனுப்பினேன். இதோடு விஷயம் முடிந்துவிட வில்லை, மல்லிகா! இன்னும் கொஞ்சம் நாட்கள் கழித்து மீண்டும் வருவான். மேலும் பணம் கேட்பான். அவன் வற்றாத பண ஊற்றைக் கண்டு பிடித்துவிட்டான், மல்லிகா! எத்தனை நாட்களுக்கு அவனைச் சமாளிக்க முடியும்?

"இத்தகைய அயோக்கியனை நீ எப்படிக் காதலிக்க முடியும்? ஈடேறாத காதல் அது, மல்லிகா! அவனை மறந்துவிடு. கதிர்வேலு! அவனை எப்படியாவது கொன்று விடு!" என்றார். **(தொடரும்)**

# உயிர் விளையாட்டு



க. பஞ்சாபகேசன்

"அப்பா! எனக்குச் சொப்பு வாங்கிக் கொடுக்க மாட்டியா?" என்று ஆவலுடன் கேட்டது குழந்தை.

"வாங்கித் தரேனடி, கண்ணே!" என்றான் தியாகு. குழந்தையின் சுருளான கேசத்தை மெதுவாக வருடி விட்டுக் கொண்டே.

"தலையைத் தடவாதே, அப்பா! புது ரிப்பன் அவிழ்ந்து போய்விடும். சொப்பு எப்போ வாங்கித் தருவே?" மூன்றரை வயதுதான் ஆகியிருந்தாலும் குழந்தை பத்மா, தியாகுவை என்னவெல்லாம் கேள்வி கேட்டாள்.

"சம்பளம் வந்ததும் உனக்கு வாங்கித் தருகிறேன்."

"சம்பளம் எப்போ வரும்?"

"இன்னும் பத்து நாட்களில், ஒண்ணாந் தேதி வந்துவிடும், பத்மா! அன்றைக்குச் சாயங்காலம் உனக்குச் செப்பு வாங்கித் தருகிறேன் நிஜமாய்! என் கண்ணோல்லியோ? இப்போ நீ தூங்குவியாம்! நான் பாடுவேனாம்!" — தியாகு குழைந்தான்!

குழந்தைக்குப் படுக்கை முள்ளாகக் குத்தியது.

"பாட்டு வேணும், அப்பா! சொப்புத் தான் எனக்கு வேணும்!"

"அதுதான் சம்பளம் வந்ததும் வாங்கித் தருகிறேன்னு சொன்னேனே!"

"பத்து நாட்களாகுமே. எனக்கு நாளையே வேண்டும்!"

"நீ தூங்க மாட்டாயா, பத்மா?" என்று சற்றுக் கண்டிப்பான குரலில் கேட்டான் தியாகு.

"வாங்கித் தரேன்னு சொல்லு! தூங்குகிறேன்!" பத்மா தன் சிறிய பட்டுவிரலால் தகப்பனின் கன்னத்தைத் தடவிக்கொண்டே தன் குஞ்சு அழகுக் கண்களை ஆர்வத்தோடு அவன்புறம் திருப்பினாள். மெல்லிய ஹரிக்கேன் விளக்கொளியில் குழந்தையின் அந்தக் கண்களைச் சந்தித்த தியாகுவுக்கு மெய் சிலிர்த்தது.

வாங்கித் தருவதாகச் சொன்னால் போதும், பத்மா தூங்கி விடுவாள்!

"நாளைக்கு வாங்கித் தரேன்."

"நிச்சயமாக?"

"நிச்சயமாக!"

"மலைக்கோட்டைக்குப்போய்வாங்கித் தருவாயா?"-அதாவது மலைக்கோட்டைக் கடைத் தெருவில்தான், குழந்தையின் இஷ்டக் கனவுக்குரிய செப்புகள் இருக்கின்றனவாம். அடுத்த வீட்டிலுள்ள பத்மாவின் சின்னத் தோழிக்குக்கூட அவர்கள் மலைக்கோட்டையிலிருந்து தானே செப்புகள் வாங்கி வந்தார்கள்.

"மலைக்கோட்டைக்குப் போய் வாங்கித் தரேன். தூங்கு."

இரண்டுநிமிஷங்கள் குழந்தை கண்ணை மூடிக்கொண்டிருந்துவிட்டு, மறுபடியும் இமைகளைப் 'படபட'வென்று அடித்துக் கொண்டு கண்களைத் திறந்தது.

"அப்பா..."

"என்ன பத்மா, நீ தூங்கவில்லையா?"

"அப்பா! அடுத்த வீட்டு வசந்திக்கு வாங்கியிருக்கா பாரு, அதேமாதிரிதான் எனக்கும் வேண்டும். பாருப்பா, ஒரு அடுப்புச் சொப்பை நான் சும்மா தொட்டுப் பார்த்தேன். அதற்கு அந்த மாமி தொடாதே, உடைந்து போகுமென்று சொன்னா. நான் தொட்டால் உடைஞ்சு விடும், வசந்தி தொட்டால் உடைஞ்சு விடாதா அப்பா?"

"அதெல்லாம் வெறும் மரச் சொப்புத் தான், பத்மா! தொட்டால் அது உடைஞ்சு விடாது!"

பத்தணா கொடுத்தால், சிறிய ஓலைப் பெட்டியில், பத்துப் பதினறு வர்ண மரச் செப்புகளுக்குமேல் கடைக்காரன் தருகிறான். அடுப்பு, பானை, உரல், உறி, அண்டா, இயந்திரம் என்று சிறு சிறு பொம்மைகள் பத்தணாந்தான். அதை வாங்கித் தரக் குழந்தைக்கு முதல் தேதி வரட்டும் என்று சொல்கிறோமே என்று தியாகுவுக்கு ஆதங்கமாக இருந்தது.

பொருளாதாரச் சிக்கல் யாருக்கும் உண்டு. அதேபோல் குழந்தை அன்பு இல்லாதவரும்யார் தான் இருக்கிறார்கள்? தியாகுவுக்குப் பத்மா சீமந்த புத்திரி; அதோடு பிறகு அவன் மனைவி படுத்த படுக்கையானவள்தான் — இப்போது ஒரு வருஷமாக ஆஸ்பத்திரியிலேயே இருக்கிறாள். அரைவாசி மருந்துச் செலவு தர்மமாக ஆஸ்பத்திரியில் அளித்தாலும் தியாகுவின் சிறிய சம்பளத்தால் மீதி அரைவாசியை அவன் இட்டு நிரப்பவே வேண்டியிருந்தது.

வீட்டோடு ஒரு பாட்டி இருந்தாள், சமையல் காரியங்களுக்கும் குழந்தையைக் கவனித்துக்கொள்வதற்கும். பத்மா மிகவும் சூடிகையான குழந்தை. மற்றவர் குளிப்பாட்டி, பின்னிவிடத்தான் வேண்டும் அவளுக்கு; மற்ற ஜோடனைகளைத் தன் சின்னக் கைகளால் தானே செய்து

கொண்டு விடுவான் குழந்தை. நெற்றியில் அழகாய்த் திலகம் கூட இட்டுக் கொண்டு விடுவான்! தந்தைக்குத் தன்னாலான ஒத்தாசைகளை அவள் ஓடிச் செய்வதைப் பார்க்க வேண்டுமே! சட்டைப் பித்தானைத் தேடிப் பிடித்துவந்து தானே போட்டுக் கொடுப்பாள்; காரியாலயத்துக்குக் கடைசி நிமிஷத்தில் புறப்படும்போது சீப்பு இல்லாமல் தவிக்கும் தியாகுவுக்குச் சீப்பு கொண்டு வருவதுமல்லாமல் தானே வாரிவிடுவேன் என்று அடமும் பிடிப்பாள்; பூட்ஸுக்குப் பாலிஷ் போடுவாள்.

இத்தனை சமர்த்துள்ள பத்மா தனது குழந்தைத்தனத்தை வெளியிடும்போதுதான் தியாகுவுக்கு ஆச்சரியமாக இருந்தது. இப்போது செப்பு வேண்டுமென்று சொன்னாள். தேதி இருபது ஆகிறது. இன்னும் பத்து நாட்கள் இருக்கின்றனவே, அவன் ஒருநாள் பணக்காரன் ஆவதற்கு!

தினமும் ஆஸ்பத்திரிக்கு, மனைவிக்குப் பழங்கள் வாங்கிப் போக வேண்டும். உயர்ந்த ரக ஆரஞ்சும் ஆப்பிளும்தான் அவனுடைய கொஞ்சநஞ்ச உயிரையும் தாக்குப் பிடித்து வைத்துக் கொண்டிருந்தன. அவனுக்குக் கொள்ளை ஆசை இருந்தது, இந்த உலகத்தில் நன்றாய் வாழ வேண்டுமென்று; அழகுச் செல்வம் பத்மாவைக் கொஞ்ச கொஞ்சென்று கொஞ்ச வேண்டும் போலிருந்தது. ஆனால் ஆஸ்பத்திரிச் சுவர் தடுத்தது அவனை; காலை வேளைகளில் தகப்பனுடன் வரும் குழந்தைதான் உண்மையில் அவனுடைய உயிரோட்டத்துக்கு உதவிய நிகரற்ற பழ ரஸமாயிருந்தாள்.

பத்மா தூங்கி விட்டாள். விளையாட்டுப் போக்கில் குழந்தைக்குத் தூக்கம் வந்து விடுவதுதான் ஆச்சரியமாக இருக்கிறது. ஆனால் தியாகுவுக்கோ அந்தத் தூக்கம் அவனோடு கண்ணாமூச்சி விளையாட்டு விளையாடியது. அவனால் அதைப் பிடிக்க முடியவில்லை.

படுக்கையில் புரண்டு படுத்தான். நாளை ஒரு நாளுக்குப் பழம் வாங்கத்தான் அவனிடம் பணமிருந்தது. இருந்த ஒரு ரூபாயில் நாலணா ஆஸ்பத்திரிக்குப் போய் வர பஸ் சார்ஜுக்குப் போய் விடும். பன்னிரண்டணாவுக்கு ஒரு ஆப்பிள் பழமும் நாலு சாத்துக்குடிப் பழங்களும் வாங்கினால் அதிகம். ராஜ வைத்தியமாக இருக்கிறது ஏழைகளுக்கு. காப்பாற்றப்பட்டிருக்கும் உயிரைக் கையில் பாதரஸத்தைப் போல் நழுவ விடாதபடி அல்லவா பிடித்துக் கொண்டிருக்க வேண்டியிருக்கிறது?

திரும்பிப் பார்த்தான். பத்மா நிர்மலமாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். அழகழகான வண்ணச் சொப்புகள் அவள் சொப்பனத்தில் ஆடிக் கொண்டிருக்கலாம்; அப்பா வாங்கித் தருவார் என்ற பெருமிதத்தில். இது குழந்தைக்குப் பெரும் சொப்பனாவஸ்தையாகவும் ஆகி விடலாம்...

வார்த்தை தவறக் கூடாது என்று இதயம் கூறியது தியாகுவுக்கு. குழந்தைக்குச் சொப்பு வாங்கித் தந்தே ஆக வேண்டும் என்று முடிவு செய்தான்.

தியாகுவின் மனக் கண் முன்னால் அந்த ஒரு காட்சி புலனாயிற்று.

அவளை-கோமதியை - அன்று 'கைப் பிடித்து' கிருகஸ்தனாகிவிட்டான். அவன் முகத்தில் களை கட்டி விட்டது. 'தான் இன்னொருவருக்குப் பொறுப்பாளியாகி விட்டோம்' என்ற நினைப்பினால் ஏற்பட்ட களையா இது? கல்யாணத்துக்காக மாப்பிள்ளைக்கு விளையாட்டுச் சாமான்கள் வாங்கியிருந்தார்கள்.

மாங்கல்யதாரணம் ஆகி விட்டது. ஆனாலும் எத்தனை எத்தனை சடங்குகளை ஆற்ற வேண்டியிருந்தது அவன்! எதிரே இருந்த அக்கினியைச் சுற்றிலும் பலப் பல பொருள்கள், கல்யாணம் என்றால் பெரிய பெரிய பொறுப்பு என்று அவனுக்கு ஞாபகப்படுத்துவன போல் குவிந்து கிடந்தன.

சற்றுத் தூரத்தில் அந்தச் சிறிய அழகான பெட்டி இருந்தது. பெட்டிக்குள் சில அழகான பொம்மைகள்;. 'மாப்பிள்ளை விளையாட்டுச் சாமான்கள்'!

அதற்கெதிரே உட்கார்ந்து கொண்டு அதையே-அந்தப் பொம்மைகளையே-உற்று நோக்கிக் கொண்டிருந்தது ஒரு குழந்தை. நாலு வயதிருக்கும். பெண் குழந்தை. சின்னப் பாவாடையும் சின்னச் சட்டையுமாக எத்தனை அடக்கமாக உட்கார்ந்து கொண்டு பொம்மைகளைப் பார்த்துக் கொண்டிருந்தது.

இளம் மனைவியின் கரம் பற்றி அக்கினியையும் பெரியோரையும் வலம் வந்து கொண்டிருந்த தியாகு, அந்தக் குழந்தை இருக்குமிடம் வந்ததும் நின்று, தன் இடது கையால் ஒரு பொம்மையைப் பெட்டியிலிருந்து எடுத்து அந்தக் குழந்தையிடம் கொடுத்து, ''இது உனக்கே தான். எடுத்துக் கொண்டு போய் விளையாடு'' என்றான்.

பொம்மையைத் தன் குழந்தையாக நினைத்துக் கொண்டு விட்டாள் அந்தச் சின்னஞ் சிறுமி! ஒரு நாளின் குதூகலம் வந்து விட்டது குழந்தைக்கு. மகிழ்ச்சித் துள்ளலில் ஓடினாள் அங்கிருந்து.

## போர்ஹான்ஸ் டூத்பேஸ்டை பல் வைத்தியர்கள் ஏன் சிபார்சு செய்கிறார்கள் என்பதற்கான விஞ்ஞான முறை காரணங்கள்



# போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட்

1. போர்ஹான்ஸ் ஈறுகளை ஆரோக்கியத்துடன் வைக்கிறது: உங்கள் ஈறுகள் அரிக்கப்பட்டு, ஆரோக்கியமில்லாமல் இருந்தால், உங்கள் பற்கள் விழுந்துவிடும் என்று பல் வைத்தியர்கள் சொல்லுவார்கள். ரத்தம் கசியும் ஈறுகள், வீங்கிய ஈறுகள், புண்ணானதும், கூசும் ஈறுகள் இவைகளுக்கு போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் கொண்டு இலேசாகத் தேய்க்கவேண்டும். அவைகள் உடனேயே கெட்டியான ஆரோக்கிய நிலைக்கு வந்துவிடும். போர்ஹான்ஸ் டூத்பேஸ்டில் மட்டுமே, டாக்டர் ஆர். ஜே. போர்ஹான்ஸ் பக்குவப்படுத்திய பல நோய்களிலிருந்து விசேஷ பாதுகாப்பு அளிக்கும் துவர்ப்பு பொருள்கள் சேர்ந்துள்ளன. இதனால்தான் போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், ஈறுகள் சம்பந்தமான கொடிய நோய்களிலிருந்து சிறந்த பாதுகாப்பு அளிக்கும்.

2. போர்ஹான்ஸ் பல் சொத்தையை அகற்றுகிறது. விசேஷ துவர்ப்பு பொருள் கொண்ட போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் கொண்டு அன்றாடம் பல் விளக்கினால், சொத்தைக்குக் காரணமான கிருமிகள் முற்றிலும் அழிந்துவிடும். இந்தியாவில் சமீபத்தில் நடைபெற்ற போர்ஹான்ஸ் போட்டியில், முற்றிலும் திடமாயும் ஆரோக்கியமாயும் பற்களுள்ள 45-லிருந்து 93-வயதிற்குட்பட்டவர்களும்கூட கலந்து கொண்டனர். தங்களுடைய பற்களின் சிறப்பிற்கு, தாங்கள் அன்றாடம் தவறாமல் போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட உபயோகித்து வருவதே காரணமென, அவர்கள் யாவரும் கூறினர்.

3. போர்ஹான்ஸ் எனாமல் சிதைவைத் தடுக்கிறது: போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், பற்களின் எனாமல் சிதையவிடாமல், பற்களை அவைகளின் இயற்கை நிலையில் வைப்பதுபோல், சுத்திகரிக்கும் குணம் வாய்ந்த வழுவழுப்பான டூத்பேஸ்டாகும். பற்களின் ஆரோக்கியத்தைத் தவறாமல் பேணிவருவதன் மூலம், உங்கள் புன்னகையை ஒளி வீசச் செய்யலாம். போர்ஹான்ஸ் டூத்பேஸ்டை அன்றாடம் தவறாமல் உபயோகியுங்கள்.

4. போர்ஹான்ஸ் கிருமிகளை அழிக்கிறது: போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், வாய் நாற்றத்தை அகற்றி, உங்கள் வாயை முற்றிலும் சுத்தமாக வைக்கும். வாய்க்கு நறுமணமூட்ட, உங்கள் நாக்கும், மேல்வாயும்கூட சுத்தமாக இருக்கவேண்டுமென்பதை ஞாபகத்தில் வையுங்கள். உங்கள் நாக்கின் மீது சிறிது போர்ஹான்ஸ் டூத்பேஸ்டை வைத்து, ஒரு டூத் பிரஷ் அல்லது விரலினால், மிருதுவாய் குழப்பவும். போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் உணவுத் துணுக்குகள் மற்றும் கிருமிகளை விரைவில் அகற்றும்.



ஒரு பல் வைத்தியரால்
தயாரிக்கப்பட்டது

GEOFFREY MANNERS & CO.
PRIVATE LTD.

கோமதி இதைப் பற்றித் தியாகுவிடம் ஒரு நாள் தனிமையில் கேட்ட போது, "உங்களுக்குப் பொம்மை என்றால் ஆசையா? குழந்தை என்றால் ஆசையா?" என்று கேட்டாள்.



இதற்குத் தியாகு, "ஒரு பொம்மைக்கு உயிரூட்ட ஒரு குழந்தையால் தான் முடியும். குழந்தைஇல்லாவிட்டால் பொம்மை ஏது? பொம்மை இல்லா விட்டால் குழந்தை ஏது?" என்றான். இது கோமதிக்குப் புரிந்ததோ புரியவில்லையோ, தன் கணவன் தோள் மேல் சாய்ந்து கொண்டே, "நீங்கள் ஒரு குழந்தையாக இருக்கிறீர்கள்! இந்தக் குழந்தைக்கு இப்போது நான் பொம்மையாக வந்திருக்கிறேன்" என்று கூறினாள்.

தியாகுவும் விடாமல், "ஆமாம். இந்தப் பொம்மைக்கு உயிரூட்டப் போகிறேன்!" என்றான் கோமதியின் கன்னங்களை நிமிண்டியவாறு.

தியாகு பெருமூச்செறிந்துகொண்டே படுக்கையில் திரும்பிப் படுத்தான். நேரே குழந்தை பத்மாவின் முகம்! 'என்ன! அவன் ஊட்டிய இந்த உயிர்-பத்மா-தன் எண்ணத்தில் ஒரு பொம்மைக்கு உயிரூட்டப் பார்க்கிறான்!'

வெகு நேரம் தூங்க முடியாமல் திணறிப் பிறகு விடியற்காலையில் நன்றாகத் தூங்கிப் போனான் தியாகு.

மறு நாள்.

மலைக்கோட்டை வாசல்.

கடையில் சொப்புக் கடல். பத்மாவின் கண்கள் அந்தக் கடலைக் கண்டு பிரமித்தன.

"அத்தனையும் வாங்குவோமா, அப்பா!" என்றாள் தகப்பனரை ஆர்வத்துடன் பார்த்தபடியே.

தியாகு சிரித்தான்; கடைக்காரன் சிரித்தான். பத்மா 'இவன் ஏன் சிரிக்கிறான்?' என்று வேடிக்கையாக ஒரு நிமிஷம் கடைக்காரனைப் பார்த்தாள். கடைக்காரனுடைய சிரிப்பில் அன்பு இருப்பதைக் குழந்தை பத்மா தெரிந்து கொண்டாளோ, என்னவோ!

"அத்தனையும் தருவாயா?" என்று ஆர்வத்தோடு கேட்டாள் அவனை.

"உன் அப்பாவிடம் காசு இருக்கிறதா அத்தனையும் வாங்க?" என்று வேடிக்கையாகச் சிரித்துக் கொண்டே திருப்பிக் கேட்டான் கடைக்காரன்.

தியாகுவுக்கு இந்தச் சம்பாஷணை சுவாரசியப்படவில்லை. 'சட்டுப் புட்' டென்று காரியத்தை முடிக்க எண்ணிக் கடைக்காரனிடம் ஒருரூபாய் நோட்டை நீட்டினான் தியாகு. ஆஸ்பத்திரிக்குப் போக வேறு நேரமாகி விட்டது.

ஓலைப் பெட்டியில் வைத்து மூடப்பட்ட சொப்புகளைப் பத்மாவின் குஞ்சுக் கரங்களில் அளித்தான் கடைக்காரன். மீதம் சில்லறை ஆறணாவை வாங்கிக் கொண்டு பஸ் ஸ்டாண்டை நோக்கி நடக்க ஆரம்பித்தான் தியாகு.

பத்மா கேட்டாள்:

"ஏன், அப்பா! பழம் வாங்கவில்லை அம்மாவுக்கு?"

அவள் அப்படிக் கேட்பாள் என்று தியாகு எதிர்பார்க்கவில்லை. சொப்பு வாங்கிய சந்தோஷத்தில் எல்லாம் அவளுக்கு மறந்துவிடும் என்றே நினைத்தான்.

கொஞ்ச நேரம் பதில் சொல்லாமல் நடந்தான். "பழக்கடையெல்லாம் போய் விட்டதே அப்பா? அம்மாவுக்குப் பழம் வாங்கவில்லை?"

"பழம் வாங்கக் காசில்லை, கண்ணு! பஸ் சார்ஜுக்குத்தான் என் கையில் பணம் இருக்கு."

"அப்படின்னா சொப்பைத் திருப்பிக் கொடுத்துவிடு அப்பா! நான் அப்புறம் உனக்குச் சம்பளம் வந்ததும் வாங்கிக் கொள்கிறேன். அம்மாவுக்குப் பழம் வாங்காமல் போகக் கூடாது, அப்பா!"

தியாகுவுக்குப் பொறுமை எல்லை மீறிக் கொண்டிருந்தது.

"திருப்பிக் கொடுத்தால் கடைக்காரன் வாங்கிக் கொள்வானா, பத்மா? நீ ரொம்பவும் படுத்துகிறாய்!"

"ஊஹூம், மாட்டேன்!"

"ஏன் சொப்பு வாங்கித் தா என்று உயிரை வாங்கினாய்?" அவன் உயிரை வாங்கவா குழந்தை சொப்பு கேட்டது? உயிரளித்து அந்தக் கற்பனை இன்பத்தில் தான் மகிழ அல்லவா குழந்தை அவனிடம் செப்பு கேட்டது!

"ஸார்!" பின்னால் ஒரு குரல்.

கடைக்காரன் நின்றிருந்தான். அவன் கையில் ஒரு சிறிய செப்பு. அதிலும் ஒரு அம்மியின் வடிவத்திலிருந்த மரச் செப்பு இருந்தது.

அதைப் பத்மாவிடம் கொடுத்துக் கொண்டே அவன், "இந்தா, கண்ணு! இந்த அம்மியைக் கொடுக்க மறந்து விட்டேன். குழவி மட்டும் கொடுத்திருக்கிறேன்; அம்மியைத் தராவிட்டால் நீ எப்படித் துவையல் அரைத்துச் சமையல் செய்ய முடியும்?" என்றான். அவன் வார்த்தையில் எத்தனை பரிவு! குழந்தையிடம் ஒரு குழந்தையைப் போல அல்லவா பேசி நெகிழ்ந்தான் அவன்!

பத்மா திடீரென்று செப்புகள் உள்ள ஓலைப் பெட்டியையே கடைக்காரனிடம் நீட்டி, "இதைத் திரும்ப வாங்கிக்கோ எங்கம்மாவுக்குப்பழம்வாங்கிக் கொண்டு போகக் காசில்லாமல் இதை வாங்கிவிட்டோம். ஒண்ணாந் தேதி அப்பாவுக்குச் சம்பளம் வந்து விடும். அப்போ வந்து வாங்கிக் கொள்கிறோம்" என்றாள்.

கடைக்காரன் ஆச்சரியத்தோடு தியாகுவை நிமிர்ந்து பார்த்தான். தியாகு விஷயத்தைஇரண்டொரு வார்த்தைகளில் விளக்கி, "பழம் வாங்கிப் போகாவிட்டால் பரவாயில்லை. அது, குழந்தை ஏதாவது சொல்லும். வாங்கின பொருளை உங்களிடம் எப்படித் திருப்பிக் கொடுக்கிறது? சரி, வா பத்மா! நேரமாகிறது, போகலாம்!" என்றான்.

கடைக்காரன், "ஸார்! கொஞ்சம் நில்லுங்க. செப்புக்குரிய காசை நீங்கள் ஒண்ணாந்தேதி எனக்குத் தரலாம். இந்தப் பாப்பா துட்டைக் கொண்டு வந்து எனக்குக் கொடுத்துவிடும் ஸார்... இந்தாங்க நீங்க கொடுத்த ரூபாய்! பழம் வாங்கிக்கிட்டுப் போங்க. கண்ணு! செப்பை நீயே வைச்சுக்க!" என்றான்.

நோட்டைத் தியாகுவின் கையில் திணித்தான் கடைக்காரன்.

"இப்படிச் சொல்வது நல்லாயில்லே, அப்பா!" என்றான் தியாகு.

"பரவாயில்லே, சார்! **எனக்குக் குழந்தை இல்லே. அதனால் நான் ஒரு செப்புக் கடையே வைத்திருக்கிறேன்.** என் கடைக்கு உலகத்திலுள்ள குழந்தைகளெல்லாரும் வரணும். அவைகளை நான் பார்க்கணும்..." என்று சொல்லிக்கொண்டே போய் விட்டான் கடைக்காரன். உணர்ச்சி தொண்டையை அடைத்திருந்தது அவனுக்கு.

பத்மாவுடன் தியாகு பழக்கடையை நோக்கி நடந்தான். 'இம்மாதிரி சந்தர்ப்பங்கள் வராவிட்டால் வாழ்க்கையில் மனிதன் வெறும் பொம்மைதான்' என்று தோன்றியது அவனுக்கு.

ஆஸ்பத்திரியில் தாயாருடன் தன் செப்புகளை வைத்துக் கொண்டு விளையாடினாள் பத்மா. கோமதிக்கு அங்கேயே மானசத்தில் சமைத்துப் போட்டாள், தன் செப்புகளின் மூலம்!

தியாகு பத்மாவுடன் வீட்டுக்குப் புறப்பட்டபோது கோமதி, குழந்தையின் மிருதுவான கன்னத்தில் மெதுவாகமுத்தமிட்டாள். "உன்னால் நான் பிழைத்து விட்டேன், கண்ணே!" என்றாள்.

வீடு திரும்பிக் கொண்டிருந்தபோது மங்கிக்கொட்டைப் பக்கம் உச்சிப் பிள்ளையார் உறைந்திருந்த திக்கை நோக்கிக் கொண்டே, "இதெல்லாம் உன் உயிர் விளையாட்டுத்தான்" என்று நினைத்து மனத்துள் புல்லரித்தான், தியாகு.



## என் குடும்பத்துக்கு இனி என்னால் கஷ்டமே இல்லை —
## போர்ன்–விடாவுக்கு எனது நன்றி



சென்ற வருஷம் நான் ஒரு அபாய விபத்துக்குள்ளாகி வெகு நாட்கள் ஆஸ்பத்திரியில் இருந்தேன். நான் வீட்டுக்கு திரும்பி வந்தும் கூட எனது உடம்பு சீக்கிரத்தில் சௌகர்யமாகவில்லை, குடும்பத்தில் என்னால் நேர்ந்த கஷ்டத்தை எண்ணி நான் கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். இப்படியிருக்க தினமும் இரவில் படுக்கப்போகுமுன் போர்ன்-விடா சாப்பிடும்படி எனது டாக்டர் சொன்னார். சீக்கிரத்திலேயே முன்னைக்காட்டிலும் அதிக சக்தியையும் பலத்தையும் அடையப் பெற்றேன். போர்ன்-விடா எனக்கு புத்துயிர் அளித்தது. இப்பொழுது எனது குடும்பத்தினர் யாவரும் சக்திக்காகவும், வலிமைக்காகவும் தினந்தோறும் இரவில் போர்ன்-விடாவைச் சாப்பிடுகிறோம்.

*For Strength and Vigour.*

**BOURN-VITA**

MADE BY *Cadbury's*






# பண்பும் பாசமும்

அழகிரி மேட்டு வளையைப் பார்த்துக் கொண்டு வெகு நேரம் உட்கார்ந்திருந்தார். அவரது மனம் சிந்தனைச் சுழலில் சிக்கித் தவித்தது. நீண்ட நேரம் அவரது கையிலிருந்த கடிதம், கடைசியாக நழுவிக் கீழே விழுந்ததைக் கூட அவர் கவனிக்கவில்லை. அது அவரது உணர்ச்சியற்ற பரிதாப நிலையைக் காட்டியது.

கடுமையான புயலுக்குப் பின் அழகிரியின் வாழ்க்கையில் அமைதி ஏற்பட்டது. அந்தப் புயல் சேதம் விளைவிக்காமல் அவரை விடவில்லை. பல கஷ்ட நஷ்டங்களை அடைந்த பின்பே அவர் தமது வாழ்வில் அமைதி காண முடிந்தது.

ஆனால், பல ஆண்டுகளுக்குப் பிறகு, இப்போது மீண்டும் வீசத் தொடங்கிய புயல் அழகிரியைக் கவலைக் கடலில் ஆழ்த்தி விட்டது. ஏற்கனவே, கடைசியாக அவரது வாழ்க்கையில் ஏற்பட்ட சிக்கல் அவரது அருமை மனைவியின் உயிரைப் பலி கொண்டது. இப்போது அழகிரி தமது ஏக புதல்வனையும் உயிருடன் இழக்கும்படி நேர்ந்து விடுமோ என்ற வேதனையால் தவித்து உருகினார்.

நேமிநாதனை 'நேமி' என்று அவர் செல்வமாக அழைக்கும்போது அவரது அன்பின் ஆழத்தை, எவரும் எளிதில் தெரிந்து கொள்ளலாம். நேமியும் 'அப்பா!' 'அப்பா!' என்று தந்தையின் மீது உயிரையே வைத்திருந்தான்.

ஆனால், அன்று நடந்த சம்பவம், தந்தைக்கும் மகனுக்கும் இடையே சில விநாடிகளில் பரஸ்பரமிருந்த பாசத்தை நாசம் செய்து, பெரும் பிளவை உண்டு பண்ணி விட்டது.

நேமி, தனக்கு அத்தகைய ஒரு கடிதம் எழுதும்படியான காலம் வரும் என்று அழகிரி சில தினங்களுக்கு முன் கனவிலும் கருதியிருக்க முடியாது. ஆனால், இன்றோ...! கடிதத்தில் கையெழுத்திட்டிருப்பது உண்மையில் நேமிதானா என்று



அழகிரி கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தார். ஆம், நேமி தான்! சந்தேகமில்லை. வேதனையால் அழகிரியின் உள்ளம் துடித்தது. அவரது கண்கள் கலங்கின.

விவரம் தெரிந்த, கல்லூரியில் படிக்கும் மகன், "என் அருமை அம்மாவுக்கு நீங்கள் இழைத்துள்ள துரோகத்தை நினைத்தால், என் நெஞ்சு வெடித்து விடும்போல் இருக்கிறது. இனி உங்கள் முகத்திலும் விழிக்க என் மனம் விரும்பவில்லை..." என்று எழுதி யிருந்தால், தந்தையின் இருதயத்துக்குக் குளுமையாகவா இருக்கும்!



•　　•　　•

நேமி குழந்தைப் பருவத்தில் தாயை இழந்தவன். அழகிரியே தாயும் தந்தையுமாக இருந்து அவனைக் கண்ணின் மணியாக வளர்த்தார். அதன் காரணமாக, பிடிவாத குணமும் அவனுக்குப் படிந்திருந்தது. இதை அழகிரி நன்கு அறிவார். அதனால்தான் அவர் மனம் கலங்கியது. 'உங்கள் முகத்தில் விழிக்க விரும்பவில்லை" என்று நேமி எழுதி யிருப்பது திடீரென்று ஏற்பட்ட ஆத்திரத்தின் விளைவு அல்ல என்பதை அவர் உணர்ந்தார். அந்தப்






பிள்ளை தன் சபதத்தை நிறைவேற்றத் தயங்க மாட்டான் என்பதை அவர் எண்ணியபோது இனந் தெரியாத ஒருவித அந்தகாரம் அவரைச் சூழ்ந்து கொண்டது. உடல், பொருள், ஆவியைக் காட்டிலும் அதிகமாக நேசித்த சொந்த மகன் தன்னைக் கைவிட எண்ணியதை அவரால் சகிக்க முடியவில்லை.

•　　•　　•

நேமிநாதன் ஊருக்கு வந்திருந்தபோது தன் மேஜையின் மீது வைர மோதிரத்தை வைத்திருந்தான். அவன் ஸ்நானம் செய்து விட்டு வந்து பார்த்தபோது, மோதிரம் மாயமாய் மறைந்து விட்டது. வேலாயியைத் தவிர, வேறு எவரும் அவன் அறைக்குள் செல்லவில்லை என்பது அவனுக்குத் தெரியும். அறையைச் சுத்தம் செய்வதற்காக அவள்தான் உள்ளே சென்றிருக்க

வேண்டும். எனவே, அது காணாமற் போனதற்கு வேலாயிதான் பொறுப்பாளி. இவ் விஷயத்தில் அவனுக்கு எள்ளளவும் சந்தேகமில்லை.

அன்று மாலை அவன் வெளியே போய்த் திரும்பி வந்தபோது, காணாமற்போன மோதிரம் மேஜையின்மீது வைக்கப்பட்டிருந்தது. அது எப்படி அங்கு வந்தது என்பது அவனுக்குத் தெரியாது என்று அவன் தந்தை எண்ணினார்.

ஆனால், அந்த மர்மம் அவனுக்கா தெரியாது. தன் தந்தைக்கும் வேலாயிக்கும் நடந்த சம்பாஷணையைக் கேட்ட பிறகுதான் அவன் வெளியே போனான். அந்தச் சம்பாஷணை ரகசியமாக இருக்க வேண்டும் என்று 'நேமி' வீட்டில் இல்லாத சமயம் பார்த்து அழகிரி வேலாயியை விசாரித்தார். அவர் இருந்த பரபரப்பான நிலையில் 'நேமி' வீட்டில் இருந்ததை அவர் கவனிக்கவில்லை.

"வேலாயி! நீ இப்படிச் செய்வாய் என்று நான் நினைக்கவே இல்லை. 'நேமி'யின் மோதிரம் தன்னை விட்டுப் போக இடமில்லை. என்ன சொல்கிறாய்?" என்று கேட்டார் அழகிரி.

வேலாயி பதில் எதுவும் கூறவில்லை. விம்மி விம்மி அழுதாள். அவளது அழுகை அவள்தான் குற்றவாளி என்பதை நிரூபித்து விட்டது.

"சரி! நடந்தது நடந்து விட்டது. ஏதோ கஷ்டத்தினால் அப்படிச் செய்து விட்டாய். குழந்தைக்குத் தெரியாமல் மோதிரத்தை மறுபடியும் இருந்த இடத்தில் கொண்டு போய் வைத்து விடு."

இவ்விதம் அழகிரி கூறியதுதான் தாமதம், வேலாயி வீட்டுக்கு ஓடினாள். மோதிரத்தைக் கொண்டு வந்து முன் போல் நேமியின் மேஜையின் மீது வைத்து விட்டாள்.

"எஜமான்! என்னை மன்னித்து விடுங்கள். ஏதோ புத்தி கெட்டு அப்படிச் செய்து விட்டேன்" என்று அழுது கொண்டே அழகிரியின் காலில் விழுந்தாள் வேலாயி.

மறைந்திருந்து தந்தையின் நடவடிக்கைகளைக் கவனிக்க நேமி விரும்பவில்லை. எனினும், அவன் விரும்பாமலேயே, சந்தர்ப்பவசத்தினால் அவன் அவ்வாறு கவனிக்கும்படியாகி விட்டது.

இதுவரை நிகழ்ந்த சம்பவங்கள் இத்துடன் நின்றிருந்தால், நேமிக்குத் தன் தந்தையின்மீது வெறுப்பு ஏற்பட்டிராது.

காலில் விழுந்த வேலாயியை அழகிரி எழுந்திருக்கும்படி கூறினார். அவளிடம் தான் அவருக்கு என்ன பரிவு!

"வேலாயி! இனி இம்மாதிரியான காரியம் எதுவும் செய்யாதே...இதோ இந்தப் பையில் இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் தொகை இருக்கிறது. இதை வைத்துக் கொள். நான் இதை உன்னிடம் கொடுத்த விஷயம் என் குழந்தைக்குக் கூடத் தெரியக் கூடாது. ரகசியமாக இருக்க வேண்டும்."

வேலாயிக்கு ஒன்றுமே புரியவில்லை. 'எஜமான்! நீங்கள் தங்கம்தான்., திருட்டு நாயை வெளியே துரத்தாமல் திருடியதற்குப் பரிசாக இந்தப் பெருந் தொகையையும் கொடுத்திருக்கிறீர்கள்" என்று நாத்தழுதழுக்கக் கூறினாள்.

அழகிரியின் இந்தச் செய்கைதான் நேமியைத் திடுக்கிடச் செய்து விட்டது. வீட்டுப் பொருளைத் திருடிய ஒரு வேலைக்காரிக்கு இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் பரிசு வேறு!

வேலாயிக்கும் தன் தந்தைக்கும் ஏதோ விபரீத உறவு இருக்க வேண்டும் என்றும் அவன் முடிவு செய்தான். அதனால் அவன் மனம் துடியாய்த் துடித்தது. தன் உயிருக்கு ஒப்பாக எண்ணிய தந்தையின் வாழ்க்கை மாசு படர்ந்தது என்பதை அறிந்தபோது, அவன் பைத்தியம் பிடித்தவன்போல் ஆனான். தன் அருமைத் தாய்க்குத் துரோகமான அந்தக் காரியத்தை அவனால் சகிக்க முடியவில்லை. தான் நேரில் கண்ட கோலத்தை எண்ணிப் பார்த்தபோது, அவன் உடலெல்லாம் பற்றி எரிந்தது.

அதன் விளைவு விபரீதமாகியது. அவன் தந்தையிடம் சொல்லிக் கொள்ளாமலேயே சென்னைக்குக் கிளம்பி விட்டான். சென்னையிலிருந்து தன் உள்ளத் துடிப்பை வடித்துத் தன் தந்தையின் இருதயத்தைத் தைக்கும்படி பாணம் போல் ஒரு கடிதம் எழுதி விட்டான்.

* * *

தனயனின் கடிதத்தைக் கண்ட தந்தையின் மனத்தைப் போல், நேமியின் மனமும் அமைதி யிழந்து தத்தளித்துக் கொண்டிருந்தது. தான் கண்டதெல்லாம் வெறும் கனவாக இருக்கக் கூடாதா என்று ஏங்கினான். அவனுக்கு எதிலும் மனம் நாட்டம் கொள்ளவில்லை.

திடீரென்று அவனுக்குத் துரைசாமியின் ஞாபகம் வந்தது. துரைசாமி அவனது தந்தையின் அந்தரங்க நண்பர். இருவரும் ஒரே காரியாலயத்தில் வேலை செய்து ஒரே வருஷத்தில் உதவிச் சம்பளம் பெற்று ஓய்வு எடுத்துக்கொண்டவர்கள். துரைசாமிக்கு அழகிரியிடமோ, அழகிரிக்குத் துரைசாமியிடமோ ரகசியம் என்று எதுவும் கிடையாது.

தன் மனத்தை அழுத்திக் கொண்டிருக்கும் சுமையைக் குறைக்க, நிகழ்ந்த சம்பவத்தை யாரிடமாவது சொல்லிக்

கூற வேண்டும் போல் இருந்தது நேமிக்கு. தன் தந்தை சம்பந்தமான அந்த வெட்கக்கேட்டைத் துரைசாமியைத் தவிர வேறு யாரிடம் சொல்வது? வேறு எவரிடமாவது கூறினால் சிரிப்பார்கள்.

இனி அவர் திருந்தினால் என்ன? திருந்தாவிட்டால் என்ன? தனக்கும் அவருக்கும் முன்பிருந்த பாசம் இனி ஏற்படுவது கடினம்.

நேமியைப் பார்த்ததும் துரைசாமி திடுக்கிட்டு விட்டார். நேமியின் முகம் வெளிறிப் போயிருந்தது.

"என்ன அப்பா நேமி, உடம்பு சரியில்லையா?" என்று மிகப் பரிவுடன் கேட்டார் துரைசாமி. மேலும் அவர் கேட்ட கேள்விகளுக்குப் பதில் கூற முடியாமல் திணறினான். கடைசியாக, தட்டுத் தடுமாறி, தன் மோதிரம் கெட்டுப் போனது முதல் தன் தந்தை வேலாயிக்குச் சுளைசுளையாக இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் கொடுத்தது வரையில் நிகழ்ந்த சம்பவங்களைக் கூறினான்.

துரைசாமி எல்லாவற்றையும் அமைதியாகக் கேட்டார்.

"நேமி! மனத்தை வீணாகக் குழப்பிக் கொள்ளாதே! நான் கூறுவதையெல்லாம் கவனமாகக் கேள்!" என்று ஆரம்பித்தார்.

"உன் பேச்சிலிருந்து உன் தந்தையின் பூர்வ விருத்தாந்தங்களை நீ அறிந்து கொள்ளவில்லை என்பது நன்கு தெரிகிறது. நீ சிறு பிள்ளை அல்ல. கல்லூரிப் படிப்பை முடித்துக் கொண்டு வாழ்க்கைப் பாதையில் இறங்கும் காலம் உனக்கு அதிக தூரத்தில் இல்லை. நல்லது கெட்டதைப் பாகுபடுத்தி அறியும் வயது உனக்கு வந்து விட்டது" என்ற பூர்வ பீடிகையுடன் துரைசாமி ஆரம்பித்தார்.

"உன் தந்தையும் நானும் ஓரே காரியாலயத்தில் வேலை செய்தவர்கள் என்பது உனக்குத் தெரியும். இருவரும் அக்காலத்தில் இணைபிரியாமல் இருப்போம். அப்படியிருந்தும் ஏதோ விதி வசத்தால் உன் தந்தையைக் குதிரைப் பந்தயப் பைத்தியம் ஆட்கொண்டு விட்டது. சம்பளத்தில் பெரும் பகுதி குதிரைப் பந்தயத்தில் கரைய ஆரம்பித்தது. உன் தாயார் ஓர் உத்தமி. எவ்வளவோ நயமாக உன் தந்தையைத் தடுத்துப் பார்த்தாள். துரதிருஷ்டவசமாக அவளது முயற்சி வெற்றி பெறவில்லை. அவ்விஷயமாக என் முயற்சிகளும் வீணாயின. மற்ற எந்த விஷயத்திலும் நான் கூறுவதை ஆட்சேபணை

யின்றிக் கேட்கும் உன் தந்தையின் மனத்தை, குதிரைப் பந்தய மோகத்திலிருந்து மாத்திரம் விடுவிக்க என்னுல் முடியவில்லை.

"அதன் விளைவு என்னவெனில், நாளடைவில் அவரது குதிரைப் பந்தய வெறிக்கு உன் தாயாரின் நகைகளும் இரையாயின. இறுதியாக, அவர் காரியாலயத்துப் பொக்கிஷத்திலும் கை வைத்து விட்டார்."

"அப்படியா?" என்றுசீறினுன் பேரி.

"பதற்றப்படாதே, சொல்லுவதை அமைதியாக முழுதும் கேள்" என்று கூறி, துரைசாமி மேலும் தொடர்ந்தார்.



கல்கத்தாவில் ஓரியன்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் என்னும் தொழில் ஸ்தாபனத்தில் நவீன முறையில் பெருவாரியாக உற்பத்தி செய்யப்படும் பிரசித்தி பெற்ற "ஓரியன்ட்" மின்விசிறிகளுக்குச் சென்னைக்கும், கேரளாவுக்கும் பூரண விநியோகஸ்தர்களான ஓரியன்ட் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸாரின் கிளை ஆபீஸ் சமீபத்தில் சென்னையில் லிங்கிச் செட்டித் தெருவிலுள்ள ஆந்திரா பாங்க் கட்டடத்தில் ஆரம்பிக்கப்பட்டது. கிளை ஆபீஸின் ஆரம்பத்தின்போது நடத்திய விருந்துபசாரத்தில் திரு சங்கர் மூனாவும் அவரது சகோதரர் திரு காளப்பிரஸாத் மூனாவும் விருந்தினர்களை வரவேற்று உபசரித்தனர். படத்தில் இக்காரியாலயத்தைச் சேர்ந்த விளம்பர அதிகாரி திரு கபூர் பத்திரிகையாளர்களுடன் காணப்படுகிறார்.

"அந்தத் தவறை எவ்வளவு காலம் மறைத்து வைக்கமுடியும்? ஒரு நாள் அது வெளியாகி, காரியாலயம் அல்லோலகல்லோலப்பட்டது. துரைசாமி சிறைத் தண்டனை அடையும்படி நேரிடுமே என்று நாங்கள் பதறினேம். ஏற்கெனவே, நோய்வாய்ப்பட்டிருந்த உன் தாயார் அவ்விஷயம் தெரிந்ததும் படுத்த படுக்கையாகி விட்டாள்.

"உன் தந்தையின் அதிர்ஷ்டவசமாக அப்போது ராஸ் என்ற துரை எங்கள் காரியாலயத்தின் டைரக்டராக இருந்தார். அவர் இரக்க சித்தம் உள்ளவர். குதிரைப் பந்தய வெறி சிலரை எப்படியெல்லாம் ஆட்டி வைத்துள்ளது என்பதை நேரில் அறிந்தவர். எனவே, காரியாலயப் பொக்கிஷத்திலிருந்து குறைந்த ஐயாயிரம் ரூபாயையும் பத்து நாட்களுக்குள் திருப்பிக் கொடுத்துவிட்டால், அழகிரியின்மீது மேற்கொண்டு நடவடிக்கை எடுப்பதில்லை என்று அவர் உறுதி கூறினர்.

"எங்களுக்குப் போன உயிர் திரும்பி வந்தது. எனினும் ஐயாயிரம் ரூபாய்க்கு எங்கு போவது? எங்களுக்கு அப்போது மாதச் சம்பளத்தைக் கொண்டு காலம் தள்ளுவதே பிரம்மப் பிரயத்தனமாக இருந்தது. கடைசியாக மிகக் கஷ்டப்பட்டு, அங்கும் இங்குமாக வசூல் செய்து இரண்டாயிரம் ரூபாய் சேகரித்தோம். துரை விதித்த கெடு நெருங்கிக் கொண்டிருந்தது. மீதி மூவாயிரத்துக்கு எங்கு போவது? எங்களில் எவரும் அவ்வளவு தொகை புரட்டக்கூடிய நிலையில் இல்லை. எல்லோரும் வேதனையில் ஆழ்ந்து குழம்பிக்கொண்டிருந்தோம்.

"இந்தச் சமயத்தில்தான் ஒருவாரம் ரஜாவில் சென்றிருந்த ஆபீஸ் பியூன் வெங்கடாசலம் திரும்பி வந்தான். அவன் வெறும் கையுடன் திரும்பவில்லை. மூவாயிரம் ரூபாய் தொகையுடன் திரும்பி வந்தான். அதைக் கண்டதும் எங்களுக்கு ஒருபுறம் திகைப்பும் மற்றொருபுறம் வெட்கமும் ஏற்பட்டன. அவனுக்கு உன் தந்தைமீதும் தாயார் மீதும் மிகுந்த மதிப்பும் அன்பும் உண்டு. அவன் அழகிரி வீட்டுக்குப் போகும் போதெல்லாம் உன் தாயார் அவனுக்குப் பரிவுடன் ஏதாவது தின்னக் கொடுப்பது வழக்கமாம். அந்தப் பேதை, அந்தச் சிறு உதவியை மனத்தில் வைத்துக் கொண்டு எங்களால் சாதிக்க முடியாத பெருங் காரியத்தைச் சாதித்துவிட்டான்!

"நெருக்கடியான நிலைமையை உணர்ந்த வெங்கடாசலம் ஊருக்குச் சென்று தனக்குச் சொந்தமான நன்செய் புஞ்சைகளையும், வீட்டையும் விற்றுன். கொஞ்சம்

கடனும் வாங்கினான். தான் கஷ்டப்பட்டுச் சேகரித்து வைத்திருந்த தொகையையும் சேர்த்து அவன் உன் தந்தைக்கு உதவினான்.

"வெங்கடாசலத்தின் உதவியால் உன் தந்தை பேராபத்திலிருந்து விடுபட்டார். ராஸ் துரையின் தயவால் அவருக்குப் பிறகு பதவி உயர்வும் சம்பள உயர்வும் கிடைத்தன. எனினும், அந்த அதிர்ச்சியிலிருந்து உன் தாயார் மீளவில்லை. சிறு குழந்தையான உன்னை விட்டு விட்டுக் கண்ணை மூடிவிட்டாள்.

"தான் செய்த தவறுக்கு உன் தந்தை பிறகு பூரணமாகப் பிராயச்சித்தம் செய்து கொண்டுவிட்டார். அவருக்கு அப்போது வயது முப்பதுதான். அதன் பிறகு அவருக்கு எத்தனையோ பேர்கள் பெருந் தொகையுடன் பெண் கொடுக்க வந்தனர். அவர், தான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை என்று கூறி, அந்தச் சபதத்தை நிறைவேற்றியும் விட்டார். அந்தச் சம்பவத்துக்குப் பின் அவர் குதிரைப் பந்தயத்தை மனத்தால் கூட நினைத்தவர் அல்ல. மனிதன் தவறு செய்வது இயற்கை. பிறகு திருந்திப் பரிசுத்த வாழ்க்கை நடத்துவோர் மிகவும் உயர்ந்தவர்களாகி விடுகிறார்கள் அல்லவா? அப்படிப்பட்ட தந்தையின்மீது நீ வெறுப்புக் கொள்வது எவ்வளவு தவறு என்பதை இப்போதாவது உணர்ந்து கொண்டாயா?"

இவ்வாறு கூறி முடித்த துரைசாமியை நேமி சிறிது நேரம் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"வேலாயிக்கு அவர் பெருந்தொகை கொடுத்தது உயர்ந்த செய்கை என்று சொல்லுகிறீர்களா?" என்று கேட்டான் நேமி.

"ஆமாம்! பாக்கியுள்ள விவரங்களைக் கூற மறந்து விட்டேனே. நான் கூறிய சம்பவம் நிகழ்ந்த சில மாதங்களுக்குப் பிறகு அழகிரி சம்பளத்தில் கஷ்டப்பட்டு மீதம் பிடித்து வெங்கடாசலத்தினிடம் ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் கொடுத்தார். பிறகு வெங்கடாசலம் திடீரென்று இறந்தபோது அழகிரி தன் சொந்தச் சகோதரன் இறந்தது போல் துடிதுடித்தார்.

"வெங்கடாசலத்தின் ஒரே மகளான வேலாயி உங்கள் ஊரில் அவள் மாமனிடம் வளர்ந்து வந்தாள். ஏதோ காரணத்தால் இது வரையில் மீதித் தொகையை அழகிரி கொடுக்காமல், இப்போது கொடுத்திருக்க வேண்டும். அதை நீ தவறாகப் புரிந்து கொண்டு மனத்தை வீணாக அலட்டிக் கொண்டிருக்கிறாய்" என்றார் துரைசாமி.

தன் தந்தையின் செய்கை இப்போது தான் நேமிக்குச் சிறிதுசிறிதாகப் புரியத் தொடங்கியது. அவன் மனம் தெளிவடைந்தது. வீட்டுக்குச் சென்றபோது, அங்கு அவனுக்குத் தன் தந்தையிடமிருந்து வந்த கடிதம் ஒன்று காத்துக் கொண்டிருந்தது.

"...சிறு வயதில் என்னை ஒரு பேராபத்திலிருந்து மீட்பதற்காகச் சீட்டு, நோட்டு எதுவும் இல்லாமல் வெங்கடாசலம் என்ற ஏழை மூவாயிரம் ரூபாய் கொடுத்தான். அதில் ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் கொடுத்து விட்டேன். அன்றொரு நாள் வேலாயி தன் கணவனுக்கு உடல் நலம் மோசமாக இருப்பதால் மருந்து வாங்கப் பத்து ரூபாய் கேட்டாள். நான் எங்கேயோ ஞாபகமாக இருந்ததால் கொடுக்க மறுத்து விட்டேன். அதனால்தான் அவள் உன் மோதிரத்தை எடுத்துச் செல்ல நேர்ந்தது. அவள் திருடிவிட்டாள் என்று கூற என் நாக்கு கூசுகிறது. கணவன் குணமடைய வேண்டும் என்பதற்காக அவள் அவ்விதம் செய்யும்படி நேர்ந்து விட்டது. நிர்ப்பந்தமான நிலையில் மனிதன் தன் இயற்கைக் குணத்துக்கு மாறாகவும் நடந்துவிட நேருகிறது. அவள் கேட்ட அந்த அற்பத்தொகையை நான் கொடுத்திருந்தால், அவள் உன் மோதிரத்தை எடுத்துச் சென்றிருக்க மாட்டாள். அவள் தகப்பன் வெங்கடாசலத்துக்கு நான் கொடுக்க வேண்டிய பாக்கியை அன்று நான் வேலாயியிடம் கொடுத்தேன். அதை நீ தவறாக அர்த்தம் செய்து கொண்டு விட்டாய். அந்தத் தொகையை என்னிடம் பல வருஷங்களாக வைத்துக் கொண்டிருந்ததற்காக ஆயிரம் ரூபாய் வட்டியும் கொடுக்கத் தீர்மானித்துள்ளேன்... நீ என்னை வெறுப்பதாக உன் கடிதத்தில் எழுதியிருக்கிறாய். நீ என்னை எவ்வளவு வெறுத்தாலும் நான் உன்னை வெறுக்க முடியாதடா, கண்ணே!..."

இதுதான் அழகிரி எழுதிய கடிதத்தின் சாரமாகும்.

இதை முற்றிலும் படித்த நேமி வெகு நேரம்செயலற்று உட்கார்ந்துவிட்டான்.

அவ்வளவு உயர்ந்த குணமும் நற்பண்புகளும் வாய்ந்த தந்தையின் மனம் நோகும்படி கடிதம் எழுதிவிட்டோமே என்று அவன் மனம் துடியாய்த் துடித்தது.

"அப்பா!" என்று வாய் விட்டு அலறினான் நேமி. தந்தையின் பாதங்களில் விழுந்து அவரிடம் மன்னிப்பு கேட்டுக் கொள்வதற்காக அன்றிரவே மெயில் வண்டியில் ஊருக்குப் புறப்பட்டான்.

**Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10**
**Managing Editor: T. Sadasivam.**

# பிரகாசம்

**—அத்தகைய பரிசுத்தம் அளிப்பது விம் ஒன்றுதான்!**

சமையல் பாத்திரங்களைத் துலக்குவதற்கு விம் உபயோகித்துப் பாருங்கள் — அழுக்கும் எண்ணெய்ப் பிசுக்கும் மாயமாய் மறைந்து நீங்கியெல்லாம் பளபளப்பு மிளிரக் காண்பீர்கள்! சுகாதார முறையில் தயாரிக்கப்பட்டுள்ள பவுடராதலால் விம், பாத்திரங்களுக்குப் பாதுகாப்பானது. உங்கள் வீட்டுத் தரை, ஸ்நான அறை, பீங்கான் சாமான்கள் எல்லாவற்றையும் ஒளிமயமாக்குவது விம். விம் இருக்கும் வீடே ஒளிமங்காத வீடு!




**உங்கள் வீட்டுக்கு**

**வேண்டியது விம்**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# உத்தமமானவள் பெண்!
# உதாசீனம் செய்யப்பட்டாலோ — கண்ணகி!



ஒரு குடும்பப் பெண்மணிதான் . . . எனினும் அவள் விருப்பத்திற்கு நாங்கள் விசேஷ முக்கியத்துவம் அளிக்கிறோம். அவளுடைய கொள்கைகள், மனோபாவம், யோசனைகள் முதலியவற்றை நாங்கள் ஒருக்காலும் புறக்கணிப்பதில்லை — வீட்டின் தேவைகளை நன்கு உணர்ந்தவள் அவளன்றி வேறு யார்? அவளுக்குத் தேவைப்படுவது என்ன என்பதை உள்ளபடி உணரும் பொருட்டு நாடெங்கும் விற்பனைத் துறை ஆராய்ச்சிகள் நிகழ்த்தி வருகிறோம். பார்க்கப்போனால், பெரும்பாலான ஹிந்துஸ்தான் லீவர் சரக்குகளின் தரம் எவ்வளவு உயர்வாக இருக்கவேண்டும் என்பதை நிர்ணயிப்பவள் குடும்பப் பெண்மணிதான்.

சரக்குகளின் மேன்மை மாறாமலிருக்கும் பொருட்டு, உற்பத்தியின் ஒவ்வொரு கட்டத்திலும் அவற்றின் தராதரத்தைப் பரிசோதித்து சீர்திருத்துகிறோம். ஆகவே உங்கள் தேவைக்கேற்ப, தரத்திலுயர்ந்த சரக்குகளை உங்கள் வீட்டிற்குக் கிடைக்கும்படி செய்து வருகிறோம்.



**குடும்பந்தோறும் தழைத்தோங்க ஊழியம் புரிவது ஹிந்துஸ்தான் லீவர்**

HLL. 10-60 TM